# மின்தமிழ்மேடை



"இணையம்வழியே தொடரும் நம் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்"





**தமிழ் மரபு அறக்கட்டளை - பன்னாட்டு அமைப்பு**

***http://www.tamilheritage.org/***

**வெளியிடும் காலாண்டு மின்னிதழ்**

*மின்தமிழ்மேடை - காட்சி 21*

*ஏப்ரல் – 2020*


***21***

# மின்தமிழ்மேடை

***காட்சி: 21***

---

***ஏப்ரல்  - 2020***

## “இணையம்வழியே தொடரும் நம் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்”



*முன்னட்டைப் படம்: இணையம்வழியே தொடரும் வரலாற்றுத் தேடலுக்கான பயணம் என்ற நோக்கத்தில், தமிழ் மரபு அறக்கட்டளை 2020 ஆண்டின் ஏப்ரல் மாதம் ஒன்றாம் தேதி தொடங்கி ஒவ்வொரு நாளும் காலையிலும் இரவிலும் ஏற்பாடு செய்திருந்த இணையவழி உரைகளில், ஏப்ரல் 15 , 2020 வரை உரைகளை ஆற்றிய சொற்பொழிவார்கள்*




**தமிழ் மரபு அறக்கட்டளை - பன்னாட்டு அமைப்பு**

***http://www.tamilheritage.org/***

**வெளியிடும் காலாண்டு மின்னிதழ்**

**தொகுப்பாசிரியர்:  முனைவர் தேமொழி**

# இணையம்வழியே தொடரும் நம் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்

வணக்கம்.



உலக மக்கள் அனைவரது சிந்தனையும் இன்று COVID-19 வைரஸ் பற்றியதாகவே இருக்கின்றது. ஒட்டுமொத்த உலகின் பெரும்பகுதியைச் செயலிழக்க வைத்திருக்கிறது இந்த நுண்ணுயிர் கிருமி. இந்த ஆண்டின் தொடக்கம் முதல் மக்கள் நடமாட்டம் முடக்கப்பட்டுள்ளது; உலகப் பொருளாதாரம் எப்படி மீண்டு வரும் என்பது நம் முன்னே எல்லோருக்கும் இருக்கின்ற மிகப் பெரிய கேள்வி. இதற்கிடையே தான் தொடர்கிறது நமது தமிழ் மரபு அறக்கட்டளையின் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்.

இவ்வருடம் பெப்ரவரி மாதம் தொடக்கத்தில் தமிழ் மரபு அறக்கட்டளையின் பதிப்பாக வெளிவந்த `திருவள்ளுவர் யார்- கட்டுக்கதைகளைக் கட்டுடைக்கும் திருவள்ளுவர்` என்ற திறனாய்வு நிகழ்ச்சி சென்னையில் நடைபெற்றது. திருக்குறள் ஐரோப்பியத் தமிழ் அறிஞர்களால் மொழிபெயர்ப்புக்கு உட்படுத்தப்பட்டு லத்தின் மொழி தொடங்கி வெவ்வேறு ஐரோப்பிய மொழிகளில் வெளிவந்த காலகட்டத்திற்குப் பிறகு கிபி 19ஆம் நூற்றாண்டில் திருக்குறளை எழுதிய திருவள்ளுவர் பற்றி பல்வேறு புனை கதைகள் உருவாக்கப்பட்ட சூழலைச் சுட்டிக்காட்டும் வகையில் உருவாக்கப்பட்ட தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடு தான் இந்த நூல். அறிவுக்குப் பொருந்தாத கதைகளைத் திருவள்ளுவரின் பின்புலத்தின் மீது ஏற்றி, திருவள்ளுவரின் பெருமையைக் குறைத்துச் சிதைக்கும் முயற்சிகளை வெளிச்சப்படுத்தும் நோக்கத்துடன் எழுதப்பட்டது இந்த நூல். வரலாற்றில் கட்டமைக்கப்பட்டுள்ள பொய்க் கதைகளை உடைத்துச் சிதைத்து மக்கள் சிந்தனையில் தெளிவு ஏற்படுத்த வேண்டியதும் நமது கடமைகளில் ஒன்றாக அமைகின்றது.

ஐரோப்பா மட்டுமன்றி, இந்தியாவிலும் ஊரடங்கு இன்று அமல்படுத்தப்பட்டுள்ளது. வீட்டுக்குள்ளேயே இருக்கின்ற பலருக்கு அறிவுத் தேடலுக்கு உகந்த வகையில் பயனுள்ள நடவடிக்கைகளை உருவாக்கித் தரவேண்டும் என்ற சிந்தனையில் தமிழ் மரபு அறக்கட்டளை ஏப்ரல் மாதம் ஒன்றாம் தேதி தொடங்கி ஒவ்வொரு நாளும் காலையிலும் இரவிலும் இணையவழி உரைகளை ஏற்பாடு செய்யப்பட்டது. ஒவ்வொரு நாளும் இரண்டு முறை, இந்திய-இலங்கை நேரம் காலை 11 மணிக்கும் இரவு 10 மணிக்கும் குறிப்பிட்ட ஒரு துறையில் ஆய்வு தரத்துடன் கூடிய வகையிலான உரைகள் இப்போது தொடர்ந்து நிகழ்த்தப்பட்டு வருகிறது. இந்த பேஸ்புக் நேரலை

உரைத்தொடர் நிகழ்ச்சி தமிழகத்தில் ஊரடங்கு அறிவிக்கப்பட்டு இருக்கின்ற மூன்றாம் தேதி வரை ஒவ்வொரு நாளும் இரண்டு ஆய்வுச் சொற்பொழிவு என்ற வகையில் நடைபெறத் திட்டமிடப்பட்டுள்ளது.

உலகத் தமிழ் மக்களின் கவனத்தை வரலாற்று ஆய்விலும், தமிழ்ப் பண்பாட்டு ஆய்வுச் சூழலிலும் குவிக்கும் வகையில், உலகின் பல நாடுகளிலிருந்து ஆய்வறிஞர்கள் இந்த நிகழ்ச்சியில் தொடர்ந்து பங்கு பெற்று வருகின்றார்கள். ஏப்ரல் ஒன்றாம் தேதி தொடங்கி ஏப்ரல் 15ஆம் தேதி வரை ஆய்வறிஞர்கள் உலகின் பல்வேறு மூலைகளிலிருந்து ஆற்றிய உரைகளின் பட்டியலை இந்தக் காலாண்டிதழில் காணலாம். அந்த வகையில் முதல் 15 நாட்களில் 30 ஆய்வுரைகள் நிகழ்த்தப்பட்டு அவை ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றை இறுதிப் பகுதியில் காண்க.

பேரிடர் காலங்களில் சாலைகளும் பிற பொது போக்குவரத்து வசதிகளும் இல்லாத பகுதிகளில் வாழ்கின்ற மக்கள் அடிப்படைத் தேவைகளுக்கும் அல்லல்படும் சூழ்நிலை ஏற்படுகின்றது. அந்த வகையில் உலகின் பல பகுதிகளில் அடிப்படைத் தேவைகளும் உணவுப் பற்றாக்குறையும் ஏற்பட்டுள்ள இந்த கொரோனா ஊரடங்குக் காலகட்டத்தில் நம் ஒவ்வொருவராலும் இயன்ற வகையில் உதவிக்கரம் நீட்ட வேண்டியது நமது கடமை தான்.

இலங்கையின் மலையகப் பகுதியில் இரத்தினபுரி கபுகஸ்தென்ன மூக்குவத்தை தேயிலை பெருந்தோட்டப் பொதுமக்களுக்குத் தேவைப்படுகின்ற அடிப்படை உணவுத் தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை இலங்கை ரூபாய் ஒரு லட்சம் (ரூ100,000.00/-) நன்கொடையை வழங்கி உள்ளது. ஒரு குடும்பத்திற்கு ரூபாய் 600 பெறுமானமுள்ள உணவுப்பொருட்கள் என்ற வகையில் 190 குடும்பங்களுக்கு இந்த அவசரக்கால உதவித்தொகை வழங்கப்படுகின்றது. நம் கண்களுக்கு எதிரே பொதுமக்களும் குழந்தைகளும் பசியால் வாடித் தவிப்பதைத் தவிர்ப்பதற்கு நம்மால் முடிந்த அளவு உதவிக்கரம் நீட்டி கை கொடுப்போம். சக மனிதரின் பசிப்பிணியைப் போக்குவது தான் நாம் இந்தப் பேரிடர் காலத்தில் செய்ய வேண்டிய மிக முக்கிய கடமையாகத் தமிழ் மரபு அறக்கட்டளை கருதுகின்றது.

COVID-19 வைரஸ் ஏற்படுத்தியிருக்கும் பாதிப்புகளிலிருந்து உலக மக்கள் அனைவரும் மிகுந்த கவனத்துடனும் கட்டுக்கோப்புடனும் மீண்டு வருவோம். இவ்வாண்டின் தொடக்கத்தில் செயல்படுத்தத் திட்டமிடப்பட்டிருந்த பல்வேறு நடவடிக்கைகள் ரத்து செய்யப்பட்டிருந்தாலும்கூட இணையம் நமக்கு அளித்திருக்கின்ற வாய்ப்புகளைப் பயன்படுத்தி ஒவ்வொரு நாளும் வரலாற்று பாதுகாப்பு பற்றியும் வரலாற்று ஆய்வுகளைப் பற்றியுமான ஆய்வுரைகளை பேஸ்புக் வழி நேரலையாகத் தமிழ் மரபு அறக்கட்டளை உலகத் தமிழ் மக்களுக்கு வழங்கிவருகின்றது. அனைவரும் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்தி உங்கள் வரலாற்று ஆர்வத்தை வளர்த்துக் கொள்ளுங்கள் எனத் தமிழ் மரபு அறக்கட்டளை கேட்டுக்கொள்கிறது.

அன்புடன்
முனைவர் க.சுபாஷிணி
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
16.4.2020

~*~*~*~*~

தமிழ் மரபு அறக்கட்டளையின் ஐரோப்பியக் கிளையின் நன்கொடையாக இலங்கை ரூபாய் ஒரு லட்சம் (ரூ100,000.00/-) தொகையைத் தமிழ் மரபு அறக்கட்டளையின் ஐரோப்பியக் கிளையினர் இலங்கையின் மலையகப் பகுதியில் இரத்தினபுரி கபுகஸ்தென்ன மூக்குவத்தைத் தேயிலை பெருந்தோட்ட மக்களுக்கு வழங்கியிருக்கின்றோம் என்ற கனிவான செய்தியைப் பகிர்ந்து கொள்கிறேன்.

இத்தொகை இலங்கையின் ரத்தினபுரி பகுதியில் மலை உச்சியில் மக்கள் குறைவாக நடமாடும் பகுதியில் கொரோனா நிவாரண நிதி கிடைக்காமல் அல்லல்படும் மக்களுக்காக ஆசிரியர் சிவராஜ் கேட்டுக் கொண்டமையினால் வழங்கப்பட்ட நிதி உதவியாகும்.

இந்த நிதி உதவி வழங்கியதில் பங்கு கொண்ட தமிழ் மரபு அறக்கட்டளையின் ஐரோப்பியக் கிளையினர்:
ஜெர்மனி - இலங்கை ரூபாய் 72,325.00/-

1. ஆசிரியர் சிவஞானம்
2. திரு.ஸ்ரீகந்தா குடும்பத்தினர்
3. திரு.கௌதம சன்னா
4. திரு. கார்த்தீஸ்வரன் காளிதாஸ்
5. திரு.கார்த்திக் சௌந்தரராஜன்
6. திரு.பாலலெனின்
7. முனைவர்.க.சுபாஷிணி

டென்மார்க் - இலங்கை ரூபாய் 6,000.00/-

1. திரு. தருமகுலசிங்கம்

நோர்வே - இலங்கை ரூபாய் 21,675/-

1. திரு.வேலழகன் மற்றும் நண்பர்கள்

ஒரு குடும்பத்திற்கு 600 ரூபாய் வீதம் பெறுமானமுள்ள ஒரு வாரத்திற்கான உணவுப்பொருட்கள் இத்தொகையிலிருந்து 190 குடும்பங்களுக்கு அனுப்பப்பட்டுள்ளது. இன்று இத்தொகை அனுப்பப்பட்டு அவசரக்கால உதவிக்கான செயல்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. இதன் வழி

இலங்கை ரூபாய் ஒரு லட்சம் (ரூ100,000.00/-) தொகையைத் தமிழ் மரபு அறக்கட்டளையின் ஐரோப்பியக் கிளையினர் இலங்கையின் மலையகப் பகுதியில் இரத்தினபுரி கபுகஸ்தென்ன மூக்குவத்தைத் தேயிலை பெருந்தோட்ட மக்களுக்கு வழங்கியிருக்கின்றோம்.

இதன் வழி மலை உச்சியில் தேயிலைத் தோடங்களில் பணி புரியும் 190 குடும்பங்களுக்கு ஒரு வாரத்திற்கான உணவுத் தேவைக்கு நாம் உதவியிருக்கின்றோம். தேயிலைத் தோட்டத்தில் வேலைக்குச் செல்லவில்லையென்றால் அன்றைய சம்பளம் இல்லை என்ற நிலையில் இம்மக்கள் வாழ்கின்றார்கள். ஊரடங்கு காலத்தில் இந்த உதவித் தொகை பல குடும்பங்களின் அடிப்படை உணவுத் தேவைக்கான தற்காலிக உதவியாக அமைகின்றது.














அன்புடன்
முனைவர் க.சுபாஷிணி
தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு
16.4.2020

# அடைபட்டோரின் அறிவுத்தேடல் - இணையவழி உரைத்தொடர்

| உரை எண். | தேதி | இந்திய நேரம் | நாள் | சொற்பொழிவாளர் | நாடு | உரை தலைப்பு |
|---|---|---|---|---|---|---|
| 1 | 01/04/2020 | காலை 11:00 | புதன் | முனைவர்.நா.கண்ணன் | செங்கல்பட்டு | கொரியாவில் தமிழாய்வு அனுபவம் |
| 2 | 01/04/2020 | இரவு 10:00 | புதன் | முனைவர்.ஜெயசக்திவேல் | சென்னை | ஹாம் ரேடியோ அறிமுகம் |
| 3 | 02/04/2020 | காலை 11:00 | வியாழன் | முனைவர்.இனிய நேரு | ஆந்திரா | இணையத்தில் தமிழ் |
| 4 | 02/04/2020 | இரவு 10:00 | வியாழன் | முனைவர். க.சுபாஷிணி | ஜெர்மனி | பயணத்தில் சந்தித்த சுவாரசியமான அனுபவங்கள் |
| 5 | 03/04/2020 | காலை 11:00 | வெள்ளி | எழுத்தாளர்.அன்பு ஜெயா | சிட்னி, ஆஸ்திரேலியா | சீர்காழி சிறப்புகள் |
| 6 | 03/04/2020 | இரவு 10:00 | வெள்ளி | எழுத்தாளர். மலர்விழி பாஸ்கரன் | மதுரை | தென்கிழக்காசியப் பயணங்கள் |
| 7 | 04/04/2020 | காலை 11:00 | சனி | முனைவர். ராஜேஸ்வரி | மதுரை | இளைய தலைமுறையினருக்கான எம்ஜிஆர் |
| 8 | 04/04/2020 | இரவு 10:00 | சனி | முனைவர்.சாந்தினிபீ | உத்தரப்பிரதேசம் | கல்வெட்டுகளில் தேவதாசி நூல் |
| 9 | 05/04/2020 | காலை 11:00 | ஞாயிறு | எழுத்தாளர்.கௌதம சன்னா | மெட்ராஸ் | குறத்தியாறு நூல் உருவான கதை |
| 10 | 05/04/2020 | இரவு 10:00 | ஞாயிறு | மருத்துவர். ஷாலினி | சென்னை | ஆண் எடுக்கவேண்டிய அவதாரம் |
| 11 | 06/04/2020 | காலை 11:00 | திங்கள் | திரு. விஜய் | ஆரணி | தமிழிசை |
| 12 | 06/04/2020 | இரவு 10:00 | திங்கள் | முனைவர்.குறிஞ்சிவேந்தன் | தஞ்சை | உலகப்போர்களை நினைவூட்டும் நிகழ்காலம் |
| 13 | 07/04/2020 | காலை 11:00 | செவ்வாய் | முனைவர். தா.காட்வின் | மதுரை | ஆரோக்கியமான உடல் ஆரோக்கியமான மனம் |
| 14 | 07/04/2020 | இரவு 10:00 | செவ்வாய் | திரு. பாலமுருகன் | திருவண்ணாமலை | திருவண்ணாமலை வரலாற்றுச் சின்னங்கள் |
| 15 | 08/04/2020 | காலை 11:00 | புதன் | திரு. பீர் முகம்மது | சென்னை | டிஜிட்டல் யுகத்தில் தமிழ் ஊடகவியல் |
| 16 | 08/04/2020 | இரவு 10:00 | புதன் | எழுத்தாளர். மதுமிதா | இராஜபாளையம் | தமிழ்நாடு அரசு பெண்கள் நூலகம் இராஜபாளையம் |
| 17 | 09/04/2020 | காலை 11:00 | வியாழன் | திரு. செழியன் | கோவை | இயற்கை |
| 18 | 09/04/2020 | இரவு 10:00 | வியாழன் | திரு. சாம் விஜய் | பிரான்ஸ் | மேற்கிந்தியத் தீவுகளில் தமிழர்கள் |
| 19 | 10/04/2020 | காலை 11:00 | வெள்ளி | முனைவர். சிவராமகிருஷ்ணன் | வடலூர் | கடலூர் மாவட்ட தொல்லியல் தடையங்கள் |
| 20 | 10/04/2020 | இரவு 10:00 | வெள்ளி | திரு. சிவா மயிலாடுதுறை | வாஷிங்டன், யுஎஸ்ஏ | கலைஞரின் பன்முகத்தன்மைகள் |
| 21 | 11/04/2020 | காலை 11:00 | சனி | திரு. மணி மணிவண்ணன் | சான் பிரான்சிஸ்கோ, யுஎஸ்ஏ | சாளுவன்குப்பம் தொல்லியல் எச்சங்கள் |
| 22 | 11/04/2020 | இரவு 10:00 | சனி | திரு. ஆழி செந்தில்நாதன் | சென்னை | அண்ணாவின் தமிழ்நாடு |
| 23 | 12/04/2020 | காலை 11:00 | ஞாயிறு | திருமதி. சுபா அபர்ணா சசீந்திரன் | பப்புவா நியூ கினி | பப்புவா நியூ கினியில் தமிழ் மரபு |
| 24 | 12/04/2020 | இரவு 10:00 | ஞாயிறு | முனைவர். க. சுபாஷிணி | ஜெர்மனி | மறைக்கப்படும் வரலாறு; அழிக்கப்படும் சின்னங்கள் |
| 25 | 13/04/2020 | காலை 11:00 | திங்கள் | எழுத்தாளர் இரா. நாறும்பூநாதன் | பாளையங்கோட்டை | கழுகுமலையும் வெட்டுவான் கோவிலும் |
| 26 | 13/04/2020 | இரவு 10:00 | திங்கள் | திரு. சண்முகநாதன் | மும்பை | தேவரடியாரின் சதிர், முத்துக்கண்ணம்மாளின் கலையும் வாழ்க்கையும் ஆவணப்படம் |
| 27 | 14/04/2020 | காலை 11:00 | செவ்வாய் | முனைவர். சௌந்தரமகாதேவன் | திருநெல்வேலி | ஆதிச்சநல்லூர் அகழாய்வுகள் |
| 28 | 14/04/2020 | இரவு 10:00 | செவ்வாய் | திரு. ஆர்.பாலகிருஷ்ணன். இ.ஆ.ப. | ஒடிசா | சிந்து வெளி நாகரீகம் புதிய ஆய்வுகள் காட்டும் தமிழர் நாகரிகத்தின் தொன்மை |
| 29 | 15/04/2020 | காலை 11:00 | புதன் | கடலோடி நரசய்யா | மதுரை | காலனி ஆட்சியில் தமிழ்நாட்டில் கலாச்சார நிலை |
| 30 | 15/04/2020 | இரவு 10:00 | புதன் | முனைவர். விஜய் அசோகன் | ஸ்வீடன் | தாய்மொழிக் கல்வியும் தமிழகக் கல்வியும் |

இந்த இதழில் ...

## *மின்தமிழ்மேடை - காட்சி: 21; ஏப்ரல்  - 2020*

# “இணையம்வழியே தொடரும் நம் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்”

*(மின்தமிழில் ஜனவரி 16, 2019 – ஏப்ரல்  15 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

**உள்ளடக்கம்**




**மின்தமிழ்மேடை இதழ்கள் தொகுப்பு:**

**http://mintamilmedai.tamilheritage.org/wp/**

'மின்தமிழ்மேடை' இதழுக்கு தங்கள் படைப்புக்களை அனுப்ப விரும்புபவர்

mailto:editorthfjournal@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பலாம்

# 1. இதுவல்லவோ எங்கள் வடசென்னை!!!

—— எம்.ராஜா

தீபாவளி, பொங்கல் தினத்தன்று வெறிச்சோடி கிடக்கும் சென்னை சாலைகளை வைத்தே அறிந்து கொள்ளலாம் சென்னையில் தற்போது வாழும் பெரும்பாலான மக்களின் பூர்விகத்தை. தன்னைத் தேடி வருபவர்களுக்கெல்லாம் வாய்ப்பளித்து வாழவைத்துக் கொண்டிருக்கிறது சென்னை. நீங்கள் இதைப் படித்துக் கொண்டிருக்கும் இந்த தருணத்தில் கூட நம்பிக்கையுடன் ஒரு கூட்டம் சென்னை எக்மோர், சென்ட்ரல் மற்றும் கோயம்பேட்டில் இறங்கி நம்பிக்கையுடன் நடந்து வந்து கொண்டிருக்கிறது.

இந்த சென்னை பட்டணத்திற்கென்று ஒரு கதை இருக்கிறது, அது இங்கு இருந்த அல்லது இருக்கும் கட்டிடங்களைப் பற்றிய கதை அல்ல; இந்த கட்டிடங்களில் மறைந்து கிடக்கும் இந்த மண்ணின் பூர்வ குடிகளின் கதை, கறுப்பர் நகரத்தில் வாழ்ந்தவனின் உழைப்பே மதராசப்பட்டிணத்தை உலகின் ஒரு முக்கியமான தொழில் நகரமாக, நமது தலைநகரமாக உருவாக்கியது. அதன் பயனை நாம் இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். அவர்கள் உருவாக்கித் தந்த மதராஸ் நகரத்திலே நாம் நமது கனவுகளைத் துரத்திக் கொண்டிருக்கிறோம், அதற்கான நன்றி நம் எண்ணத்தில் இருப்பது நலம்.

இதன்படி பார்த்தால் 370 வருடங்களுக்கு முன் மதராஸின் கறுப்பர் நகரத்தில் வாழ்ந்த ஒரு மனிதனுக்கும் இப்போது சென்னைக்கு 'ஐ.டி' (IT) வேலை தேடி வரும் இளைஞனுக்கும் ஒரு கண்ணுக்குத் தெரியாத தொடர்பிருக்கிறது. அந்த தொடர்பை நோக்கிய தேடலாகவே தமிழ் மரபு அறக்கட்டளை- பன்னாட்டு அமைப்பின் "மரபு நடை" அமைந்தது.

வட சென்னையின் வரலாற்று எச்சங்களை நோக்கிய பயணம் தொடங்கிய இடம் பாரிஸ் கார்னர் என்கிற பாரி முனை. பாரிமுனையில் இருக்கும் உயர்நீதிமன்றத்தின் வாகன நிறுத்தத்தில் கூடி சக பயணிகளைச் சந்தித்துக் கொண்டோம். இந்த நிகழ்வை ஏற்பாடு செய்திருந்த தமிழ் மரபு அறக்கட்டளை நிறுவனர் திரு.சுபா மற்றும் வட சென்னையின் வரலாற்றை விளக்க வந்திருந்த நிவேதிதா லூயிஸ் அவர்கள் இந்த பயணத்தின் நோக்கம் மற்றும் நம் எதிர்பார்ப்பு என்னவாக இருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்தினர்.

உயர்நீதிமன்றத்தின் சுவரில் இருக்கும் எம்டன் கல்வெட்டைப் பார்வையிட்டோம். இரண்டாம் உலகப் போரின் போது ஆங்கிலேயர்களை மிரட்ட எம்டன் என்னும் ஜெர்மானியக் கப்பலிலிருந்து சென்னை நோக்கி குண்டு வீசப்பட்டது. அந்த இடத்தில் அமைந்துள்ள கல்வெட்டே இது. குண்டு விழுந்த

நேரத்தில் மக்களின் மனநிலை என்னவாக இருந்திருக்கும்?!! இந்தியாவின் தெற்கு பகுதியில் இருப்பதால் அமைதி பூங்காவில் வாழ்வதாய் எண்ணிக் கொண்டிருக்கிறோம் ஆனால் நமது ஊரில் வந்து ஜெர்மானியக் கப்பல் பயம் காட்டி சென்றிருப்பது ஆச்சரியமான செய்தியே. இதனால் ஆங்கிலேயர் காலத்தில் சென்னையின் முக்கியத்துவத்தை உணரவும் முடிகிறது.

ஆங்கிலேயர் காலத்தில் சென்னை கறுப்பர் நகரம் மற்றும் வெள்ளையர் நகரம் எனப் பிரிக்கப்பட்டது. ஆங்கிலேயருக்குச் சேவை செய்வதற்காகக் கோட்டைக்கு வெளியே மக்கள் குடியமர்த்தப்பட்டனர். தொழில் வாரியாக தெருக்கள் பிரிக்கப்பட்டது. அதன் அடையாளமான ஸ்தூபி அமைக்கப்பட்டது. டேர் ஹவுஸ் (Dare House) கட்டிடத்தின் அருகே ஒரு மூளையில் இந்த எல்லைக் கல்லைப் பார்க்க முடிந்தது. எவ்வளவு பெரிய சமூக மாறுதலை ஏற்படுத்திய நிகழ்வின் அடையாளம் இப்படி மறைந்து கிடக்கிறது எனத் தோன்றியது.

டாட்டா, வாடியா, கோத்ரேஜ் என இந்தியாவில் தொழில்துறையில் கோலோச்சிக் கொண்டிருக்கும் அனைவருக்கும் ஒரு ஒற்றுமை உள்ளது. இவர்கள் அனைவரும் பார்சி இனத்தைச் சேர்ந்தவர்கள். பல இனக்குழுக்கள் வாழ்ந்த வணிக மையம் சென்னை, இதில் பார்சிகளுக்கு முக்கிய இடமுண்டு. அப்படி வரும் பார்சி வணிகர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்ட சத்திரமே " அஞ்சுமண் பாக்". நாங்கள் சென்ற போதும் அதில் பார்சி இனத்தவர்கள் தங்கியிருப்பது தெரிய வந்தது. அந்த வளாகத்திலேயே பார்சிகளின் கல்லறை உள்ளது. அதில் புகழ்பெற்ற பெயர்கள் பல உள்ளன, நம்மைக் கவனிக்க வைத்தது "கிளப் வாலா" (clubwala) அவர்களின் பெயர். மெட்ராஸ் ஸ்கூல் ஆப் சோசியல் வர்க் ஆரம்பித்தவர் இவரே. இன்று இந்த முயற்சியால் பல லட்சம் விளிம்பு நிலை மக்கள் பலன் அடைந்து வருகின்றனர்.

சத்திரத்திற்கு அருகிலேயே பார்சிகளின் நெருப்புக் கோவில் உள்ளது (பார்சிகள் நெருப்பை வணங்கும் பழக்கம் கொண்டவர்கள்). இதன் உள்ளே பிற மதத்தினருக்கு அனுமதி இல்லை. சென்னையில் இருக்கும் ஒரே நெருப்புக் கோயில் இதுவே. ரமலான் மாதத்தின் ஒரு நாள் இங்குள்ள இஸ்லாமியர்கள் இந்த கோவிலைச் சேர்ந்த அரங்கில் வந்து நோன்பு திறக்கிறார்கள், அன்று அது பார்சிகள் அளிக்கும் விருந்து. ஒரு காலத்தில் பெரிய வளாகமாக இருந்த இந்தக் கோவில் தனது எல்லையைச் சுருக்கிக்கொண்டு, அருகில் அமைந்திருக்கும் தேவாலயத்திற்கும், பள்ளிக்கும் இடமளித்துள்ளது. மதங்கள் இணையும் மகத்தான இடம் இதுவே எனத் தோன்றியது.

யுனானி மருத்துவமனை வளாகத்தை மக்கள் கிளி பங்களா என்றும் அழைக்கிறார்கள், கிளிகள் கூட்டமாக இங்குக் கூடுவது இதற்குக் காரணம். வரலாற்றுச் சின்னங்களைப் பராமரிப்பதில் இருக்கும் நடைமுறை சிக்கல்களை உணர முடிந்தது. மூலிகை தோட்டத்தைச் சுற்றிப் பார்க்கும் வாய்ப்பும் எங்களுக்குக் கிட்டியது. சி.எஸ்.ஐ (CSI) ராஜகோபால் பள்ளி 150வது வருடத்தில் அடியெடுத்து வைக்கிறது. ராயபுரம் பகுதியில் மிகப்பெரிய சமூக மாற்றத்தை

ஏற்படுத்திய பள்ளி இது. சென்னையே காலராவில் அவதிப்பட்ட பொழுது 40,000 பேருக்கு இங்கு சிகிச்சை நடந்துள்ளது ஒரு ஆச்சரியமான செய்தி.



மிஷனரிகளாக இந்தியா வந்தாலும் பல சவால்களுக்கு இடையே அவர்கள் பல தியாகங்களைச் செய்து இந்த மண்ணின் மக்களுக்குத் தொண்டு செய்திருக்கிறார்கள் என்பதற்கு 'ஸ்கட்டர்' (Schudder) அவர்களின் குடும்ப உறுப்பினர்களின் கல்லறையே சாட்சி. ஸ்கட்டர் அவர்களே இந்தியாவின் தலைசிறந்த மருத்துவமனையாய் விளங்கும் வேலூர் சிஎம்சி (CMC) கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரியின் நிறுவனர் என்பது ஒரு முக்கியமான செய்தி.

'நார்த்விக்' (Northwick) பள்ளியை நாங்கள் அடைந்த போது ஞாயிற்றுக்கிழமை சிறப்பு வகுப்பிற்கு வந்திருந்த மாணவர்களை வைத்தே இந்த பள்ளி எந்த மக்களுக்காக இயங்கிக் கொண்டிருக்கிறது என உணர முடிந்தது. பள்ளியின் உள்ளே அமைந்துள்ள பழைய தேவாலயத்தைக் காண வாய்ப்பு கிடைத்தது. கடவுளிடம் தனது கோரிக்கையை வைப்பதற்காக மாணவர்கள் தேவாலய சுவரில் எழுதி வைத்திருக்கும் சில வாசகங்கள் அவர்களின் பொருளாதார, குடும்ப மற்றும் சமூக நிலையை உணர்த்தியது.

N4 துறைமுகம்- காசிமேடு அடைந்த போது சற்று தயக்கமாக இருந்தது ஆனால் அங்கிருந்த மக்கள் மிகவும் அன்போடு எங்களை வரவேற்றனர். கப்பல் எப்படி உருவாக்கப்படுகிறது என நேரில் காணும் வாய்ப்பு கிடைத்தது. நாகூர் ஆண்டவர் கொடிமரம் காணும் வாய்ப்பு கிடைத்தது, தமிழர்கள் வாழும் கடற்புறங்களில் இந்த கொடிமரம் இருப்பது ஒரு சுவாரஸ்யமான தகவல், இது சமூக நல்லிணக்கத்தின் சிறந்த எடுத்துக்காட்டாக அமைத்துள்ளது.

நிகழ்ச்சியின் இறுதியில் உண்மையான வடசென்னை மற்றும் அதன் மக்கள் பற்றி எழுத்தாளர் திரு.கௌதம சன்னா உரையாற்றினர். வடசென்னை பற்றிய பல பிம்பங்களை உடைத்தெறிந்தது அந்த உரை. சென்னையை உருவாக்கியவன் கண்ணுக்குத் தெரியாத சுவருக்கு அந்த பக்கம் பிரித்து வைக்கப்பட்டிருக்கிறான் என உணர முடிந்தது.

வரலாற்று நடை முடித்து வீடு திரும்பும்போது வட சென்னை பற்றிய புரிதல் வேறாய் மாறி இருந்தது. இன்று அமீபா போல் படர்ந்து கிடக்கும் சென்னையை உருவாக்கியவர்களின் கதைகள் வடசென்னையின் ஒவ்வொரு தெருவிலும் நிறைந்திருக்கிறது என்பதை உணரச் செய்தது இந்தப் பயணம்.

தொடர்பு:
எம்.ராஜா <rajglitz@gmail.com>

# 2. சென்னையில் ஒரு நாள் - திருவொற்றியூர்

—— துரை.சுந்தரம்

அண்மையில், மார்ச்சு, 2020 இரண்டாவது வாரத்தில் சென்னையில் இருக்கும் ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. அதுபோழ்து, மார்ச்சு பதினான்காம் நாள் திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோயிலுக்குச் செல்லும் ஒரு நிகழ்வை வலிய உண்டாக்கிக் கொண்டேன். காரணம், திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோயிலில் பதிவான சில கல்வெட்டுகளைப் பற்றி ஒரு சில நாள்கள் முன்பு, தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதிகள் மூன்று, ஐந்து, பன்னிரண்டு ஆகியவற்றில் பார்த்திருந்தேன். நேரில் காண மேற்படி வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டேன். திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் கோயில் கல்வெட்டுகளைக் கண்டும், சிலவற்றைப் படித்தும் பெற்ற உவப்பைப் பகிர்ந்து கொள்ளவே இக்கட்டுரை.

திருவொற்றியூர்:



வடசென்னைப் பகுதியில், கடலை ஒட்டி அமைந்த ஊர் திருவொற்றியூர். இங்குள்ளது சிவன் கோயில் எனினும், கோயிலில் எழுந்தருளியிருக்கும் வடிவுடை அம்மன் பேராலேயே இவ்வூர் அடையாளப் படுத்தப்படுகிறது. நான் திருவொற்றியூரைப் பேருந்து மூலம் சென்றடையும்போது, கோயிலைக் கடந்து ஒரு நிறுத்தத்தில் இறங்கி விட நேர்ந்தது. எனவே, ஒரு ‘ஆட்டோ’வில் அமர்ந்து சிவன் கோயிலுக்கருகில் என்னைக்கொண்டுவிடச் சொன்னபோது ஓட்டுநருக்குச் சிவன் கோயில் தெரியவில்லை. ’வடிவுடை அம்மனின் கோயிலுக்கருகில் கொண்டு சேர்க்கிறேன்; அங்கு கேட்டறிந்து கொள்ளுங்கள்’ என அவர் கூறியதிலிருந்து, சிவன் கோயில் என்னும் அடையாளம் வடிவுடை அம்மனின் ஆற்றலில் கரைந்து போனது புலப்பட்டது.

தியாகேசர் கோயில்:

கோயில் கோபுரத்தின் நுழைவு வாயிலில் “அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில்” என்னும் பெயரே காணப்பட்டது. இணையப்பக்கம் ஒன்றில், இறைவன் பல பெயர்களில் குறிக்கப்படுவதைக் கண்ணுற்றேன். படம்பக்க நாதர், ஒற்றீசுவரர், ஆதிபுரீசுவரர், எழுத்தறியும் பெருமாள், தியாகேசர் எனப் பல்வேறு பெயர்கள். இவற்றில், தியாகேசர் திருமுன் (சன்னதி), ஆதிபுரீசுவரர் திருமுன், ஒற்றீசுவரர் திருமுன் ஆகிய மூன்று திருமுன்கள் கோயில் வளாகத்தில் இருந்தமை உள்ளே சென்றபின்னர் தெரியவந்தது. கூடுதலாக, மீனாட்சி சுந்தரேசுவரர் திருமுன்னும் இருந்தது. ஒரே கோயில் வளாகத்தில் பல திருமுன்கள். வளாகமும் பெரிதாகவே இருந்தது. இக்கோயில், சைவக் குரவர் மூவர் பாடிய பெருமை பெற்றது குறிப்பிடத்தக்கது. வள்ளல் பெருமானும், தமிழறிஞர் மறைமலை அடிகளும் இங்குள்ள இறைவன் மேல் பாடல் இயற்றியுள்ளனர் என்பது கூடுதல் செய்தி. சென்னையில் வள்ளல் பெருமானார் வாழ்ந்த சில ஆண்டுகளில் அவர் இக்கோயிலின் தாய்த்தெய்வமான வடிவுடையம்மனை ஏறத்தாழ நாளும் கண்டு வழிபட்டுள்ளார் எனக் கூறலாம்.

நுழைவாயில் கோபுரம்:

இக்கோயிலுக்கு வரும் எண்ணம் நன்கு திட்டமிடப்படாமல் தோன்றி, நிகழ்வாக மாற்றமுற்றது என்னும் காரணத்தால் தகுந்த போர்க்கருவிகளின்றிக் களத்தில் நிற்கும் கையறு நிலையில் இருந்தேன். நுண்ணறிவு ஆற்றலைப்பெற்ற ஒரு கைப்பேசி கையில் இருந்தும் பயனற்ற சூழ்நிலை. பழுது காரணமாகக் கைப்பேசியின் நினைவுப்பண்டாரத்தில் இடமில்லை. தொலைவிலிருந்து கோயிலின் கோபுரத்தையும், கோபுர நுழைவுப்பகுதியில் அதிட்டானத்து 'உபபீடத்தில்' (கோயிலின் அடித்தளம், கோயில் கட்டிடக்கலையில் 'அதிட்டானம்' என்றும், கோபுரத்தின் உயரத்தைக் கூட்டவேண்டிக் கூடுதலாகக் கட்டப்பெறும் பகுதி ‘உபபீடம்’ என்றும் அழைக்கப்பெறும்) ஓர் அடிக்குள் அமையுமாறு வடிக்கப்பட்ட குறுஞ்சிற்பம் ஒன்றையும் ஒளிப்படம் எடுத்தவுடன், கைப்பேசியின் ஆற்றல் மறைந்து ஒளிப்படம் எடுக்க இயலாது போயிற்று.

ஆதிபுரீசுவரர் கருவறை விமானம்

மேற்கொண்டு கோயிலுக்குள் சென்று ஆதிபுரீசுவரர் கருவறை விமானத்தைச் சுற்றிலும் கொட்டிக்கிடந்த கல்வெட்டுப் புதையலைக் கண்டதும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவ்வளவு கல்வெட்டுகள். சிலரின் கையெழுத்து பொடி எழுத்துகளாக இருக்கும். நுணுக்கி நுணுக்கி எழுதுவது என்று இதைக் குறிப்பிடுவார்கள். அதுபோன்றே இங்கிருக்கும் கல்வெட்டு எழுத்துகளும் நுணுக்கி எழுதப்பட்டிருந்தன; ஆனால் அழகுற எழுதப்பட்டிருந்தமைதான் சிறப்பு. சோழர் காலத் தமிழ் எழுத்து. கருவறை ‘கஜ பிருஷ்டம்’ என்னும் வகையைச் சேர்ந்தது. ‘கஜ பிருஷ்டம்’ என்பது எளிதில் பொருள் விளங்கா வட சொல். ‘தூங்கானை மாடம்’ என்று தமிழ்ச் சொல்லால் குறிப்பிட்டால் சற்றுப் புரிந்துகொள்ளலாம். ஆனாலும், இச்சொல்லும் கோயிற்கட்டிடக்கலை அருஞ்சொற்களுள் ஒன்று என்னும் காரணத்தால் எல்லாருக்கும் பொருள் விளங்கும் எனக் கூறவியலாது. ஆனையின் (யானையின்) பின்புறத்தைப் போன்று

அரைவட்ட வடிவில் கருவறையும் அதைத் தொடர்ந்து ஒரு நீள் சதுர வடிவில் அர்த்த மண்டபமும் அமைந்த அமைப்பு ‘தூங்கானை மாடம்’ எனப்படும். (நினைவில் வந்தது: கருவறையின் வட்டப்பகுதி, கேரளக் கோயில்களில் முக்கால் வட்டமாக இருப்பதால் கேரளக்கோயிலை ‘முக்கால் வட்டம்’ என்றே கேரளக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.) இந்தத் தூங்கானை மாடம் முழுதும் கல்வெட்டுகள். தூங்கானை மாடமும், அதைச் சுற்றிலும் உள்ள சிறிய சுற்றுப்பாதையும் நாம் வெளியில் சுற்றிவருகின்ற சுற்றாலைப் பகுதியிலிருந்து (பிராகாரம்) சற்றே கீழிறங்கிய பள்ளத்தில் அமைந்துள்ளன. சுற்றாலை முழுதும் உருண்டை வடிவிலான தூண்கள். ஏறத்தாழ ஐம்பது அறுபது தூண்கள் இருக்கலாம். அவற்றுள், சுற்றாலையின் தென்சிறகில் இருக்கும் தூண்களில், உருண்டைப்பகுதியில் உருளும் வட்டப்பரப்பு முழுதும் எழுத்துப் பொறிப்புகள் உருள்வது அழகோ அழகு. எழுத்துகளைப் படிக்க நாமும் தூணைச் சுற்றி வட்டமிடவேண்டும்.

மீண்டும் கோபுர நுழைவாயில்:

கல்வெட்டுகளின் அழகை எடுத்துச் சொல்லும் ஆர்வத்தால் கோபுர வாயிலில் இருந்து நேரே ஆதிபுரீசுவரர் கருவறைக்குச் சென்றுவிட்டதில் கோயிலின் தொடக்கப் பகுதி விளக்கப்படாமல் நின்று போனது. எனவே, மீண்டும் கோபுர நுழைவாயில். கோபுரத்தின் வலப்பக்க உபபீடத்தில் (நம் பார்வையில் நம் இடப்பக்கம்) இருக்கும் குறுஞ்சிற்பம் கொற்றவையின் சிற்பம். எட்டுக்கைகளுடன், அசுரன் ஒருவனைக் கொன்றழிக்கும் கொற்றவை. வாள் கொண்டு அசுரனை முன்புற வலது கையால் குத்திய நிலை. கொற்றவையின் வலது கால் மடித்தும், இடதுகால் தொங்கவிட்டும் அமர்ந்த நிலையில், அன்னை தன் அனைத்துக் கைகளிலும் ஆயுதங்களை ஏந்தியவாறு வடிக்கப்பெற்றிருக்கிறாள் எனலாம். நாள் பட்ட தூசும், எண்ணெய்ப்பற்றும் சிற்பத்தின் நுண்ணிய வடிவக்கூறுகளை மழுங்கச் செய்துவிட்டன. நின்ற நிலையில் இச்சிற்பத்தைக் காண இயலாது. கீழே குனிந்து பார்க்கவேண்டும்.



கொற்றவை-குறுஞ்சிற்பம்

கோபுரத்தின் அதிட்டானம் - அமைப்பு:

கோபுரத்தின் அதிட்டானம் முன்னர் குறித்தவாறு, உயரம் கூட்டிய நிலையில் உபபீடத்தில் தொடங்குகிறது. அதன் அடுத்த நிலையில் கர்ணகூடுகள் என்னும் அமைப்பு. கூடுகளின் நடுவில் மனித முகங்கள், அநுமன், மகிஷாசுர மர்த்தனி ஆகிய சிற்றுருவங்களைச் செதுக்கியிருக்கிறார்கள் சிற்பிகள். அதற்கு அடுத்த நிலையில் தாமரை இதழ்கள் மடிந்திருப்பது போல் சிற்பச் செதுக்கல்கள். இவற்றைக் கோயில் கட்டிடக்கலை பத்மம் எனக் குறிப்பிடும். அதனை அடுத்து நீள் சதுரத்தில் ஒரு சம தளப்பரப்பு - கல்வெட்டுகளைப் பொறிப்பதற்கென்றே அமைந்தவாறு, பள்ளிச் சிறுவனின் 'சிலேட்டுப் பலகை' நீண்டு கொண்டு போவதைப்போல - நீள்கின்றது. இது 'ஜகதி' என்று குறிப்பிடப்பெறும். ஓரிடத்தில், பலகை வடிவில் அல்லாது பெரிய தாமரை இதழாக விரிந்திருந்தது. இந்த வடிவம் 'பத்ம ஜகதி' எனப்படும். ஒரு கலவையான ஜகதி அமைப்பு. ஜகதிக்கு மேல், 'குமுதம்' என்னும் அமைப்பு உள்ளது. இந்தப் பகுதியையும் பலவாறு அமைப்பார்கள். முப்பட்டை வடிவம், எண்பட்டை வடிவம், உருண்டு திரண்ட உருள் குமுதம், சிலம்பு உருவமுடைய குமுதம் ஆகிய பல்வேறு வடிவங்கள். இங்கு, சிலம்பு, எண்பட்டை, உருள் குமுதம் ஆகிய மூன்று வடிவங்கள் கலந்த கலவை காணப்படுகிறது. குமுதத்துக்கு மேலே அகன்ற சுவர்ப் பரப்பு. அதில், 'கும்ப பஞ்சரம்' என்னும் அமைப்பு. இரண்டு கும்ப பஞ்சரங்கள் இருந்தன. கும்ப பஞ்சரம் ஒரு பூச்சாடியை நினைவு படுத்தும். பூச்சாடியில் பூக்களை அடுக்கி வைத்தது போல, கும்ப பஞ்சரத்தின் மேல் பகுதியில் கொடி கொடியாய்த் தோரண வேலைப்பாடுகள் காணப்படுகின்றன.

நுழை வாயில்:

கோபுர நுழைவாயில், எல்லாக் கோயில்களிலும் உள்ளவாறு, உயர்ந்த வாயிலையும், நிலைக்கால்களில் கொடிகள் சுற்றிய இரு பெண்களின் சிற்பங்களையும் கொண்டுள்ளது. நுழைவாயிலைக் கடந்து கோயிலின் பெரிய வளாகத்தின் தொடக்கத்தில் நிற்கின்றோம். வழக்கமாக இந்த இடத்தில் நின்று பார்க்கையில் நம் பார்வைக்கு நேரே புலப்படுவன கோயிலின் கொடிக்கம்பமும், அடுத்துள்ள பலிபீடமும், நந்தியுமாகவே அமையும். ஆனால், இங்கு ஒரு மாற்றம். நாம் நிற்குமிடத்துக்கு இடப்புறம் சற்றுத் தள்ளியே கொடிக் கம்பமும், பலி பீடமும், நந்தியும் அமைக்கப்பட்டுள்ளன. கொடிக்கம்பம் பித்தளையால் வேயப்பட்டிருந்தது. நந்தி மண்டபத்தில் இருக்கும் நந்திச் சிற்பம், மற்ற கோயில்களிலிருந்து மாறுபட்ட தோற்றத்தைக் கொண்டிருந்தது. தரையில் அமர்ந்த தோற்றம் அல்ல. ஒரு தூணின் மீது அமர்ந்த தோற்றம். தூணில் கல்வெட்டு பொறிக்கப்பட்டிருந்தது. சரியாகப் படிக்க இயலவில்லை. (இங்கு தொடங்கிக் கோயிலை விட்டு வெளிவரும் வரை, பார்க்கின்ற கல்வெட்டுகள் அனைத்தையும் படிக்கமுடியவில்லையே என்ற ஏக்கம் தொடர்ந்து கொண்டே இருந்தது. கோயில் நிருவாகத்தாரிடம் முறையாக ஒப்புதல் பெற்றுக் கல்வெட்டுகளின் மீது வெண்ணீற்றையோ, வெள்ளை மாவையோ பூசியும், ஒளிப்படம் எடுத்தும் படிக்கவேண்டும் என்னும் அவா எழுந்தது. நிறைவேறுமா என்று தெரியாது. கல்வெட்டுகளைப் படிக்க ஒரு நாள் போதாது. ஆனால், வாய்ப்புக் கிடைக்கும்போது வந்து படிக்கவேண்டும்.)

கோயில் - உள் வளாகம்:

நாம் நிற்குமிடத்தின் வலப்பக்கம் தெற்கு நோக்கி வடிவுடை அம்மன் திருமுன். நமக்கு எதிரே சிறியதொரு மண்டபத்தில் அம்மனை நோக்கிய நிலையில் சிம்மச் சிற்பம். அம்மனுக்குரியது. அம்மன் திருமுன்னிலிருந்து தொலைவில் சிம்ம ஊர்தியை அமைத்திருப்பது ஒரு மாறுதலாக உள்ளது. நம் இடப்பக்கம் கொடிக்கம்பத்தை அடுத்து, ஜெகதாம்பிகை உடனமர் ஜெகந்நாதர் திருமுன். கிழக்குப் பார்த்து. அதை அடுத்து இடப்பக்கம், அமிர்த கடேசுவரர் திருமுன். இதுவும் கிழக்குப் பார்த்து. அமிர்த கடேசுவரர் திருமுன்னுக்கு எதிர்ப்புறம் மேற்கு நோக்கிய நிலையில் சூரியன், தேவார முதலிகள் நால்வர், சகஸ்ரலிங்கம், இராமநாதர் ஆகியோரின் சிறு திருமுன்கள். இவற்றைக் கடந்து மேற்கு நோக்கிச் சென்றால், ஒரு நீண்ட கோயில் முகப்பு. தென்கோடியில் தியாகேசர் திருமுன். அடுத்து முருகன் திருமுன். அதை ஒட்டிக் குழந்தை ஈசுவரர் திருமுன். சூரியன் திருமுன்னைக் கடந்து தெற்கே, கோயிலின் திருச்சுற்று மதிலை ஒட்டியவாறு வடக்கு நோக்கி வரிசையாக எழுந்தருளப்பெற்ற இருபத்தேழு (இ)லிங்கத்திருமேனிகள். இவை, பண்டு வெட்ட வெளியில் வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். தற்போது இவை அனைத்தையும் உள்ளடக்கியவாறு கூரையோடு கூடிய நீண்ட அறையாகக் கட்டியிருக்கிறார்கள். இருபத்தேழு (இ)லிங்கத்திருமேனிகளுக்கு மேல், கூரையில் விமானக்கூடு அமைத்திருக்கிறார்கள். இவ்விருபத்தேழு (இ)லிங்கத்திருமேனிகளும் இருபத்தேழு நாள்மீன்களுக்குரியவை. அதாவது இருபத்தேழு நட்சத்திரங்கள். அவரவர் அவரவர்க்குரிய (இ)லிங்கத்திருமேனியை வணங்கலாம்.

தியாகேசர் திருமுன்:

தியாகேசர் திருமுன்னின் முக மண்டபத்திலேயே வடக்கே ஒரு நுழைவாயில். அதற்குள் சென்றதும் நேர் எதிரே ஆடவல்லான் (நடராசர்) மண்டபம். நாம் வாயிலின் இடப்பக்கம் நடந்து வடப்பக்கமாகத் திரும்பியவுடன் கிழக்கு நோக்கி ஒரு வாயிலும், வாயிலின் இருபுறமும் இரு வாயிற்காவலர் (துவார பாலகர்) சிற்பங்களும் காணப்படுகின்றன. துவாரம் என்பது வாயிலைக் குறிக்கும் வட சொல். 'பாலக' என்பது, பாலகர் எனத் தமிழில் நாம் கருதும் இளம் பருவத்தினர் பொருளைத் தராது. 'PALAKA' என்னும் ஆங்கில ஒலிப்புடைய சொல். 'பால்' என்பது காத்தல் என்னும் பொருளமைந்த வடசொல். இந்தி மொழி அறிந்தோர் 'பால் போஷக்' என்னும் தொடரைத் தெரிந்திருப்பர். 'பால்' - காத்தல்; 'போஷ்' - வளர்த்தல். போஷ்->போஷாக்கு. மேற்படி வாயிலும், வாயிற்காவலர் சிற்பங்களும் ஆதிபுரீசுவரர் திருமுன்னுக்குரியவை.

ஆதிபுரீசுவரர் திருமுன்:

ஆதிபுரீசுவரரின் வாயிற்காவலர் சிற்பங்கள் காண மிகவும் அழகானவை. நல்ல உயரமும் பருத்த வடிவமும் கொண்ட இச்சிற்பங்கள் சோழர் காலக் கலைப்பாணிக்கு எடுத்துக்காட்டாய் நிற்பவை. இச்சிற்பங்களின் இருபுறமும் சுவர்களில் கல்வெட்டுகள். படிக்க இயலாதவாறு நிழலும் இருளும் உள்ள சூழல். நம் வலப்பக்கக் காவலர் சிற்பத்தை அடுத்து, வெளியேறும் வாயில் ஒன்று.

வாயிலுக்கு அருகில் வலக்கையில் மழு ஏந்திய சிவனின் சிற்பத் திருமேனி. மழுவாள் நெடியோன் என்னும் பெயர் நினைவுக்கு வந்தது. சிவனின் செவிகள் இரண்டிலும் ஒன்று போல் அணிகலன் இல்லை. வலது செவியில், மகர குண்டலமும், இடது செவியில் ஓலை அணியும் காணப்படுகின்றன. உடலில் வெள்ளை ஆடை அணிவிக்கப்பட்டிருந்ததால் இச்சிற்பம் சிவனின் அறுபத்து நான்கு வடிவங்களில் எது என்பதை அறியவில்லை. அறுபத்து நான்கு திருவடிவங்களையும் இனம் காணும் சிற்ப அறிவும் நமக்கில்லை. இந்த வாயிலைக் கடந்ததும் உள்ள சுவரின் மேல், வெயில் பட்ட பரப்பில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருந்தன. பல முறை முயன்று ஒரு முயற்சியில் ஒளிப்படம் எடுக்க இயன்றது.

தூங்கானை மாடம்:

ஆதிபுரீசுவரர் கருவறையும், விமானமும் தூங்கானை மாட வடிவிலானவை. அதிட்டானம், கோட்டச் சிற்பங்கள் அனைத்தும் அழகானவை. கோட்டச் சுவர்களில் கல்வெட்டுகள். சுற்றுப்பாதையில் உள்ள தூண்களிலும் கல்வெட்டுகள். இவை முன்னரே மேலே வர்ணிக்கப்பட்டுள்ளன. சுற்றுப்பாதையில், கற்கூரையில் சிறு சிறு திறப்புகளை அமைத்திருக்கிறார்கள். வெயிலின் ஒளி உள்ளே பாய்வதற்கான அமைப்பு. வெயிலின் ஒளி, மெல்லிய வெண்திரைச் சீலையை விரித்துத் தொங்கவிட்டதைப் போலச் சிறு திறப்புகளின் அருகில் குறுகிச் சிறுத்தும், தரையைத் தொடுகின்ற நிலையில் அகன்று விரிந்தும் பாய்ந்து இழிந்து பரவியது ஓர் அழகான காட்சி. மேற்குச் சுவரில் மாலவனின் சிற்பம் அழகு. அடுத்துக், கருவறையின் வடக்குப் பகுதியில் நிலவறை போன்ற பகுதியில் கருவறை அமைப்போடு கொற்றவை எழுந்தருளியிருத்தல் இக்கோயிலின் ஒரு சிறப்புக்கூறு...



கோட்டச் சிற்பம் - பிள்ளையார்



கோட்டச் சிற்பம் - மாலவன்

வட்டப்பாறை அம்மன்:

மேற்படி அம்மன் (கொற்றவை), வட்டப்பாறை அம்மன் என்று அழைக்கப்படுகிறாள். கருவறைக்கு முன்புறம் பாறைத்தரையில் வட்டவடிவச் சக்கரம் வடிக்கப்பட்டுள்ளது. இது ஒரு தாந்திரிக வழிபாட்டு மரபு போலத் தெரிகின்றது. அசுரனைக் கொன்ற துர்க்கையின் சினம் குறையா உள்ளத்தைக் குளிர்வித்துத் தணிக்கும் வழியாய் தாந்திரிக எந்திரத்தை நிலை நிறுத்தம் (தாபனம்) செய்திருப்பதாகப் பூசையாளர் கூறினார். வட்டக்கல் இருக்கும் இடத்தில் கிணறு இருந்ததாகவும் எந்திரத் தாபனம் செய்த பின்னர் கிணற்றை மூடி வட்டக்கல்லை வைத்திருப்பதாகவும் அவர் கூறினார். இக் கொற்றவைத் தாயைக் குலதெய்வமாக விசுவகர்ம மக்கள் வழிபடுகிறார்கள் என்பதும், ஒவ்வொரு மாதமும் முழுநிலாக் காலத்தே இம்மக்கள் இந்த வட்டப்பாறை அம்மனுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்துகிறார்கள் என்பதும் கூடுதல் செய்தி.

வட்டப்பாறை அம்மன் அல்ல - இவள் வட்டப்பிறைப் பிடாரி:

வட்டப்பாறை அம்மன் என்று இன்று மக்கள் வழிபடும் சக்தி அன்னை, கல்வெட்டில் வட்டப்பிறைப் பிடாரியார் என்று குறிக்கப்பெறுகிறாள். இடைக்காலத்திலும் அதற்குச் சற்று முன்னரும் கொற்றவைக் கடவுளைப் 'பிடாரியார்' என்று பெயரிட்டு அழைக்கும் வழக்கு இருந்தது. சோழர் காலக் கல்வெட்டுகளில் 'பிடாரியார் கோயில்' என்று பல இடங்களில் வருவதைக் காணலாம். பிடாரி என்னும் இச்சொல், சமணம் வழங்கியது எனக் கருதலாம். 'படாரர்' (ஒலிப்பு : BHATARAR) என்னும் சொல் சமணத்தில், துறவிகள், கல்வி கற்பிக்கும் ஆசான்கள், கடவுளர் ஆகியோரைக் குறிக்கும். அதன் பெண்பாற்பெயர்

‘படாரி’ என்பதாம். இப்பெயர், கொற்றவைக் கடவுளுக்கு வழங்கியது. இப்பெயரே, ‘பிடாரி’ என மருவியது கண்கூடு. கொடியோரைக் கொல்லச் சினம் கொண்ட உருவுடன் திகழும் கொற்றவையை ஒத்த, சினம் காட்டும் பெண்களை ’அடங்காப் பிடாரி’ என்று மக்கள் வழங்கியது இக்காரணம் கொண்டே எனலாம். தமிழகத்தின் தென்கோடி மற்றும் கேரளக் கல்வெட்டுகள், அரசனையும், கடவுளையும் ‘படாரர்’ என்று குறிப்பதைக் காணலாம். (‘பழாரர்’ என்று திரிந்து வழங்குவதும் உண்டு)

சைவ சமயப் பெரியார் சங்கரர் இக்கோயிலுக்கு நேரில் வருகை தந்ததாகவும் கொற்றவைக் கடவுளின் சினத்த ஆற்றலை எந்திரத் தாபனம் செய்து கட்டுப்படுத்திக் கிணற்றுள் ஒடுக்கியபின்னர் கிணற்றின் வாய்ப்புறத்தைக் கல் கொண்டு மூடியதாகவும், கடுஞ்சினம் மறைந்து அன்னை அமைதியான முகம் காட்டினாள் என்றும் ஒரு செய்தி கூறுகிறது. (SOUTH INDIAN SHRINES - by P.V. JAGADISA AYYAR)

கௌளீசுவரர் கோயில்:

தியாகேசர் திருமுன்னுக்குப் பின்புறம் ஒரு சிறிய திருமுன். கௌளீசுவரர் என்று பெயர் எழுதப்பட்டுள்ளது. முதலில், கௌளீசுவரர் என்பதன் பொருள் புலப்படவில்லை. பின்னர், தொல்லியல் நண்பர் கூறியபிறகே பொருள் விளங்கியது. கௌளீசுவரர் என்பது லகுளீசர் என்பதன் மருவிய வடிவம். கருவறைக்குள் இருப்பது சிவ உருவம் அன்று. லகுளீசர் சிற்பம் என்கிறார்கள். இருளில் இறையுருவத்தைப் பார்க்கவில்லை. இந்தத் திருமுன்னின் அதிட்டானப் பகுதியில் ஒரே ஒரு கல்வெட்டு காணப்பட்டது. வெயிலின் காரணமாக நின்று நேரமெடுத்துச் செய்யவேண்டிய பணி. முன்னர்க் குறிப்பிட்டவாறு, கல்வெட்டுகளைப் படித்துச் செய்திகள் அறிந்துகொள்ள ஒரு நாள் போதாது. இந்த லகுளீசர் சைவ சமயத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய பாசுபத சமயத்தைத் தோற்றுவித்தவர்.

கௌளீசுவரர் கோயிலை அடுத்து வளாகத்தில் சிறிது தொலைவு நடந்தால் மீனாட்சி சுந்தரர் திருமுன் உள்ளது. இடப்பக்கத்தில், கோசாலை. கோசாலையை ஒட்டிச் சற்றுக்கிழக்கே முன்னர்க் குறிப்பிட்ட இருபத்தேழு (இ)லிங்கத்திருமேனிகள் எழுந்தருளுவிக்கப்பட்ட பகுதி. இதன் அருகில் கம்பிகளால் அடைக்கப்பட்ட நீள் சதுர வளாகம். அதனுள், ஆங்காங்கே மரங்களுக்கிடையில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்ட பலகைக் கற்களை மேடையிட்டுப் பதித்து வைத்துள்ளனர். இந்தத் தனிக்கல்வெட்டுகள் பல்லவர் காலக் கல்வெட்டுகள் என்று அறிகிறோம். (கீழே, ‘கல்வெட்டுகள்’ என்னும் தலைப்பைக் காண்க).

ஒற்றி ஈசுவரர் கோயில்:

கோயிலின் பெரிய வளாகத்தில் தியாகேசர் - ஆதிபுரீசுவரர் கோயில்களுக்குப் பின்புறம், வடமேற்குப்பகுதியில் ஒற்றி ஈசுவரர் கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் காலம் சோழர் காலம் அன்று எனக் கேள்விப்படுகிறோம். இங்கு கல்வெட்டுகளும் இல்லை. பிற்காலக் கட்டுமானம்.

நகரத்தார் கட்டுவித்த கோயிலாக இருக்கக் கூடும்? பட்டினத்தாரின் உருவச் சிலை, வள்ளலாரின் உருவச் சிலை ஆகியன தூண்களில் காணப்படுகின்றன.

கல்வெட்டுகள்:

முருகன் திருமுன்னில் கருவறையின் தெற்கு அதிட்டானக் குமுதத்தில் (முப்பட்டைக் குமுதம்) நான்கு வரிகள் கொண்ட ஒரு கல்வெட்டும், நந்திச் சிற்பத்தூணில் ஒரு கல்வெட்டுப் பொறிப்பும் நீக்கி, இக்கோயில் வளாகத்தில் ஆதிபுரீசுவரர் கோயிலில் மட்டுமே கட்டுமானப் பகுதியில் கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன. இவை தவிர, இருபத்தேழு (இ)லிங்கத்திருமேனிகள் அமைந்துள்ள பகுதியில், கம்பி வேலியிட்ட இடத்தில், மேடையிட்டுச் சிமெண்ட்டுப் பூச்சுகளில் பதித்த பத்துப்பன்னிரண்டு பலகைக் கற்களில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவை, வானிலைச் சூழல் கேடு காரணமாகவோ, அன்றித் திருப்பணியின் பெயரால் நிகழும் கேடு காரணமாகவோ தேய்ந்தழிந்த நிலையில் உள்ளன. இவற்றின் பாடங்களை ஆங்கிலேயர் காலத்துப் பதிவு நூல்களில் மட்டுமே காண இயலும். நேரடியாகக் கல்வெட்டுகளைப் படித்து மகிழும் சூழல் இல்லை. வருங்காலத்தில், கல்வெட்டு எழுத்துகளைப் படிக்கக் கற்றுக்கொண்ட ஆர்வலர்களும் பயிற்சிக்குக் கூடக் கல்வெட்டுகளைக் காண இயலாது போகுமோ என்னும் அச்சம் எழுகிறது. கோயில்களைப் புதுப்பிக்கிறோம் என்று திருப்பணி செய்யும் சேவையாளர்கள் கல்வெட்டுகளைத் தொடர்ந்து அழித்து வருதல் கண்கூடாக நிகழ்கிறதே.

நேரில் படித்த கல்வெட்டுகள்:

(அ) ஆதிபுரீசுவரர் கோயிலில், தென் சுற்றில், தென்முகக் கடவுள் சிற்பத்துக்கருகில் ஆர்வலர் ஒருவர் வெண்ணீற்றால் பூசியிருந்த ஒரு துண்டுப்பகுதியைப் படித்தேன். அதன் பாடம் வருமாறு :

தென்சுவரில் கல்வெட்டு - பட்டிகைப்பகுதி - பாடம்:

1 ழ இளங்கோ வேளார் இத்தேவர் பண்டாரத்து ஒடுக்கின அன்றாடு நற்காசு இருநூற்று நாற்பது இக்காசு இருநூற்று நாற

2 னையூர் ஊரோங் காசு அறுபது கொண்டு விற்றுக்குடுத்த நீர் நிலத்துக்குக் கீழ்பாற்கெல்லை பனிச்சை புலத்துக்கு (இ) சிறு கண்

3 யாலுங் குளங்களாலும் மடுக்களாலும் வாய்க்கால்களாலும் கிணற்றுகளாலும் (நீரழியாத) வண்ணம் பாச்சியும் எறிச்சுங்

4 சு நூற்று நாற்பத்து நாலு இக்காசு நூற்று நாற்பத்து நாலும் ஆட்டாண்டு தோறும் (நின்றிறை)யாக இறுப்பதாக இக்காசுக்கு நிவந்தஞ்செய்

கல்வெட்டுச் செய்தி:

முழுமையாகப் படிக்காத இக்கல்வெட்டின் துண்டுப்பகுதிலிருந்து மிகுதியான செய்திகள் கிடைக்காதெனினும், கல்வெட்டின் இந்த வரிகள் தெரிவிக்கும் செய்திகளைப் பார்ப்போம். கோயிலுக்கு நிலம் கொடையளித்த செய்தி பெறப்படுகிறது. வீரசோழ இளங்கோ வேளார் என்பவர் கோயில் பண்டாரத்தில் (கருவூலத்தில்) இருநூற்று நாற்பது காசுகள் ஒடுக்கியது

(செலுத்தியது) அறிகிறோம். இவர், சோழ நாட்டு உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரமுர் நாட்டு நடார் கிழார் ராஜராஜன் பரநிருபராக்ஷஸநாரான வீரசோழ இளங்கோ வேளார் என்பதாகத் தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி-3, க.வெ. எண் : 64 வாயிலாக அறிகிறோம். 'அன்றாடு' என்னும் சொல் குறிப்பிடத்தக்கது. கல்வெட்டுகளில் காணப்படும் இச்சொல், "கல்வெட்டு குறிக்கின்ற காலத்தில் வழக்கில் உள்ள" என்னும் பொருளைத்தரும். இவரிடம் பெற்ற காசின் ஒரு பகுதி (அறுபது காசு) காசினைக் கொண்டு ஊர்ச்சபையினர் ஊர் நிலம் ஒன்றை விற்றுக் கொடுத்துள்ளனர் எனக்கருதலாம். இந்த நிலத்தை இளங்கோ வேளார் கோயிலுக்குக் கொடையாக அளித்தார் எனக்கொள்ளலாம். கொடை நிலம், நன்செய்ப் பயிர் விளையும் நல்ல நீர் நிலம் என்பது அறியப்படுகிறது. நிலத்தின் எல்லையும் கல்வெட்டில் விளக்கப்படுகிறது. ஊரார், நூற்று நாற்பத்து நாலு காசினை அரசுக்கு இறையாகச் (வரியாக) செலுத்துகிறார்கள். இந்த வரி, நின்றிறை (மாறாத வரி - fixed tax) எனத் தீர்மானம் ஆகிறது.

(ஆ) முருகன் கருவறை - தெற்கு அதிட்டானக் குமுதத்தில் உள்ள கல்வெட்டு

கல்வெட்டுப்பாடம்:

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு ஆறு வீரநரஸிம்ஹ தேவனான யாதவராயன் ஓலை ஜெயங்கொண்டசோழ மண்டலத்து புழற்கோட்டமான விக்கிரம சோழ வளநாட்டு உடையார்

2 திருவொற்றியூருடைய நாயனார் கோயிற்தானத்தார் கண்டு திருவொற்றியூருடைய நாயனார் கோயிற் திருச்சுற்றாலையில் நாம் எழுந்தருளுவித்த நாயனார் வீரநரஸிம்ஹ ஈச்வரமுடைய நாயனாற்கு தேவதான இறையிலியாக விட்டுக் கொடுத்தது

3 நாயறு நாட்டுப் பெரியமுல்லைவாயில் நாற்பால் எல்லையும் உள்பட்ட வேலி நிலம் ...... நிலம் முப்பதிற்று வேலியும் நன்செ(ய்) புஞ்செ(ய்) (உட்பட) எப்பேற்பட்டமையும் வெட்டியுஞ் சிறுபாடிகாவல் அரிமுக்கையுங் கண்காணி எடுத்துக்கொ. . . . . .

4 யுட்பட்ட நெல்லாயமும் (காசாயமும்) உட்பட்ட . . . . . . சந்திராதித்தவரை செல்வதாக . . . . . இப்படிக்குக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள் . . . . . . .

கல்வெட்டுச் செய்தி:

இக்கல்வெட்டு, சோழ அரசன் மூன்றாம் இராசராசன் காலத்தது. அவனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டது. அவனது ஆட்சிக் காலம் கி.பி. 1216-1246. எனவே கல்வெட்டின் காலம் கி.பி. 1222 ஆகும். கல்வெட்டைப் பொறித்தவன் வீரநரஸிம்ஹ தேவனான யாதவராயன் என்பவன். இவன் மூன்றாம் இராசராசன் காலத்தில் சோழரின் மேலாண்மையின் கீழ் இப்பகுதியில் ஆட்சி செய்த குறு நில அரசன் அல்லது தலைவன் ஆவான். இவன் தன் பெயரில் வீரநரஸிம்ஹ ஈச்வரமுடைய நாயனாரை ஒற்றியூர்க் கோயில் சுற்றாலையில் எழுந்தருளுவித்தான் என்று கல்வெட்டு கூறுகிறது. அதாவது வீரநரசிம்ஹ ஈச்வரம்

என்னும் பெயரில் சிறு கோயிலை எடுப்பித்தான். கோயிலை எடுப்பித்த இக்கல்வெட்டின் இருப்பிடம் தற்போது சுப்பிரமணியர் கோயில் என்று வழங்குவதால், இக்கோயிலே வீரநரசிம்ஹ ஈச்வரம் ஆகும் என்றும், கோயிலில் எழுந்தருளப்பெற்ற இறைவன் சிவலிங்கம் என்றும் உறுதியாகக் கூறலாம். காலப்போக்கில் முருகன் கோயிலாக மாற்றம் பெற்றது எனலாம். இந்தக் கல்வெட்டு இல்லையெனில் இச்செய்தி தெரியவராமல் போயிருக்கும். அரசன் நேரடியாகத் தன் ஆணையைத் தெரிவிக்கும் ஓலை மற்றும் கல்வெட்டுகளில்தாம் “நம் ஓலை” என்று வரும். இந்தக் கல்வெட்டிலும் அவ்வாறு வருகிறது.

தான் எடுப்பித்த வீரநரசிம்ம ஈசுவரம் கோயிலுக்கு மேற்படிச் சிற்றரசன் பெரியமுல்லைவாயில் ஊரிலிருக்கும் முப்பது வேலி நிலத்தைத் தேவதான இறையிலியாக (வரிகள் நீக்கி) அளிக்கிறான். பெரியமுல்லைவாயில் என்னும் இவ்வூர், நாயறு நாட்டில் அமைந்திருந்தது. நாயறு நாட்டில் நாயறு, மீஞ்சூர், திருக்காட்டுப்பள்ளி, புதூர், வல்லூர், பெரியமுல்லைவாயில் ஆகிய ஊர்கள் இருந்தன. பெரியமுல்லைவாயில் என்னும் ஊர், திருமுல்லைவாயிலினின்றும் வேறுபட்டது. ’கூகுள்’ வரைபடத்தில் மீஞ்சூரைச் சுற்றி நாயறு, புதூர், வல்லூர் ஆகிய ஊர்கள் இருப்பதைக் காணலாம். ஆனால் பெரியமுல்லைவாயில் காணப்படவில்லை.

தேவதான நிலத்துக்கு, நெல்லாயம், காசாயம், வெட்டி, பாடிகாவல், அரிமுக்கை ஆகிய வரிகள் விலக்களிக்கப்பட்டிருந்தன.

இக்கல்வெட்டு, இந்தியத் தொல்லியல் அளவீட்டு ஆய்வுத்துறையின் 1912-ஆம் ஆண்டின் ஆண்டறிக்கையில் பதிவாகியுள்ளது. ஆனால், கல்வெட்டின் பாடம் எந்த நூலில் உள்ளது எனத் தெரியவில்லை.

ஒளிப்படத்தில் கண்ட கல்வெட்டுகள்:

ஆதிபுரீசுவரர் கோயில் வாயிற்காவலர் சிற்பத்தை ஒட்டியுள்ள வெளிவாயில் சுவரில் தெரிந்த கல்வெட்டுப்பகுதியை முன்னர்க் குறித்தவாறு வெயிலின் வெளிச்சத்தில் மொத்தமாக ஓர் ஒளிப்படமாக எடுத்திருந்தேன். இப்படத்தில் ஐந்து கல்வெட்டுகள் கலந்து காணப்பட்டன. முழுக்கல்வெட்டாக இரு சிறு கல்வெட்டுகளும், முழுமையாகப் புலப்படாத பெரிய கல்வெட்டுகள் மூன்றின் பகுதிகளும் இருந்தன. முழுக்கல்வெட்டுகளில் காலத்தால் முற்பட்டது மூன்றாம் குலோத்துங்கனின் முப்பத்தொன்றாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டாகும். அடுத்த முழுக்கல்வெட்டு, விசயநகர அரசர் தேவராயரின் காலத்தது.

(அ) மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டுப்பாடம் (முழுக்கல்வெட்டு)

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் மதுரையுமீழமுங் கருவூரும் பாண்டி

2 யன் முடித்தலையுங் கொண்டருளி வீர அபிஷேகமும் பண்ணியருளின

3 ஸ்ரீதிரிபுவன(வீர்) தேவற்கு யாண்டு முப்பத்தொன்றாவது உடையார்
4 திருவொற்றியூருடைய நாயனாற்குச் சந்தி விளக்கு எரிப்பதற்கு வெண்கு
5 ன்றக்கோட்டத்துக் குளத்தூரில் குளந்தையாண்டார் மட
6 த்திலிருக்கும் பெற்றான் மகன் . . . . . . முகத்தான் விட்ட பசு ஒன்று
7 நாகு ஒன்று கன்று ஒன்று

பசு-நாகு கன்று கொடை



மூன்றாம் குலோத்துங்கன் கல்வெட்டு

கல்வெட்டுச் செய்தி:

இக்கல்வெட்டு, மூன்றாம் குலோத்துங்கன் காலத்தது. அவனுடைய ஆட்சிக்காலம் கி.பி. 1178-1218. கல்வெட்டு அவனுடைய முப்பத்தொன்றாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டதாகையால் கல்வெட்டின் காலம் கி.பி. 1209. திருவொற்றியூர் கோயிலில் சந்திவிளக்கெரிக்க பசு ஒன்றும் அதனுடன் கன்றுகள் இரண்டும் கொடையாக அளிக்கப்பட்டன. கன்றுகளில் ஒன்று பெண் கன்று. நாகு என்று கல்வெட்டுக் குறிக்கிறது. ஆண்கன்று, கன்று என்னும் பொதுப்பெயராலேயே குறிக்கப்படுகிறது. கொடையாளி, குளத்தூரில் இருக்கும் குழந்தையாண்டார் மடத்தைச் சேர்ந்த பெற்றான் என்பவனுடைய மகன் என்று கல்வெட்டு கூறுகிறது. குளத்தூர் இன்றும் சென்னைப்பகுதியில் உள்ளது. 12-ஆம் நூற்றாண்டில் வெண்குன்றக்கோட்டம் என்னும் நாட்டுப்பிரிவில் அமைந்திருந்தது. வெண்குன்றம் என்னும் பெயரில் தற்போது ஊர் காணப்படவில்லை. திருவொற்றியூர் புழல் கோட்டத்தில் இருந்தது. புழல் தற்போதும் உள்ள ஊர்.

(ஆ) விஜயநகரர் காலத்துக் கல்வெட்டுப்பாடம் (முழுக்கல்வெட்டு)

1 வீரஸ்ரீப்ரதாப தேவராயற்குச் செல்லாநின்ற க்ரோதி வருஷம் கும்ப நாயற்று
2 பூர்வ பக்ஷத்து பௌர்ணையும் சனிக்கிழமையும் பெற்ற மகத்து நாள் ஜயங்கொண்
3 ட சோழமண்டலத்து புழற்கோட்டத்து நாயினார் திருவொற்றியூர் உடைய நாயினார்
4 ஸ்ரீபண்டாரத்துக்கு புழல் நாட்டில் மணலியில் ஊரவரோம் கல்வெட்டிக் குடுத்தபடி
5 ஸ்ரீபண்டாரம் படம்பக்கநாயகப் பேரளத்தில் எல்லைக்கல்லுக்கு மேற்க்கு எங்கள் எல்

6 லையில் அளங்கட்டி உப்புப்பயிற் செய்யலாந மட்டு இத்தனையும் குடிநீங்காத் தேவதா

7 நம் ஆக உடையவற்கு நாங்கள் குடுத்த அளவுக்கு இந்த எல்லை உப்புப்பயிற்(ச்) செய்யலாந மட்டு இத்தனை

8 யும் திருச்சூலத்தாபனம் பண்ணிக்கொண்டு இந்த உப்புப்பயிற்ச் செய்து குடிவாரமளங்களுக்கு விட்

9 டு மேல்வாரம் முத[ல்] கைகொண்டு னாயினார் திருமாசித் திருநாள் ஏழாந்திருநாள் குறவறுப்ப உள்ள

10 து எங்கள் உபயம் (ஆக) சந்திறாதித்தவரைக்கும் குடி நீங்கா தேவதாநமாக கல் வெட்டிக் குடுத்தோம் மணலியில் ஊரவரோம் உ-



விஜய நகரர் தேவராயர் கல்வெட்டு

கல்வெட்டுச் செய்தி:

இக்கல்வெட்டு, விஜயநகர அரசர் முதலாம் தேவராயர் காலத்தைச் சேர்ந்தது. இவரது ஆட்சிக்காலம் கி.பி. 1406-1422. கல்வெட்டில் குரோதி வருடம் குறிக்கப்பட்டுள்ளது. குரோதி வருடம் அறுபது ஆண்டுகள் கொண்ட சுழற்சியில் கி.பி. 1424-ஆம் ஆண்டு அமைகிறது. தேவராயரின் ஆட்சிக்காலத்துள் குரோதி ஆண்டு அமையவில்லை. எனவே, தமிழ் ஆண்டுக்குறிப்பு பிழையாக இருக்கலாம். கும்ப நாயறு என்பது கும்ப ஞாயிறு என்பதன் திரிந்த வடிவம். இது மாசி மாதத்தைக் குறிக்கும். (மேஷ இராசி முதல் மீன இராசி வரை உள்ள பன்னிரண்டு இராசிப்பெயர்களைச் சித்திரை முதல் பங்குனி வரை உள்ள மாதங்களுக்குச் சூட்டும் வழக்கு இடைக்காலத்தில் இருந்தது. கல்வெட்டில் வானிலைக் குறிப்புகள் உள்ளன. 'பூர்வ பக்ஷம்' என்பது வளர்பிறைக்காலம். பௌர்ணை என்பது முழுநிலாக்காலம் (பௌர்ணமி). மகத்து நாள் என்னும் தொடர், மக நட்சத்திரத்தைக் குறிக்கும்.

திருவொற்றியூர் கோயிலுக்கு உப்பளம் இருக்கும் ஊர்ப்பகுதியை குடிநீங்காத் தேவதானமாகக் கொடை அளிக்கிறார்கள் மணலி ஊரவர். உப்பளம் மூலமாகப் பெறும் வருவாயில் மேல்வாரம் என்னும் அரசுக்குச் செலுத்தவேண்டிய வரியைக் கோயில் ஸ்ரீபண்டாரத்தில் (கருவூலத்தில்) செலுத்துவதாகவும், உப்பளக் குடிகளுக்குக் குடிவாரம் என்னும் வருவாய்ப் பகுதியை அளிப்பதாகவும் கோயில் ஸ்ரீபண்டாரத்துக்கு ஒப்பந்தம் எழுதிக்கொடுக்கிறார்கள் ஊரவர். ஏற்கெனவே,

'படம்பக்க நாயகப் பேரளம்' என்னும் உப்பளம் மணலி அல்லது திருவொற்றியூர்ப் பகுதியில் இருந்துள்ளமை கல்வெட்டில் குறிக்கப்பெறுகிறது. உப்பளங்கள் பெரும்பாலும் அரசர் பெயர்களால் அழைக்கப்படும். இங்கிருந்த உப்பளம் திருவொற்றியூர்க் கோயிலின் இறைவன் பெயரால் அழைக்கப்படுகிறது.

உப்பினை 'உப்புப் பயிர்' என்று கல்வெட்டு குறிப்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். அக்காலத்தே, நெல்லுக்கு நிகரான மதிப்பை உப்பும் பெற்றிருந்தது. நெல் போலவே, உப்பையும் ஒரு பயிராகவே கருதினார்கள். வேளாண் கூலியாக நெல்லும் (சம்பு) உப்பும் (அளம்) கொடுக்கப்பட்டன என்பதிலிருந்து இதை உணரலாம். இதற்குச் சான்றாக, தமிழ் ஆய்வறிஞர் தேவநேயப் பாவாணரின் கூற்றைக் காண்க :

"பழங்காலத்தில் சம்பளம் கூலமும் (கூலமாகக் கொடுக்கப்படுவது கூலி.) உப்புமாகக் கொடுக்கப்பட்டது. கூலம் என்பது தானியம் . கூலத்திற் சிறந்தது நெல்லாதலின், நெல்வகையிற் சிறந்த சம்பாவின் பெயராலும், உப்பின் பெயராலும், சம்பளம் என்னும் பெயர் உண்டாயிற்று. சம்பும் அளமும் சேர்ந்தது சம்பளம். சம்பு என்பது சிறந்த நெல்வகைக்கும் சிறந்த கோரை வகைக்கும் பொதுப்பெயர்.

ஓங்கிவளர்ந்த சம்பா நெற்பயிரும் சம்பங்கோரையும் ஒத்த தோற்றமுடையனவா யிருத்தல் காண்க.நெல்லைக் குறிக்கும் சம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகின்றது. உகரவீற்றுச் சொற்கள் ஆகார வீறு பெறுவது இயல்பே.
எ-டு: கும்பு - கும்பா, தூம்பு - தூம்பா, குண்டு - குண்டா. கும்புதல் = திரளுதல்."

திருவொற்றியூர் கோயிலில் மாசி மாதம் 'திருமாசித்திருநாள்' என்னும் பெயரில் ஏழு நாள்கள் பெரியதொரு விழாக் கொண்டாடியுள்ளனர் என்பது அறியவருகிறது. இவ்விழாவுக்கான செலவினங்களுக்கு மேற்படி உப்பள வருவாயைப் பயன்படுத்தியுள்ளனர். குடி நீங்காத் தேவதானம் என்னும் தொடரும் கருதுதற்குரியது. மணலி ஊரவர் தங்கள் உப்பளத்தைக் கோயிலுக்குக் கொடை அளித்தாலும், அங்கு பணிபுரிந்த குடிகள் தொடர்ந்து பணியில் நீடிப்பார்கள் என்றும் அவர்கள் அப்பணியிலிருந்து நீங்காமல் இருக்கலாம் என்று உறுதி அளிப்பதையே 'குடி நீங்காத் தேவதானம்' என்னும் தொடர் குறிக்கிறது.

(இ) பெரிய கல்வெட்டு - முழுக்கல்வெட்டையும் காட்டாத ஒளிப்படம் பகுதி - 1
கல்வெட்டின் பாடம்:

1 கோவிராசகேசரிபன்மரான த்ரிபுவனச் சக்கரவத்(தி)கள் ஸ்ரீராஜாதிராஜதேவர்க்கு யாண்டு ஒன்பதாவது ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற்கோட்டத்து

2 (ஸ்ரீ)காரியம் அரியபிரான் ப(ட்)டனும் சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச்வர பண்டிதனும் காலும் பிடாருஞ்செய்துகொண்ட சோழமண்டல பிடாரனு

3 பங்குனியுத்திரத்து ஆறாந்திருநாளான புதன்கிழமையும் ஏகாதசியும் பெற்ற ஆயிலையத்தன்று படம்பக்கநாயக தேவர் திருமகிழின் கீட் திருவோலக்கஞ்செய்தெழுந்தரு

4 (வி)ண்ணப்பஞ்செய்ய நம்மூர்களில் இகணையூர் அமுதந் கிழவன் பெரியான் சோமனுக்குத் தண்டீசன் விலையாக விற்றுக் காணியாகக் கொடுக்கவென்று திருவாய்மொழி

5 (பெரியா)ன் சோமனுக்கு ஸ்ரீபண்டாரத்திறையிறுக்கவும் இவநுக்குமிவன் வம்சத்தார்க்கும் விற்றொற்றி ப்ரதிக்ரயத்துக்குரித்தாவதாக விற்றுக் கொடுத்தோம் இப்படிக்கு இவை ம

6 (இ)ப்படிக்கு இவை சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச்வர பண்டிதன் எழுத்து ||- இப்படிக்கு இவை காலும் பிடாருஞ் செய்துகொண்ட சோழமண்டல பிடாரன் எழுத்து||- இப்படிக்

7 (க்கினான்) எழுத்து ||-

பங்குனியுத்திரத்து ஆறாந்திருநாள்:



ஸ்ரீராஜாதிராஜதேவர்க்கு யாண்டு ஒன்பதாவது

கல்வெட்டுச் செய்தி:

இக்கல்வெட்டு, தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி ஐந்தில் காணப்படுகிறது. (க.வெ. எண் : 1359) இரண்டாம் இராசாதிராசன் காலத்தது. ஆட்சியாண்டு ஒன்பது. இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1166-1178 என்பதனால், கல்வெட்டு பொறிக்கப்பட்ட ஆண்டு கி.பி. 1175 ஆக அமையும்.

திருவொற்றியூர்க் கோயிலில் கொண்டாடப்பட்ட பங்குனி உத்திரத்திருநாள் விழாவின்போது ஆறாந்திருநாளில் அரசன், திருவோலக்கம் செய்தருளினான் என்கிறது கல்வெட்டு. (ஸ்ரீ)காரியம் அரியபிரான் ப(ட்)டன், சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச்வர பண்டிதன், காலும் பிடாருஞ்செயங்கொண்ட சோழமண்டல பிடாரன் ஆகியோர் விண்ணப்பம் செய்ய, அரசன், இகணையூர் அமுதங் கிழவன் பெரியான் சோமனுக்குத் தண்டீசன் விலையாக (நிலம்) விற்றுக் காணியாகக் கொடுக்கவென்று திருவாய் மொழிந்தருளுகின்றான். பயிரிடப்படாமல் கிடந்த நிலங்களைப் பயிர் செய்துகொள்ளுமாறு செய்யப்பட்ட இந்த ஏற்பாட்டின்படி, நிலத்தை விலைக்குப் பெற்றுக்கொண்ட அமுதன் கிழவன் பெரியான் சோமன் பொறுப்பேற்றுக் கொண்டு கோயில் ஸ்ரீபண்டாரத்துக்கு (கோயில் கருவூலம்) வரி செலுத்த ஒப்புக்கொள்கிறான். மேற்படி நிலம் பெரியான் சோமனுக்கும் அவன்

சந்ததியாருக்கும் உடைமை என்றும் அவர்கள் விற்கவும், அடைமானம் (ஒற்றி) வைக்கவும் உரிமையுள்ளவர் என்று விற்பனை ஆவணம் குறிக்கிறது. சோமசித்தாந்தம் வக்காணிக்கும் வாகீச்வர பண்டிதன், காலும் பிடாருஞ் செயங்கொண்ட சோழமண்டல பிடாரன் ஆகியோர் சான்றொப்பம் இடுகிறார்கள். இக்கல்வெட்டைப் படித்தபோது தெரிந்துகொண்ட ஒரு சுவையான செய்தி கீழ் வருமாறு:

இக்கல்வெட்டில், மூன்றாம் வரியின் சில எழுத்துகளை நான் பிழையாகப் படித்தேன். அவ்வெழுத்துகள் ஆவன:

தி ரு ம கி ழி ள கி ட

கல்வெட்டுகளில், எழுதப்பட்ட முறைப்படி நான் படித்தது சரியே. பிழையன்று. ஆனால், கல்வெட்டு எழுத்துகள் எழுதும்போது மெய்யெழுத்துக்குப் புள்ளியிடல் இருக்காது. சில போது எழுத்தமைதி, "ள", "ன" வேறுபாடு காட்டாது. அந்த வகையில், நான் "ன்" எழுத்தைப் புள்ளியின்றியும் "ள" கரமாகவும் படித்தது ஒரு பிழை. "கி" எழுத்தை நெடிலாகப் படிக்காதது மற்றொரு பிழை. அது போலவே, "ட" கர எழுத்தைப் புள்ளியிடாது படித்ததும் பிழை. இப்பிழைகளால், "திருமகிழிளகிட" எனப் படித்ததால் பொருள் விளங்கவில்லை. திருமகிழ்+ இளகிடக எனக்கொண்டு சரியான பொருளை உணர இயலவில்லை. பின்னர், சுந்தரர் கதையும், மகிழ மரமும் பற்றி அறிந்த பின்னரே கல்வெட்டுச் சொல் "திருமகிழின் கீட்" (மகிழின் கீழ்) என்பதும் அதன் சரியான பொருளும் தெரியவந்தது. குடவாயில் பாலசுப்பிரமணியம் அவர்கள் அண்மையில் கோவையில் 'வாணவராயர் அறக்கட்டளை' சார்பாகச் சிறப்புச் சொற்பொழிவொன்று ஆற்றும்போது, கோயிற் சிற்பங்களின் அழகையும் உள்ளுறையாய் அமைகின்ற சிறப்பையும் புரிந்து கொள்ளப் புராணக் கதைகளைப் பற்றிய அறிவு மிகத்தேவையான ஒன்று என்பதாகக் குறிப்பிட்டார். அதுபோலவே, கல்வெட்டுப் படிக்கையிலும் சில பின்னணிகள் - சற்று நல்ல மொழியறிவு, சற்றே இலக்கியங்கள் பற்றிய அறிவு, கல்வெட்டு சொல்லவரும் செய்தியின் இடம், பொருள், ஏவல் ஆகிய சூழல்கள் - நமக்குத் தெரிந்திருக்கவேண்டும் என உணர்ந்தேன்.

கல்வெட்டு மகிழ மரத்தை "மகிழ்" என்று கூறுவது மனங்கொள்ளத்தக்கது. இதுபோலவேதான், "ஊனமிலி" என்னும் இறைவனைக் குறிக்கும் தேவாரச் சொல்லை அடையாளம் காண்பதும்.

(ஈ) பெரிய கல்வெட்டு - முழுக்கல்வெட்டையும் காட்டாத ஒளிப்படம் பகுதி - 2 கல்வெட்டுப் பாடம்:

1 தை மனங்களிப்ப மனுநீதி தழைத்தோங்கச் சக்கரமுஞ் செங்கோலுந் திக்கனைத்துஞ் செல நடப்ப கெற்பகாலம் புவிகாக்கப் பொற்பமைந்த முடி புனைந்து வாழ வேங்கை

2 (டின்பம்) வடதிசையில் மாமேருவில் மடங்கடிப்பத் திக்கானை யிருநாலையுஞ் செய(ஞ்) செய்து கொடு கொண்டு விக்கலனைத் தலையரிந்து செழு முத்தின் குடைநிழற்கீழ் முறைமை

3 யூருடையான் திருஆனித்திருநாள் ஆறாந்திருநாளில் ராஜராஜந் திருமண்டபத்து திருவோலக்கஞ் செய்தருளி (விநோதங்)கண்டருளாநிற்க மடபதியும் தாநத்தாரும் ஸ்ரீமாஹேச்வர கண்காணி செய்வாநும்

4 செய்யப் பண்ணுகவென்று திருவாய்மொழிந்தருள இவ்வூர்க்குத் தண்டேச்வர விலையாகத் திருவாஞ்சியமுடையான் ஆட்கொண்டான் மல்லகோவுக்கு இவ்வூரில் ஐஞ்சில் ஒன்றும் பருத்திக்குடையான் (அரு)

5 (வையம் புக்)கானுக்கு இருபதில் ஒன்றும் (இ . . தம) பொன்மலை(க்) குன்றமுடையானுக்கு இருபதில் ஒந்றும் நன்மாங்கிழவன் உய்யவந்தான் மலையாழ்வாநுக்குப் பத்தில் ஒன்றும் சாத்தந்தை சிவக்(கொ)

6 (த்தோம்) இப்படிக்கு இவை (மடமுடைய ஸரஸ்வதி) பண்டிதன் எழுத்து ||- இப்படிக்கு இவை ஸ்ரீமாஹேச்வர கண்காணி திருச்சிற்றம்பலமுடையான் எழுத்து ||- இவை ஸ்ரீகாரியம் வயல்நாட்டரையன் எழுத்து ||-



திருஆனித்திருநாள் ஆறாந்திருநாளில்

இக்கல்வெட்டும், தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி ஐந்தில் காணப்படுகிறது. (க.வெ. எண் : 1359) மூன்றாம் குலோத்துங்கனின் காலத்தது. ஆட்சியாண்டு பத்தொன்பது. இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1178-1218 என்பதனால், கல்வெட்டு பொறிக்கப்பட்ட ஆண்டு கி.பி. 1197 ஆக அமையும். கல்வெட்டின் முதற் பகுதி அரசனது மெய்க்கீர்த்திப் பகுதியாகும். மெய்க்கீர்த்தி என்பது ஒருவகையில் அரசனை அறிமுகம் செய்து வைக்கும் பகுதியாகும். அவனுடைய பெயர், பீடு, போர்களில் பெற்ற வெற்றி ஆகிய சிறப்புச் செய்திகளைக் கொண்டது.

திருவொற்றியூர்க் கோயிலில் "இராஜராஜன்" என்னும் பெயரில் அமைந்த திருமண்டபத்தில் அரசன், கோயிலில் கொண்டாடப்பட்ட ஆனித்திருநாள் விழாவின்போது ஆறாந்திருநாளில் திருவோலக்கம் செய்தருளினான் என்கிறது கல்வெட்டு. திருவோலக்கம் என்பது அரசன் காட்சி தந்து வீற்றிருத்தலைக் குறிக்கும். அரசு அதிகாரிகள், மக்கள் சார்பாக நிற்கும் தலைவர்கள் ஆகியோரைச் சந்தித்து ஆட்சி நடப்பை அறிந்து கொள்ளுதல் மற்றும் மக்கள் குறைகளை விண்ணப்பம் மூலம் தீர்த்துவைத்து ஆணைகள் பிறப்பித்தல் ஆகியன இந்தத் திருவோலக்கத்தின் போது நிகழ்வன எனலாம். இக்கல்வெட்டிலும் அவ்வாறு விண்ணப்பம் ஒன்று செய்யப்படுகிறது. திருவொற்றியூரில் இருக்கும் மடபதி, தானத்தார், ஸ்ரீமாஹேச்வர கண்காணி செய்வான் ஆகியோர் அரசனிடம்

விண்ணப்பம் செய்கின்றனர். புலியூர்க் கோட்டத்து ஆதன்பாக்கத்துக் காணியாளர்கள் (உழுது பயிர் செய்யும் உரிமை பெற்றவர்கள்) சந்ததியில்லாமல் பயிர் செய்யாதொழிய, பயிர் நிலம் நெடுங்காலம் பாழ் பட்டுக் கிடந்ததென்று ஆவன செய்ய அரசனிடம் விண்ணப்பம் செய்கிறார்கள். அரசன், "பயிர் செய்யப்பண்ணுக" என்று திருவாய் மொழிந்தருளுகின்றான். அதற்காகத் திருவாஞ்சியமுடையான் ஆட்கொண்டான் மல்லகோ, பருத்திக்குடையான், பொன்மலைக்குன்றமுடையான், நன்மாங்கிழவன் உய்யவந்தான் மலையாழ்வான், சாத்தந்தை சிவக்(கொழுந்து) ஆகியோரைக் கோயில் தானத்தார் நியமித்து அவர்களுக்குச் சில பங்குகள் தருகிறார்கள். இந்த ஏற்பாட்டுக்குக் கல்வெட்டி ஆவணப்படுத்துகிறார்கள். மூல ஓலை ஆவணத்தில் எழுதி, (மடமுடைய ஸரஸ்வதி) பண்டிதன், ஸ்ரீமாஹேச்வர கண்காணி திருச்சிற்றம்பலமுடையான், ஸ்ரீகாரியம் வயல்நாட்டரையன் ஆகியோர் சான்றொப்பம் இடுகிறார்கள்.

(உ) பெரிய கல்வெட்டு - முழுக்கல்வெட்டையும் காட்டாத ஒளிப்படம் பகுதி - 3
கல்வெட்டின் பாடம்:

1 கு யாண்டு . . வது திருப்பங்குனி உத்திரத் திருநாளில் ஐந்தாந்திருநாள் இரவு இராஜராஜன் திருமண்டபத்திலே பெருமாள் திருவோலக்கம் செய்தரு(ளினபடி)

2 (டை)ப் பெருமாள் திருமடைப்பள்ளிப் புறத்துக்கு வேண்டுவன குறைவறுத்துப் போதக்கடவனாக தேவமண்டலத்து ஊர்களில் ஜயங்கொண்டசோழ ம

3 (லே) பையூர் நாடாழ்வான் வளையமழகியான் ஒற்றியாழ்வான் விலைகொண்டு (ப/ய ற) அனுபவித்துப்போந்த இவ்வடுகப் பெரும்பாக்க

4 அருமொழிதேவ வளநாட்(டு) . . [ம்ப)லக்கூற்றத்துப் பனங்குடிப் பனங்குடையான் அழகிய மணவாளன் கண்ணுடைப் பெருமாள் பையூர் நாடாழ்வான்

5 . . . . . . வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய திரு(வன்ன)மாயருளி நங்கோவணவரும் தானத்தாரும் கோயில் முதற்கணக்குத் திருவொற்றியூருடையா

6 பொன்னும் . . . . . (லும்) இப்படிக்கு சிலாலேகை செய்துகொள்வதென்று திருவாய் மலர்ந்தருளுகையாலே இவ்வடுகப்(பெரும்பா)க்கம் செம்பியன் (பனங்குடியேன்)

7 . . . . . . . கற்கடக நாயற்று அமரபக்ஷத்துப் பன்னிரண்டாந்(தேதி)யும் ப. . யும் உத்திரட்டாதியும் பெற்ற வெள்ளிக்கிழமை

8 (தோம் நிலவிலையான) கையெழுத்து தேவமண்டலத்து . . .(னில்) ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புழற்கோத்தமான விக்கிரம

9 . . லைக்கு வடக்கும் இவ்வூர் எல்லைக்கு கிழக்கும் வடுகப்பெரும்பாக்கமான செம்பியன் (பனங்)குடி எல்லைக்குத் தெற்கும் தெனாற்பாலெ[ல்]லைக்கு

10 கோயிற்தானத்தோம் இவூனமிலி விளாகத்துக்கு நிலவிலை நிச்சயித்த . . . (ப)லக் கூற்றத்துப் பனங்குடிப் பனங்குடையான் அழகியமணவாளன் கண்ணுடைப் பெருமாளேன் இத்திருனாமத்துக்காணியான (ஊன)மிலி வி

11 அன்றாடு நற்பழங்காசு 67 இப்பழங்காசு அறுபத்தே(ழு)
12 ணங்குடையான் கண்ணுடைப்பெருமாளுக்கும் இவந் வம்ஸத்தாற்கும் விற்றொற்றி ப்ரதிக்ரயங்களுக்குரித்தாவதாக(வும் பெய)
13 டைப்பெருமாளுக்கு விற்றுச் சிலாலேகை பண்ணச் சொன்னோம் இக்கோயிற் தானத்தோம் இப்படிக்கு இவை (மட)


திருப்பங்குனி உத்திரத் திருநாளில் ஐந்தாந்திருநாள்

கல்வெட்டுச் செய்தி:

ஒளிப்படம் காட்டும் பகுதியில் அரசனின் பெயர் காணப்படவில்லை. ஆனால், அரசன், பங்குனி உத்திரத்திருநாள் விழாவின்போது ஐந்தாம் நாள் திருவொற்றியூர்க் கோயிலில் இருந்த “இராஜராஜன்” திருமண்டபத்தில் வீற்றிருந்து ஆணை பிறப்பிக்கிறான் என்பதை அறிகிறோம். நிலக்கொடை பற்றியும், கொடை நிலத்தின் எல்லைகள் பற்றியும் கல்வெட்டு கூறுகிறது. கொடை நிலம் கோயிலின் மடைப்பள்ளிப்புறத்துக்காகக் கொடுக்கப்படுகிறது. மடைப்பள்ளி என்பது உணவு சமைக்கும் அடுக்களையைக் குறிக்கும். கொடை நிலம் “விற்றொற்றி” உரிமையுடன் பனங்குடையான் கண்ணுடைப் பெருமாளுக்கு விற்கப்படுகிறது. கொடை நிலம் “ஊனமிலி விளாகம்” என்று கல்வெட்டில் குறிக்கப்பெறுகிறது. ஊனமிலி என்பது இறைவனைக் குறித்த ஓர் அடைமொழியாகும் (ஏழாந்திருமுறைத் தேவாரப்பதிகம்-திருநனி பள்ளி) . இறைவன் பெயரால் அமைந்த நிலவளாகம். ’கோவணவர்’ என்னும் சொல் கோயிலில் பணிசெய்யும் ஊழியருள் ஒரு வகையினரைக்குறிக்கும். புழல் கோட்டம் என்னும் சொல் சற்றுப்பிழையாகப் ‘புழற்கோத்தம்’ எனக் கல்வெட்டில் எழுதப்பட்டுள்ளது.

பொதுச் செய்திகள்:

ஒற்றியூர் பெயர்க்காரணம்

ஒற்றியூர் பெயர்க் காரணம் பற்றி, “மூத்த மொழி தமிழ்” என்னும் இணையப்பக்கத்தில் கண்ட செய்தியை இங்கே தந்துள்ளேன்.

"ஒரு காலத்தில் தலங்கள் உள்பட எல்லா ஊர்களுக்கும் இறை விதித்து அரசன் சுற்றோலை அனுப்பியபொழுது அவனுக்கும் ஓலை நாயகத்திற்கும் தெரியாதபடி வரி பிளந்து ``இவ்வாணை ஒற்றியூர் நீங்கலாகக் கொள்க`` என்று அவ்வோலையில் எழுதப்பட்டிருந்ததை வியந்து அவ்வூர்க்கு ஒற்றியூர் (விலக்கு

அளிக்கப்பட்ட ஊர்) என்றும், பெருமானுக்கு எழுத்தறியும் பெருமான் என்றும் பெயர் ஆயிற்று. ``ஏட்டுவரியில் ஒற்றியூர் நீங்கல் என்ன எழுத்தறியும் நாட்ட மலரும் திருநுதலார்`` என்னும் பெரியபுராணச் செய்யுளும் காண்க. "

படம்பக்க நாயகன் - பெயர்க்காரணம்:

வாசுகி என்னும் பாம்பு இறைவனை வழிபட, இறைவன் தன் திருமேனியில் வைத்துக்கொண்ட காரணத்தால் திருவொற்றியூர் இறைவனுக்குப் படம்பக்க நாயகன் என்னும் பெயர் அமைந்ததெனக் குறிப்புண்டு.

காபாலிகம்:

திருவொற்றியூர்ப்பகுதியில் காபாலிகம் என்னும் ஒரு சைவப்பிரிவு பரவியிருந்துள்ளது. காபாலிகத்தைச் சேர்ந்த “மயானமுடைய” சதுரானன பண்டிதர் என்பவரின் காபாலிக மடம் திருவொற்றியூர்க் கோயிலில் இருந்தது என்று அறிகிறோம். காபாலிகரது சோமசித்தாந்தத்தை விரித்துப் படித்த வாகீச பண்டிதர் திருவொற்றியூரில் இருந்தமை மேலே கல்வெட்டொன்றில் குறிக்கப்பட்டதை நோக்குக. சோழ அரசன் முதலாம் பராந்தகனின் மகன் இராசாதித்தன் போரில் இறந்துபட, அவனுடைய சேனைத்தலைவனான வெள்ளன் குமரன் என்பான் மனமுடைந்து துறவறம் மேற்கொண்டு திருவொற்றியூர்ச் சதுரானனர் மடத்தில் சேர்ந்தார் என்று வரலாற்றுக் குறிப்புண்டு.

திருவொற்றியூர்க் கோயிலில் தேவரடியார்கள்:

கோவில்களில் ஆடல் மகளிரும் பாடல் மகளிரும் இருந்து சமயப் பணியாற்றினர். இவருள் 'பதியிலார்' ஒரு வகையினர்; ரிஷபத் தளியிலார்' (சிவன் கோவிற் பெண்டுகள்) மற்றொரு வகையினர்; திருவொற்றியூர்க் கோவிலில் சொக்கம், சந்திக்குணிப்பம் என்னும் நடன வகைகளைப் பதியிலார் ஆடும்போது, ரிஷபத்தளியிலார் மிழற்றுப் பாடலை வழங்கினர். ரிஷபத்தளியிலார் அகமார்க்கம், வரிக்கோலம் என்னும் நடன வகைகளை நடித்துக் காட்டினர். பதியிலார் திருப்பதிகக் கருத்துகட்கும், திருவெம்பாவைக் கருத்துகட்கும் ஏற்றவாறு நடித்தனர் என்பது திருவொற்றியூர்க் கல்வெட்டால் தெரிகின்றது.
(சைவசமயம் - டாக்டர் மா. இராசமாணிக்கனார் நூலிலிருந்து).

சுந்தரரும் மகிழ்(மகிழ) மரமும்:

சைவக் குரவர் நால்வரில் சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாரை இங்குள்ள மகிழ மரத்தடியில் உறுதியளித்து மணந்தார். இந்நிகழ்வை நினைவு படுத்தும் வகையில் திருவொற்றியூர்க் கோவிலில் ”மகிழடித் திருவிழா” நடைபெற்றுவருகிறது. மேலே (இ) எனக்குறிப்பிட்ட கல்வெட்டுப்பகுதியில், இவ்விழா பண்டுதொட்டு நிகழ்ந்தமை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண்க. பங்குனி உத்திரம் ஆறாந்திருநாள் அன்று இந்நிகழ்வு நடைபெற்றது. இறைவர் திருப்படம்பக்க நாயக தேவர் மகிழமரத்தடியில் எழுந்தருளப்பெற்று வழிபாடு நடைபெற்றுள்ளது. இந்நிகழ்வில் அரசனே நேரடியாக வந்திருந்து கண்டு மகிழ்ந்தான் எனக் கல்வெட்டு வாயிலாக அறிகிறோம். “திருமகிழின்கீட்” என்பது கல்வெட்டுத் தொடராகும்.

திருவொற்றியூரின் பெருமை:

இவ்வூர்க்கோயிலில் கல்வெட்டுகள் பொறிப்பித்த மன்னர்களின் பட்டியல் பெரிது.

சோழமன்னர்கள்:
முதலாம் பராந்தகன்
உத்தமசோழதேவன்
முதலாம் இராஜராஜ சோழன்
முதலாம் இராஜேந்திரசோழன்
முதலாம் இராஜாதிராஜ சோழன்
முதலாம் குலோத்துங்கசோழன்

கங்க பல்லவமன்னர்கள்:
விஜய அபராஜித போத்தரையர்
கோவிஜய நிருபதுங்கவர்மர்
கோவிஜய கம்பவர்மர்

பாண்டியர்கள்:
சடையவர்மன் சுந்தரபாண்டியன்

இராஷ்டிரகூட மன்னர்கள்:
கன்னர தேவன்

விசயநகர வேந்தர்கள்:
சாயண்ண உடையார்
தேவராய மகாராயரின் குமாரர் புக்கண்ண உடையார்
வீரப்பிரதாப தேவராய மகாராயர்

சம்புவராய மன்னர்கள்:
ராஜ நாராயண சம்புவராயர்

கல்வெட்டுகளின் எண்ணிக்கையும் நூற்றுக்கும் மேல் எனலாம். இத்தனை மன்னர்கள் இத்தனைக் கல்வெட்டுகளைப் பொறித்துள்ளனர் எனில் பண்டு, திருவொற்றியூர் மிக முதன்மையான ஒரு கோயில்-ஊராக இருந்திருப்பதில் ஐயமில்லை. கடற்கரைக்கு அண்மையில் இருந்த காரணத்தால் ஒரு வணிக நகரமாகவும் சிறப்புற்றிருந்தமை அறியலாகும். வணிகர்கள் இருந்த பெருந்தெருக்கள் பற்றிய குறிப்புகளும் கல்வெட்டுகளில் உள்ளன. அரசர்கள் நேரில் வந்து சென்ற நிகழ்வுகள், கோயிலில் நடைபெற்ற சிறப்பு விழாக்கள், சமயங்களின் மைய இடமாக இருந்தமை ஆகிய பலவேறு காரணங்களால் திருவொற்றியூரின் பெருமை அறியப்படுகிறது. இக்கட்டுரையில் சுட்டப்பெற்ற சில கல்வெட்டுகள் அன்றி, மற்ற கல்வெட்டுகள் அனைத்தையும் ஆய்வு நோக்கில் பார்த்தால்

எண்ணற்ற செய்திகளைத் தரவல்லதாகத் திருவொற்றியூர் கோயில் திகழும் என்பதில் ஐயமில்லை.



இரவில் ஒளிரும் கோபுரம்

துணை நின்றவை

பார்வை நூல்கள் :

1. கல்வெட்டில் தேவார மூவர்
2. தொண்டைநாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள்
3. திருஅருட்பா (மூல நூல் அல்ல- இணையவழி)
4. ஆய்வுப்பேழை - கா.ம. வேங்கடராமையா
5. சைவ சமயம் - கட்டுரைகள் - டாக்டர் மா. இராசமாணிக்கனார்
6. SOUTH INDIAN SHRINES - P.V. JAGADISA AYYAR
7. SOUTH INDIAN INSCRIPTIONS Vol-III
8. SOUTH INDIAN INSCRIPTIONS Vol-V

இணையப்பக்கங்கள் :

http://tamilmoli4u.blogspot.com/p/1.html

thevaaram.org

https://groups.google.com/forum/#!topic/mintamil/KIpMANzXmls

(அண்ணாமலை சுகுமாரன்)

நன்றி கூறல் :

கல்வெட்டறிஞர் முனைவர் பூங்குன்றன் அவர்களுக்கு.

தொடர்பு:

துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

அலை பேசி: 9444939156.

# 3. சிதம்பரம் கோயிலில் சரஸ்வதி பண்டாரம்: ஒரு புதிய பார்வை

—— முனைவர் ஆ.பத்மாவதி

சிதம்பரம் நடராஜர் கோயில் வளாகத்தில் சரஸ்வதி பண்டாரம் என்ற ஒரு நூல் நிலையம் இருந்தது. இச்செய்தியை முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய மன்னனது கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

சரஸ்வதி பண்டாரம் என்றால் நூல் நிலையம் என்று பொருள். சரஸ்வதி என்பது நூல்களையும், பண்டாரம் என்பது கருவூலம் என்பதையும், சேமித்து வைக்கப்பட்டிருக்கும் இடம் என்பதையும் குறிக்கும்.

சிதம்பரம் சரஸ்வதி பண்டாரத்தில் பல்வேறு மொழிகளில் எழுதப்பட்ட ஓலைச்சுவடிகள் இருந்தன. இந்த சுவடிகளைப் பார்த்து மீண்டும் புது ஓலைகளில் எழுதுவதற்கு இருபது பண்டிதர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். தமிழ் சுவடிகளையும், சமஸ்கிருத சுவடிகளையும் ஒப்பிட்டு எழுதும் பணியும் நடைபெற்று வந்தது. இந்த சுவடிகளில் "சித்தாந்த ரத்னாகரம்"- என்ற சுவடி நூல் சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கிறது. நூல் நிலையத்தை நிர்வாகம் செய்வதற்கு, பாண்டிய மன்னன் காலத்தில் நிலம் தானமளிக்கப்பட்டிருந்தது. நூல் நிலையத்தைச் சரிவரப் பராமரிப்பது, விரிவுபடுத்துவது, பண்டிதர்களைக் கொண்டு ஓலைச்சுவடிகளை எடுத்து எழுதுவது போன்ற பணிகளைக் கவனித்து வந்தவர் சுவாமி தேவர் என்பவர். இச் செய்திகளை எல்லாம் கூறும் பாண்டிய மன்னனின் காலம் கி.பி. 1251 முதல் 1284 வரை ஆகும்.

சிதம்பரம் சரஸ்வதி பண்டாரத்தைப் பராமரித்து வந்த சுவாமி தேவர், சித்தாந்த ரத்னாகரம் எழுதியவராக இருக்கலாமோ என எண்ணத்தோன்றும். அப்படி நினைப்பதில் தவறொன்றுமில்லை. இவர்தான் மூன்றாம் குலோத்துங்க சோழனுக்கு ராஜகுருவாகத் திகழ்ந்தவர். இம்மன்னன் காலத்தில்தான் இந்நூலை அவர் எழுதியிருக்கிறார். எனவே இந்த சரஸ்வதி பண்டாரம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திற்கு முன்னமேயே மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலும் இயங்கி வந்திருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. மூன்றாம் குலோத்துங்கச் சோழனின் காலம் கி.பி. 1178 முதல் 1218 வரை ஆகும்.

சேக்கிழார் எழுதிய சைவ சமய நாயன்மார்களின் வரலாறு தான் பெரியபுராணம். சிதம்பரம் கோயிலிலிருந்துதான் பெரியபுராணத்தை எழுதினார் என்று கூறுகிறது திருமுறைகண்ட புராணம். அவர் சிதம்பரம் கோயிலைத் தேர்ந்தெடுக்கக் காரணம் என்ன? நாயன்மார்களின் வரலாற்றை எழுதுவதற்குத்

தேவையான மூலங்களும், சைவ சமயத் தத்துவ நூல்களும் நிறைந்த ஒரு அருமையான நூல் நிலையம் சிதம்பரம் கோயிலிலிருந்ததுதான் காரணமாக இருந்திருத்தல் வேண்டும். சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்தில் முதல்மந்திரியாகப் பணிபுரிந்தவர். எனவே மூன்றாம் குலோத்துங்கச் சோழன் காலத்திற்கு முன்னர் வாழ்ந்த, இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்திலேயே சிதம்பரத்தில் நூல்நிலையம் இயங்கிக் கொண்டிருந்தது. இரண்டாம் குலோத்துங்கச் சோழனின் காலம் கி.பி. 1133 முதல் 1150 வரை ஆகும்.

மணவிற்கூத்தன் என்ற ஒரு சிற்றரசன், மூவர் முதலிகள் எனக்கூறப்படும் அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர் ஆகியோர் எழுதிய தேவாரப் பாடல்கள் அனைத்தையும் செப்பேடுகளில் எழுதி சிதம்பரம் கோயிலில் வைத்தான் என்று அக்கோயில் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. அப்படியென்றால் இந்தத் தேவாரச் செப்பேடுகள் அங்குள்ள சரஸ்வதி பண்டாரத்தில் தானே வைக்கப்பட்டிருக்கும். அதனால் இந்த சிற்றரசன் வாழ்ந்த காலமாகிய, முதலாம் குலோத்துங்கன் வாழ்ந்த காலத்திலும் சரஸ்வதி பண்டாரம் இயங்கிக் கொண்டிருந்தது என்றுதானே பொருள். முதலாம் குலோத்துங்கச் சோழன் கி.பி. 1070 முதல் கி.பி. 1122 வரை ஆட்சி புரிந்தவனாவான்.

இன்று நமக்குக் கிடைக்கும் முதல் மூவரின் தேவாரத் திருமுறைகள் சிதம்பரத்திலிருந்து எடுத்த ஏட்டுப்பிரதிகளின் நகலாகும். கண்டுபிடித்துத் தொகுத்து அளித்தவர்கள் முதலாம் இராஜராஜ சோழனும் நம்பியாண்டார் நம்பி என்ற கல்வியாளரும் ஆவார். இவர்கள் சிதம்பரம் கோயிலில் மூடிக்கிடந்த ஓர் அறையினுள்ளிருந்து எடுத்தார்கள் என்கிறது திருமுறைகண்ட புராணம். இந்தச்சுவடிகள் ஏன் சிதம்பரத்தில் வைக்கப்பட்டிருந்தன? அங்கு நூல்நிலையம் இருந்த காரணத்தினால் தான் அங்கு வைக்கப்பட்டிருந்தன.

இந்த சரஸ்வதி பண்டாரம் சிதம்பரம் கோயிலில் எந்த இடத்திலிருந்தது? “மன்றுளாடும் கூர்த விருட் கண்டர் புறக்கடையின் பாங்கர், ஆர்ந்த தமிழிருந்தவிடம்” என்று கூறும் திருமுறைகண்ட புராணம். மற்றொரு பாடலில் “ஐயர் நடமாடும் அம்பலத்தின் மேல் பால்” இருந்தது என்றும் கூறுகிறது.

திருமுறைகண்ட புராணம் கூறுவதைக் கொண்டு பார்க்கும்போது, சரஸ்வதி பண்டாரம் நடராஜர் கோயிலில் வடமேற்கிலிருந்தது என்பது தெரிகிறது. சரஸ்வதி பண்டாரம் பற்றிக்கூறும் சுந்தர பாண்டியனது கல்வெட்டு, மூன்றாம் பிரகாரத்தின் சுப்பிரமணியர் சன்னிதியின் மண்டபத்தில் பொறிக்கப்பட்டுக் காணப்படுகிறது. எனவே திருமுறைகண்ட புராணம் கூறும் இடமும் சரஸ்வதி பண்டாரம் பற்றிய கல்வெட்டு உள்ள இடமும் ஒன்றாக இருப்பது அதிசயிக்கத்தக்க உண்மையாகும்.

இராஜராஜ சோழன் காலத்தில் மூடிக்கிடந்த அறையினுள் உள்ள சுவடிகள் செல்லரித்துக்கிடந்தன, என்று கூறப்பட்டுள்ளதால் ராஜராஜன் காலத்திற்கு முன்பிருந்தே இந்த சரஸ்வதி பண்டாரம் மூடிக்கிடந்திருக்கிறது. என்ன காரணத்திற்காக யாரால் மூடப்பட்டது என்பது தெரியவில்லை. மேற்கூறிய

செய்திகள் மூலம் சரஸ்வதி பண்டாரம் ராஜராஜனுக்குப் பின்னர் வாழ்ந்த மன்னர்கள் காலத்தில் சிறப்பாக இயங்கி வந்திருக்கிறது என்பதால் மூடிக்கிடந்த அறையைத் திறந்த ராஜராஜன் காலம் முதல் அந்த சரஸ்வதி பண்டாரம் சரிவரப் பராமரிக்கப்பட்டு, செயல்பட ஆரம்பித்திருக்க வேண்டும் என்று கூறலாம்.

ராஜராஜனுக்கு சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர் சுந்தரர். இவர் எழுதிய திருத்தொண்டர் தொகையில் முதல் வரியிலேயே "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்கிறார். சேக்கிழார் புராணத்தின் மூலம் தில்லையில் வாழ்ந்த அந்தணர்கள் மூவாயிரவர் என்று தெரிகிறது. இவ்வாறு மூவாயிரவர், ஆயிரத்து ஐந்நூற்றுவர் என்று கூறப்பட்டு ஒரு குழுவாகச் செயல்பட்டு வந்த இடங்களில் எல்லாம் பெரும்பாலும் கல்வி நிறுவனங்கள் செயல்பட்டு வந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன. எனவே கி.பி. எட்டாம் நூற்றாண்டிலேயே சிதம்பரத்தில் கல்வி நிறுவனம் ஒன்று இருந்திருத்தல் வேண்டும். அந்த நிறுவனத்தின் நூல்நிலையம் தான் இந்த சரஸ்வதி பண்டாரம்.

இங்கிருந்துதான் ராஜராஜன் உடன் சென்ற நம்பியாண்டார் நம்பி என்ற கல்வியாளர் சுந்தரரின் திருத்தொண்டர் தொகையையும் எடுத்திருக்கிறார். பின்னர் அதைப் பின்பற்றி நம்பி எழுதியதுதான் திருத்தொண்டர் திருவந்தாதி. சுந்தரர் காலத்திலேயே இங்கு ஒரு நூல்நிலையம் இருந்த காரணத்தினால் அவர் எழுதிய தேவார நூல்கள் அங்கு வைக்கப் பட்டிருந்தன. சுந்தரர் காலத்திலேயே தில்லை வாழ் அந்தணர்களால் நூல் நிலையம் பராமரிக்கப்பட்டு வந்திருக்கிறது என்று கூறலாம். இந்த நூல்நிலையத்தில் அதாவது சரஸ்வதி பண்டாரத்தில் அப்பரும், ஞான சம்பந்தரும் எழுதிய தேவாரப்பாடல்களும் இடம் பெற்றிருந்தன. முதலாம் ராஜராஜன், நம்பியாண்டார் நம்பியின் உதவியுடன் தேவாரங்களை வெளியுலகிற்கு அறிமுகம் செய்தான். மூடிக்கிடந்த சரஸ்வதி பண்டாரத்தை. ராஜராஜனே திறப்பு விழா செய்தான் என்பதை உமாபதி சிவாச்சாரியார் திருமுறைகண்ட புராணத்தில் 'பண்டாரந் திறந்து விட்டான் பரிவு கூர்ந்தான், என்கிறார்.

தொடர்பு:
முனைவர் ஆ.பத்மாவதி, மேனாள் தமிழ்நாடு தொல்லியல் துறை ஆய்வாளர்
(drepipadma@gmail.com)

# 4. அமராவதி சிற்பம்

## —— ஓவியர் திரு. சந்துரு

பூ - நாம் - பூ:
நமது உடல், மற்றும் முக பாவங்களால் நமது நிலையை வெளிப்படுத்துகிறோம். ஓவியர்கள் வரைந்த உருவத் தோற்றங்களால் தங்கள் நிலையை வெளிப்படுத்துகிறார்கள்.




படம்-1.
அடிப்படை உருவ அமைப்புகள்.
ஒரு பக்கம், முன் பாகம், பின்பாகம் மற்றும் திரிபு நிலை. இத் திரிபங்க அமைப்பு புதிரான தூண்டலை உள்ளடக்கியது.

நாம் பூவையும், பூ நம்மையும் கவனித்த பொழுது குறித்து ஓவியர்கள் டி இங்ரீஸ் மற்றும் மேனெட் ஆகியோர் தங்களது திரைச் சேலைகளில் பெண் உருவம் அதன் பின்புலம், மற்றும் செய் நேர்த்தி என அதிக வேலை பார்த்திருக்கிறார்கள். அப் பெண்களின் உடல் பகுதியில் குவியும் நமது கவனத்தை அவர்களின் முகக் குறி சிதற அடிப்பதை உணரலாம். இதில் உடலும், முகமும் எதிர், புதிரான தூண்டலை விளைவிப்பவை என அறியலாம்.

காட்சி அமைப்பு - கலா ரசனை:
பலாப்பழத் தோலை உரித்துச் சாப்பிடுவதும், உரிக்காமல் சாப்பிடுவதும் அவ் உயிரினங்களின் இயல்பு மற்றும் சூழல் சார்ந்தவை.

கலா ரசனை:

1. வெகு சனம் -

வடிவேல் பெண் வேடத்தில் (சிற்பம்)

"என்னக் காப்பாத்த யாருமேயில்லையா?"

அந்த சிற்பத்தைப் பார்த்த ரசிக மணி

"கலை அழகே உன்ன நான் காப்பாத்தறேன், நீ தான் ரெண்டு வயதில் காணாமல் போன என் தங்கச்சி".

2. எழுத்தாளி -

"கல்லில் சிற்பி வடித்த சிலையல்ல நீ, பிரம்மன் கண் இமை ஓரத்தில் உதித்த வானவில்லின் வண்ண ஜாலம், ஆ! ஓ!! ஈ!!!. உன்னை வர்ணிக்க என் தாய்த் தமிழில் வார்த்தையில்லை."

3. கலை விமர்சகர் -

இது வேற லெவல், மரபின் தொன்மம், ஒய்ச் சின் னின் ரசவாதம், லிம் பெலவா வின் மூர்க்கம் சந்தித்த புதுமை. இது உயரிய விருது மற்றும் விலைகளுக்கு உரியது.

4. நமது நிலை -

"இடம், பொருள், ஏவல் என்ற வகையில் வீட்டு முற்றத்தில், களிமண்ணைக் கால்களுக்கு இடையில் வைத்து சவட்டி எடுத்து பொம்மை செய்வது."




படம்-2.

அமராவதி சிற்பங்கள் - இடமிருந்து...

1. பெண் உருவம் தனது பின்புறம் காட்டி, உள் நோக்கி மண்டியிட்டு, முகம் வெளிப்புறமாகப் பார்வையாளரை நோக்கி அமைந்துள்ளது. இவ் உருவ அமைப்பு பல சிற்பங்களில் காணக்கிடைக்கிறது.

2. பெண் உருவம் உடல் திரிபங்கமாக, கால்கள் முக்கோணத்தை சுட்டும்படி ஒன்றை குத்து இட்டு,மற்று ஒன்றை மடித்து, உடலும், முகமும் பார்வையாளரை நோக்கி அமைந்துள்ளது. இவ் உருவ அமைப்பை இரு சிற்பங்களில் காணக்கிடைத்தது.

3. பெண் உருவம் முகம் வான் பார்க்க, தரையில் கிடந்து, தலைக்கு மேல் கை கூப்பி, கால்களை மடக்கி விரித்து, திரிபங்கமாக அமைந்துள்ளது. இவ் உருவ அமைப்பு ஒரு சிற்பத்தில் மட்டும் அமைந்துள்ளது.

"கத்துங் குயிலோசை - சற்றே வந்து
காதிற் படவேணும்."
- பாரதி

இந்த வகையில் சிற்பம் 3ல் உள்ள பெண் உருவம் சற்று இடம் மாறுவேடத்தில்.




அமராவதி சிற்பங்கள் - உருவத் தோற்ற அமைப்பு:
படம்-3.

இடமிருந்து வலம் ...

பெண் உருவத் தோற்றங்களைக் குறியீட்டு வடிவம் (விசிரிப்பாறை - மௌனம்), கருத்தியல் உருவம் (யோனி தேவதை - ஆற்றல்), மற்றும் யதார்த்த உருவம் (தோரணப் பெண் - அழகு) என வகைப்படுத்தலாம்.

ஓவியங்களில் அமைந்த ஆண், பெண் நிர்வாணத் தோற்றங்களைப் பால் வேறுபாடு, வளமை, பெருமை மற்றும் பாலுணர்வைச் சுட்டுவன என்று பல வகைப்படுத்தலாம். அங்கு இல்லாத வானம், பூமி, மற்றும் கதாப்பாத்திரத்தை பலர்முன் அரங்கேற்றுவது சிறந்த நடிப்பும், யதார்த்த மருவலும், இதுவே கலை அழகும் என்போம். அவ்வகையில் சிற்பம்1ல்(மேல்) உள்ள பெண் உருவ அமைப்பைச் சுழற்றி சிற்பம் 2ல்(கீழ்) உள்ள பெண் உருவை அமைத்தது 'படைப்பு ஊக்கம்' என்பதற்கு நாம் அவ் உருவங்களை வரைந்து பார்த்தோம் என்பதே சாட்சி.

படங்கள் உருவான தருணம்:





நிறைவாக-நண்பர் தேவதேவன் அவர்களின் கவிதை வரிகள்.

நண்பா,
நீ ஓர் இரவு விளித்திருந்ததில்
அதைப் பார்த்துவிட்டதால்
இரவில் ஓடும் மவுன நதி
என்றாய்
நீ எப்போதும் விழித்திருந்தால்
எப்போதும் ஓடும் நதிதான் அது.

ஆசிரியர் குறிப்பு:

சென்னை ஓவியக் கலைக் கல்லூரியில் முதல்வராக இருந்து ஓய்வு பெற்றவர் ஓவியர் திரு. சந்துரு

தொடர்பு:

https://www.facebook.com/chandrasekaran.grusamy

# 5. பல்லவர் காலச் சிற்பக்கலை

—— துரை.சுந்தரம்

முன்னுரை:

கோவை வாணவராயர் அறக்கட்டளைச் சார்பாக மாதந்தோறும் வரலாறு, பண்பாடு, தொல்லியல், கலை ஆகிய பல்வேறு தலைப்புகளில் சிறப்புச் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தப்படுகிறது. அவ்வரிசையில், 19-07-2019 அன்று திரு. அர.கோபு அவர்கள் பல்லவச் சிற்பங்கள் பற்றி ஓர் உரையினை நிகழ்த்தினார். கணினி மென்பொருள் பொறியாளராய்த் தொழில் அமைந்தாலும் கோயில் சிற்பங்கள் - குறிப்பாகப் பல்லவர் சிற்பங்கள் - பற்றிய பெருவிருப்புக் காரணமாக அவற்றை நுணுகப் பார்த்து அவற்றின் சிறப்பு நயங்களை எடுத்துரைத்து வருகிறார் என்பது பாராட்டுதலுக்குரியது. அவரை அறிமுகப்படுத்தியவர் கூறியதுபோல, தற்காலத்தே வரலாறு, கலை போன்ற பாடங்களை எடுத்துப் படித்தவர்களைக் காட்டிலும் வேறு துறையில் இருப்பவர் பலர் கலை, வரலாறு ஆகியவற்றில் ஆர்வமும், ஈடுபாடும் கொண்டு அவற்றின் சிறப்புகளைப் பொதுத் தளத்தில் மக்கள் அறியச் செய்கிறார்கள் என்பது உண்மை. தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய மூன்று மொழிகளில் புலமை இருப்பது கோபு அவர்களுக்கு ஒரு கூடுதல் கருவி. மேலும் கிரந்த எழுத்துகளின் பயிற்சி அவருக்கு இருப்பது, கல்வெட்டுகளில் காணப்படும் சமற்கிருத-கிரந்தப் பகுதிகளைச் சரியாகப் புரிந்துகொள்வதற்கும், சிற்பங்களை விளக்கவும் துணையாக அமைகிறது. பல்லவர் சிற்பங்களை அவர்தம் கண்கொண்டு பார்த்துச் சுவைத்த காட்சிகள் இங்கே பகிர்ந்துகொள்ளப்படுகின்றன.

மாமல்லையும் காஞ்சியும்:

பல்லவர் படைப்புகள் என்னும்போது உடன் நினைவுக்கு வருவது மாமல்லையும் காஞ்சியுமே ஆகும்.

மகேந்திர வர்மன்:

பல்லவ மன்னன் மகேந்திரவர்மனே பல்லவர் கலைப்படைப்புகளில் முதன்மையானவனாகச் சுட்டப்படுகிறான். விசித்திர சித்தன் என்றொரு சிறப்புப் பெயர் அவனுக்கு மிகவும் பொருந்துகிறது. இத்தொடருக்கு, வழக்கத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டுப் புதுமையாய்ச் சிந்திப்பவன் என்று பொருள். கலையை அவ்வாறுதான் அவன் வெளிப்படுத்தியுள்ளான்.

மண்டகப்பட்டு:

மண்டகப்பட்டுக் குடைவரைக் கோயிலில் மகேந்திரவர்மன் வெட்டுவித்த கிரந்த எழுத்துகளால் அமைந்த சமற்கிருதக் கல்வெட்டு, விசித்திர சித்தனைக் காட்டுகிறது.

மண்டகப்பட்டு குடைவரைக் கோயில்
படம் உதவி : கி.ஸ்ரீதரன்

மண்டகப்பட்டு - புகழ் பெற்ற கல்வெட்டு
படம் : அர. கோபு

கல்வெட்டுப் பாடம் வருமாறு:

ஏதத் அநிஷ்டகம் அத்ருமம் அலோஹம் அசுதம்
விசித்ரசித்தந் நிர்மாபித க்ருஹேண
ப்ரஹ்மேஷ்வரவிஷ்ணு லக்ஷிதாயதநம்

இதன் பொருள், செங்கல், மரம், உலோகம், சுதை ஆகியவை இல்லாமல் விசித்திர சித்தனாகிய நான் பிரம்மா, ஈசுவரன், விஷ்ணு ஆகிய மூவருக்கும் எடுப்பித்த கோயில் என்பதாகும்.

இஷ்டகம்=செங்கல்; சமற்கிருதத்தில் ஒரு சொல்லை எதிர்மறைப் பொருளாக்குவதற்கு அச்சொல்லுடன் ‘அ’, ‘அந்’ என்னும் முன்னொட்டுகள் சேர்க்கப்படும். எனவே, செங்கல் இல்லாமல் என்பதற்கு,
அந்+இஷ்டகம்=அநிஷ்டகம். தமிழில் செங்கல்லுக்கு ‘இட்டிகை’ என்னும் ஒரு சொல்லும் வழங்குவதை ஒப்பு நோக்குக. தெலுங்கு மொழியிலும் ’இட்டுக’ என்று வழங்குகிறது.
த்ருமம்=மரம்; ‘அ’+த்ருமம்=அத்ருமம்; மரமில்லாதது.
லோஹம்=உலோகம்; ‘அ’+லோஹம்=அலோஹம். உலோகமில்லாமல்.
சுதம்=சுதை (சுண்ணம் அல்லது காரை); ’அ’+சுதம்=அசுதம். சுதை இல்லாமல்.

விசித்திர சித்தன், மேற்சொன்ன செங்கல், மரம், உலோகம், சுதை ஆகிய பொருள்களின்றிக் கல்லாலேயே கட்டுவித்த கோயில் என்பது கட்டடக் கலையில் புதுமை. அதுவும் கல்லைக் குடைந்து கட்டியமை மேலும் புதுமை. மண்டகப்பட்டுக் குடைவரையில், வாயிற்காவலர் (துவாரபாலகர்) சிற்பங்களுக்கு மறுதலையாக (பதிலாக) கருடன், மகாகாலன் ஆகியோர் சிற்பங்கள் உள்ளன.

மகேந்திரவர்மனுக்கு முன்னர், கோயில்கள் செங்கல், மரம், உலோகம், சுதை கொண்டே கட்டப்பெற்றன. மகேந்திரன் முதலில் குடைவரைக் கோயிலைக் கட்டுவித்தான். பின்னர் வந்தவர்கள் கல்லைக்கொண்டு கட்டுமானக் கோயில்கள் எழுப்பினார்கள். அவை, கற்றளிகள் எனப்பட்டன. ஊரகம் கோயிலில் உலகளந்த பெருமாள் (நின்ற கோலம்), பாடகம் கோயிலில் பாண்டவ தூதப் பெருமாள் (இருந்த கோலம்), வெஃகா கோயிலில் (கிடந்த கோலம்) ஆகிய இறைத்திருமேனிகள் சுதைச் சிற்பங்களே. இம்மூன்று கோயில்களையும் இணைத்துத் திருமழிசை ஆழ்வார், “நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே” என்று பாடியுள்ளார். காஞ்சியில் உள்ள திரிபுராந்தகேசுவரர் கோயிலும், சிற்பங்களும் செங்கல்லால் அமைந்தன.

மாமண்டூர்:

காஞ்சிக்கருகில் இருக்கும் மாமண்டூர் குடைவரைக் கோயிலில் மகேந்திரனின் நீண்டதொரு கல்வெட்டு உள்ளது. இதில் மகேந்திரனின் சத்துரு மல்லன், நித்திய விநீதன், சத்திய சந்தன் ஆகிய சிறப்புப் பெயர்கள், அவன் இயற்றிய மத்த விலாசம், பகவத் அஜுகம் ஆகிய நாடக நூல்கள், அவனுடைய அரசி கற்ற இசை நாடகம் ஆகியன குறிப்பிடப்படுகின்றன.

குரங்கணில் முட்டம் - குடைவரைக் கோயில்:

மாமண்டூருக்கருகிலேயே அமைந்த இன்னொரு குடைவரை - மகேந்திரன் எழுப்பியது - முற்றுப்பெறாமல் நிற்கிறது.

தளவானூர் - குடைவரைக் கோயில்:

விழுப்புரம் அருகில் உள்ள தளவானூரில் மகேந்திரனின் குடைவரைக் கோயில் சிவனுக்கு எழுப்பப்பட்ட ஒன்று. இதில் ஐந்து நாசிகள் அமைந்துள்ளமை சிறப்பானது. நாசிகளின் நடுவில் மனித முகங்கள். இந்த நாசிகளின் கீழே, வாயில்



மாமண்டூர் குடைவரை

படம் உதவி : விக்கிபீடியா



குரங்கணில் முட்டம் - குடைவரை - முன்புறத்தோற்றம்

படம் உதவி : சரவணமணியன்(முக நூல்)



குரங்கணில் முட்டம் - குடைவரைக் கோயில்

படம் உதவி : அபினேஷ் சேகர் (முக நூல்)





தளவானூர் குடைவரைக் கோயில் - தோற்றங்கள்
படங்கள் உதவி : கவி தளம் (முக நூல்)



மகர தோரணம்
படம் : அர. கோபு

தூண்களின் போதிகைப் பகுதியில் இருக்கும் மகர தோரணம் மிக அழகானது. (இத்தோரண அமைப்பு தற்கால வளைவு (ARCH) என்னும் கட்டிட அமைப்புக்கு முன்னோடி எனலாம்.) இதில் உள்ள மகர உருவம், முதலை (மகரம்)யும் சிங்கப்பிடரியும் கொண்ட ஒரு கற்பனை உருவம். மகரம், யாழி போன்றவை சிற்பக்கலையின் உறுப்புகள்.

இங்குள்ள கல்வெட்டு இதைச் ''சத்துருமல்லேசுவர ஆலயம்'' என்று குறிப்பிடுகிறது. சத்துரு மல்லன் என்பது மகேந்திரவர்மனின் சிறப்புப் பெயராகும். உட்புறத்தில் இருக்கும் இரு வாயிற்காவலர் (துவார பாலகர்) சிற்பங்கள் அழகானவை. நின்ற தோற்றத்தில் அவை அமைந்திருப்பினும், உடல் அமைப்பில் ஒரு வளைவு காணப்படுதல் சிறப்புக்குரியது. இருவரின் உடலிலும் இருக்கும் முப்புரி நூல், நூல் அமைப்பில் இல்லாது துணியாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. 'உள்ளே இருக்கும் இறைவனைச் சென்று பாருங்கள்' என ஆற்றுப்படுத்துவது போல இச்சிற்பங்களில் ஓர் உணர்ச்சி வெளிப்படுவதைக் காணலாம். இங்குள்ள கல்வெட்டுகளைப் பற்றித் தொல்லியல் துறையில் பணியாற்றிய ஆய்வாளர் கி.ஸ்ரீதரன் அவர்கள் கூறும் செய்தி கீழே... (நன்றி : தினமணி 17-09-2019)

கல்வெட்டுகள்:

இக்குடைவரைக் கோயிலில் மூன்று கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மேற்கு அரைத்தூண் அருகில் காணப்படும் பல்லவ கிரந்த எழுத்தில் அமைந்த கல்வெட்டில் இக்குடைவரைக் கோயிலை "நரேந்திரன்" என்னும் சத்ருமல்லன்" என்னும் அரசனால் இம்மலையின் மேலே சத்ருமல்லேசுவராலயம் என்னும் இக்கோயில் அமைக்கப்பட்டதாகக் கூறுகிறது.



தளவானூர் குடைவரைக் கல்வெட்டு
படம் உதவி : கி.ஸ்ரீதரன்

தண்டாநத நரேந்த்ரேண நரேந்த்ரனைஷ காரித :
ஸத்ருமல்லேண ஸைலேஸ்மின் ஸத்ருமல்லேஸ்வ ராலய:

இரண்டாவது கல்வெட்டு இதே செய்தியைத் தமிழில் கூறுகிறது:

ஸ்ரீ தொண்டைநய் தார்வேந்தன்
நரேந்திரப் போத்தரையன்
வெண்பேட்டின் றென்பால் மிக
மகிழ்ந்து கண்டான்
சரமிக்க வெஞ்சிலையான் சத்துரு
மல்லேஸ்வராலய மென்
நரனுக்கிடமாக வாங்கு"

பல்லவர் சிற்பங்களின் தனிச் சிறப்பு என்ன?

குப்தர்களின் சிற்பங்கள், பல்லவர் சிற்பங்கள் ஆகியன தனிச் சிறப்பு வாய்ந்தவை என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கதை சொல்லுகின்ற ஒரு பாங்கு பல்லவர் சிற்பங்களில் அமைந்திருப்பதைக் காணலாம்.

சிற்பம் கற்க விருப்பமா?
ஓவியம் கற்று வா
ஓவியம் கற்க விருப்பமா?
நாட்டியம் கற்று வா
நாட்டியம் கற்க விருப்பமா?
இசை கற்று வா
இசை கற்க விருப்பமா?
பாடல் கற்று வா

என்று ஒருவருக்குக் கூறுவதுபோலப் பல்லவர் சிற்பக் கலை அமைந்திருப்பது அதன் தனிச் சிறப்பு. ஆம். பல்லவர் சிற்பங்களில், நாம் ஒரு சேர பாடல், இசை, நாட்டியம், ஓவியம் ஆகியவற்றை உணர இயலும்.

சீயமங்கலம்:

சீயமங்கலம், திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் அமைந்துள்ளது. இங்குள்ள, மகேந்திரவர்மன் எழுப்பிய குடைவரைக் கோயிலின் ஒரு சிறப்பு இங்குள்ள ஆடவல்லான் சிற்பம். தமிழகத்தின் முதல் ஆடவல்லான் கற்சிற்பம் இதுதான். 'புஜங்க த்ரஸ்ஸ' என்னும் நாட்டியச் சாயலில் இச்சிற்பம் அமைந்துள்ளதாகக் கூறுவர். இங்கு, ரிஷபாந்திகர், ஆடவல்லான் ஆகிய இரு இறைத்திருமேனிகளும் தூண்களில் வடிக்கப்பட்டதால் இறைவன் தூணாண்டார் என்று அழைக்கப்படுகிறார். இங்குள்ள வாயிற்காவலர் (துவாரபாலகர்) சிற்பங்களும் அழகானவை.



சீயமங்கலம்



ஆடவல்லான் - முதல் கற்சிற்பம்

இங்குள்ள கல்வெட்டு மகேந்திரனின் சிறப்புப் பெயர்களான லலிதாங்குரன், அவனிபாஜன் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது. கோயிலின் பெயரும் அவனிபாஜன பல்லவேசுவரம் என்பதாகும்.

மகேந்திரவாடி:

காஞ்சிபுரம் அருகில் உள்ள இன்னொரு குடைவரைக்கோயில். மகேந்திரவர்மனுடையது. மகேந்திர விஷ்ணுகிருஹம் என்னும் முராரி கிருஹம் என்று இக்கோயிலை இங்குள்ள கல்வெட்டு குறிக்கிறது. மாமல்லபுரத்து ரதங்களுக்கு இதை முன்னோடியாகக் கொள்ளலாம்.



வாயிற்காவலர் சிற்பங்கள்




அவனிபாஜன் கல்வெட்டு

வல்லம்:

வல்லம் குடைவரைக் கோயில் மகேந்திரவர்மன் எடுப்பித்தது அல்ல; ஆனால், அவன் காலத்தது. அவனுடைய மேலாண்மையின் கீழ் இருந்த ஒரு சிற்றரசனின் மகன் எடுப்பித்தது. கல்வெட்டின் பாடம் :

சத்துரும் மல்லன் குணபரன்
மயேந்திரப்போத்தரெசரு அடியான்
வயந்தப்பிரி அரெசரு மகன் கந்தசேன
ந் செயிவித்த தேவகுலம்

கல்வெட்டு மகேந்திரவர்மனைச் சத்துரு மல்லன் எனவும், குணபரன் எனவும் குறிப்பிடுகிறது. இங்குள்ள மற்றொரு கல்வெட்டு, மகேந்திரனைப் பகாப்பிடுகு என்றும், லளிதாங்குரன் என்றும் குறிப்பிடுகின்றன.

திருச்சி தாயுமானவர் கோயில் - லளிதாங்குர பல்லவ கிருஹம்:

திருச்சி மலைக்கோட்டை தாயுமானவர் கோயிலின் வாயில் அருகே லளிதாங்குர பல்லவ கிருகம் என்னும் குகைக் கோயில் உள்ளது. இக்கோயில், மகேந்திரனின் ஒரு சிறப்புப் பெயரான லளிதாங்குரன் பெயரில் வழங்குகிறது. இங்குள்ள தூண் கல்வெட்டுகளில், மகேந்திரனின் கீழ்க்கண்ட சிறப்புப் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

அபிமுக
அகருண
அநித்யராக
அநுமாந

கங்காதரர் சிற்பம்:

லளிதாங்குர பல்லவ கிருகத்தில் பாடல் பெற்ற கங்காதரர் சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தில், சிவன் ஏன் வழக்கமான ஒரு பிச்சாண்டி உருவத்தில் வடிக்கப்படவில்லை? உடுத்த சிறப்பான ஆடையின்றிப் புலித்தோலை அணிந்திருப்பானே; முடியெல்லாம் சடை சடையாய் இருக்குமே; உடலைச் சுற்றியும் பாம்புகள் சூடியிருப்பானே. இச்சிற்பத்தில், ஏன் நல்ல பருத்தி ஆடை- அரசர் அணிகின்ற நல்ல ஆடை? ஏன் தலையில் கிரீடம்? ஏன் உடலில் அரசரணியும் பொன் அணிகலன்கள்? ஏன் முப்புரி நூல்? மொத்தத்தில் அரசனுக்குரிய ஒரு பெருந்தோற்றம். மகேந்திரன் தன்னையே சிவனாக வடித்ததால் சிவனுக்கு அரசவடிவம் தந்து சிற்பமாக்கியுள்ளான். இதை, இங்குள்ள கல்வெட்டிலும் பொறித்துவைத்துள்ளான். இச்சிற்பத்தில் இன்னொரு அழகு. முடியில் கிரீடம் உள்ளதால், கங்கையைத் தன் ஒற்றை முடியில் தாங்கியுள்ள நிலை.

சிங்கவரம் குடைவரைக் கோயில்:

செஞ்சிக்கருகில் இருக்கும் சிங்கவரத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. கிடந்த கோலத்தில் சிங்கப்பெருமாளுக்கு எடுப்பித்த கோயில். மகேந்திரனின் காலத்தைச் சேர்ந்தது என்று கருதப்படுகிறது. கருவறைச் சுவரில் பெரும் வடிவத்தில் பள்ளிகொண்ட பெருமாள். இங்குள்ள துர்க்கைச் சிற்பம் அழகானது. எளிமையான, அணிகள் எவையுமின்றித் திரிபங்க நிலையில் நிற்கும் துர்க்கையின் கைகளில் சங்கும் ஏவுதற்கு அணியமாயுள்ள நிலையில் சக்கரமும் (பிரயோகச் சக்கரம்) காணப்படுகின்றன.

மாமல்லபுரம்:

மாமல்லை, பல்லவச் சிற்பக்கலைப் பல்கலைக் கழகமாக விளங்குகிறது எனக் கூறுதல் தகும். தொடக்க எளிமைக்குச் சான்றாய் கொடிக்கல் மண்டபம்

முதலாகக் கலைப்பொலிவின் உச்சி நிலையாக வராக மண்டபம் வரை கணக்கற்ற சிற்பத் தொகுதிகள்.

வராக மண்டபம்-வராகச் சிற்பம்:



வராக மண்டபம் - முன்புறத்தோற்றம்



வராகச் சிற்பம்

இது மகேந்திரவர்மனின் படைப்பு. அத்யந்தகாம பல்லவ ஈசுவர கிருகம் என்று வழங்கும் இக்குடைவரை மண்டபத்தில் உள்ள கல்வெட்டு மகேந்திரனின் 244 சிறப்புப் பெயர்களைக் குறிக்கின்றது. வராகத் திருமேனிச் சிற்பத்தொகுதியில் அழகான கலைக்கூறுகளைக் காணலாம். மனித வடிவத்துக்கு வராகத் தலை. கற்பனையில் நமக்கு அழகு புலப்படாது. ஆனால், சிற்பி இவ்வடிவத்துக்கு

அழகைத் தந்துள்ளான். திருமகளைக் கடலரக்கனிடமிருந்து மீட்டு அவளை இரு கைகளில் ஏந்தி நிற்கும் பாங்கு. கால்களில் ஒன்று அரக்கனின் தலைமேல். அரக்கன் கடலரக்கன் எனக் குறிக்க அவன் தலை மேல் நாகத்தலைகள் ஐந்து.

நீரைக் குறிக்கும் இடங்களில் எல்லாம் நாகத்தையோ, (தாமரை) மலரையோ காட்டுதல் சிற்பம் வடித்தலில் உள்ள மரபு. அரக்கனின் மனைவியும் அரக்கனைப்போலவே கை தொழுது இறைஞ்சுகிறாள். அவள் அருகில் இராஜ குரு. வராக இறைவனின் கைகளில் ஒன்றில் சங்கும் மற்றதில் ஏவுநிலைச் சக்கரமும் (பிரயோகச் சக்கரம்). இந்த ஏவுநிலச் சக்கரம் பல்லவச் சிற்பங்களின் சிறப்புக் கூறுகளுள் ஒன்று. வராகருக்கு அருகில் திருமகளை அடுத்துச் சூரியன். வராகருக்கு இடப்புறம் பிரம்மா; அவரருகில் நாரதர். வராக முகத்தின் தலைக்கு நேராகத் தலைக்கிரீடத்தைக் காட்டாமல், வராகத்தின் மூக்குச் சாய்மானத்துக்கேற்பச் சமன் செய்யும் (BALANCING) நிலையில் சாய்ந்தநிலையில் காட்டியுள்ள சிற்பத்திறன் குறிப்பிடத்தக்கது.


யானை நீராட்டும் திருமகள்


உலகளந்தான் சிற்பம்


மகிஷாசுர மர்த்தனி

வராக மண்டபம்-'கஜலட்சுமி' சிற்பம்:

திருமகளைக் குளிப்பாட்டும் காட்சியில் அமைந்த சிற்பம். பணிப்பெண்கள் அப்பணியில் ஈடுபட்டிருந்தாலும், யானைகளைக் காட்சிப்படுத்தியிருப்பது இங்கு அழகு. ஒரு யானை, தன் துதிக்கையைத் தூக்கி நீர் தெளிக்கும்போது, மற்ற யானை நீர் மொள்ளுதல் அழகான காட்சி.

வராக மண்டபம்-மகிஷாசுரமர்த்தனி சிற்பம்:

மகிஷாசுரமர்த்தனி - கொற்றவை - இங்கு சமபங்கநிலையில் காணப்படுகிறாள். சிங்கவரம் குடைவரையில் நாம் கண்ட கொற்றவைச் சிற்பம், திரிபங்க நிலையில் உள்ளது. உடல் வளைவுகளோடு கூடிய நிலை திரிபங்கம். வளைவுகளின்றி உடல் நேராக இருக்கும் நிலை சமபங்கம். கொற்றவையின் வலப்பக்கம் அடியவன் ஒருவன் நவகண்டம் கொடுக்கும் நிலையில் தலையை அரிந்துகொள்ளும் தோற்றத்தில் காணப்படுகிறான். கொற்றவையின் கையில் இருக்கும் சக்கரம் ஏவுநிலைச் சக்கரம் (பிரயோகச் சக்கரம்) என்பது குறிப்பிடத்தக்கது. கொற்றவையின் தலைக்கு இருபுறமும் சிங்கமும், மானும் பெரிதாக வடிக்கப்பட்டுள்ளதைக் காண்க.

வராக மண்டபம்-உலகளந்தான் சிற்பம்:

குறுவடிவத்தில் வந்த பிராமணன் நெடிதுயர்ந்த வடிவம் தாங்கி உலகளந்த நிகழ்ச்சியைக் காட்டும் சிற்பம் இது. உலகளந்த பெருமாள் காலைத் தூக்கும்போது தடுத்த ஒருவன் தூக்கி எறியப்படுகிறான் என்பதைச் சிற்பி அழகுறக் காட்டியுள்ளான். எறியப்பட்டவன் உயரே இருந்து கீழே விழுகிறான். உலகளந்தானின் கால் எட்டிப்போக அதைப் பார்த்த பிரம்மா வியந்துபோகும் காட்சி.

திரிமூர்த்தி மண்டபம்:



திரிமூர்த்தி மண்டபம் - முன்புறத்தோற்றம்

திரிமூர்த்தி மண்டபம், அதன் பெயருக்கேற்ப மூன்று இறைக்கோட்டங்களைக் (கருவறைகளை) கொண்டுள்ளது. முன்மண்டபம் என்னும் அமைப்பு இதில் இல்லை. நடுவில் இருக்கும் இறைக்கோட்டம் அதன் முதன்மைத்

தகுதிகொண்டு, சற்று முன்புறம் நீட்டப்பெற்றுள்ளதைக் காணலாம். மூன்று கோட்டங்களுக்கும் ஏறிச் செல்வதற்குப் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. நடுக்கோட்டத்தில் சிவன்; பக்கக் கோட்டம் ஒன்றில் விஷ்ணு; மற்றொரு பக்கக் கோட்டத்தில் வழக்கமாக இருக்கும் பிரம்மன் இல்லை. இங்கு, பிரம்ம சாஸ்தா என்னும் முருகன் இடம்பெற்றுள்ளார். எனவே, திரிமூர்த்தி மண்டபக் குகை, அதனுள் அமைந்திருக்கும் முருகன் கோட்டத்தால் சிறப்புப் பெறுகிறது.



முதற் கோட்டம் - பிரம்ம சாஸ்தா என்னும் முருகன்



நடுக்கோட்டம் - சிவன்



மூன்றாம் கோட்டம் - விஷ்ணு



மகிஷாசுர மர்த்தனி

முருகன் இங்கு “பிரம்ம சாஸ்தா” என்னும் பெயரில் அழைக்கப்பெறுகிறார். இச் சிற்பம் முருகனின் போர்க்கோலம் எனக் கூறப்படுகிறது. சிற்பத்தின் மார்புப் பகுதியில் பெருக்கல் குறியைப்போல் அமைந்த சன்னவீரம் என்னும் அணிகலன்தான் இது முருகனின் போர்க்கோலத்தைக் குறிக்கிறது என்பது ஆய்வாளர் கருத்து. வாயிலில் இருக்கும் காவலர் (துவார பாலகர்) சிற்பங்களில் உள்ள உருவங்கள் வழக்கமானவை அல்ல.

வாயிற்காவலராக இங்கு நிற்கும் இருவர் இரு முனிவர்களாவர். மண்டபத்தின் மேற்புறம் நாசிக் கூடுகளும் அவற்றுக்கும் மேற்புறத்தில் சிறு கோயில் வடிவத்தைச் சுட்டுகின்றவகையில் சாலை அமைப்போடு கூடிய விமானங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

இதே மண்டபத்தில், விஷ்ணுவின் சிற்பத்துக்கருகில் சிறிய கோட்டத்தில் கொற்றவைச் (துர்க்கை) சிற்பம் காணப்படுகிறது. எட்டுக்கைகளுடன் கூடிய கொற்றவை. சங்கு, சக்கரம், வாள், கேடயம், வில், அம்பு ஆகிய படைக்கலன்களைக் கைகளில் வைத்திருக்கிறாள். மற்ற இரு கைகளில் ஒன்று 'அபய' முத்திரையிலும், மற்றொன்று தொடையில் இருத்திய நிலையிலும் அமைந்துள்ளன. கால்கள் எருமை அரக்கனின் தலையில் பதிந்துள்ளன. எருமை அரக்கனோடு நடந்த போர் முடியும் தருணத்தில் அமைந்தது எனக்கருதப்படுகிறது.

நிலத்தின் மீது பாறையில் தலசயனர்:

மாமல்லையில் காணத்தகும் சிற்பங்களுள் ஒன்று, நிலத்தில் கிடக்கும் பாறையில் விஷ்ணுவின் கிடந்த கோலத்தை வடித்திருக்கும் சிற்பம். தலம், நிலத்தைக் குறிக்கும்; சயனம் (அறி)துயிலைக் குறிக்கும்.

ஆதிவராக மண்டபம்:

திருவிடவந்தைக் கோயிலில் ஆதிவராக மண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தில், வாயிற்காவலராக ஆதிசேடன் காட்டப்பட்டுள்ளது. இங்குள்ள பிரம்மன் சிற்பம் குறிப்பிடத்தக்கது. அவர் தம் இடது கையால் 'அபய' முத்திரை காட்டுகிறார். கருடனுக்கு அருள் காட்டும் கருட அநுக்கிரகர் சிற்பம் இங்குள்ளது. அருகில் சிவனும் நந்தியும் காட்டப்பெற்றுள்ளனர். தண்டு முனிவருக்கு நாட்டியம் கற்பிக்கும் காட்சிச் சிற்பமும் இங்குள்ளது.

திருச்சி மலைக்கோட்டை:

இங்குள்ள சிவனின் சிற்பத்தில் ஆடையில் புலித்தோல் இல்லை. ராஜ வடிவத்தில் ஆடை, மணிமுடி (கிரீடம்), பூணூல், அணிகலன்கள் ஆகியவற்றோடு சிவன் வடிக்கப்பட்டுள்ளார். மகேந்திர வர்மன் தன்னையே சிவனாக வடித்துள்ளான் எனலாம். இச்சிற்பத்தில் ஒற்றைத் தலைமுடியைச் செதுக்கியுள்ளதைக் காணலாம்.

மாமல்லபுரம்:

மாமல்லபுரம் அர்ச்சுனன் தவம் சிற்பத்தில், நீரைக் குறிப்பால் காட்ட நாகம், தாமரை ஆகியவற்றைச் செதுக்கியுள்ளனர்.

தொடர்பு:
துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
அலை பேசி : 9444939156.

# 6. கல்லில் தமிழிசை

—— S.A.விஜய்

உலகிலேயே மிகப்பழமையானதும் தனித்துவமானதும் எனச் சொல்லப்படுவது, 3000 ஆண்டுகள் தொன்மை உடைய நம்முடைய தமிழிசை. தொல் தமிழர் தமக்கென அப்போதே ஒரு தனி இசைக்கோட்பாட்டு முறைமைகளைக் கொண்டிருந்தனர் என்பதே நம்முடைய பழந்தமிழ் இலக்கியங்கள் கூறும் உண்மை. அவ்வகையில், தமிழர் தம்முடைய இசையறிவை, அவர்கள் வகுத்த இசைக்கோட்பாடுகளை இலக்கிய வடிவில் ஓலைச்சுவடிகளில் மட்டும் எழுதிப் பதிப்பிக்கவில்லை, கல்லிலும் பலவாறு பதிப்பித்துள்ளனர். உலகிலேயே இசைக்கு இப்படி ஒரு அம்சம் இருக்கிறதா என அதிசயிக்கும் வண்ணம் தமிழர்கள் கல்லைப் பயன்படுத்தி ஒரு இசை/அறிவியல் சாதனையே படைத்தனர் என்றால் அது சற்றும் மிகையல்ல. அவ்வகையில், தமிழர் கல்லில் வடித்த இசைத்தகவல்கள், ஓசை/இசை எழுப்பும் அமைப்புகளைப் பற்றியதே இக்கட்டுரை.

(I) அரச்சலூர் கல்வெட்டு - கிபி 1 ஆம் நூற்றாண்டு:

தமிழர், ஆதி முதல் தமிழ்நாடெங்கிலும் உள்ள பல்வேறு கோயில்களிலும் உள்ள கற்களில் சிற்பங்களும் உருவங்களும் அமைத்து சாதித்துள்ளனர். அவ்வகையில், பன்னெடுங்காலம் அழியாத்தன்மை கொண்ட கல்லை ஒரு கருவியாகக் கொண்டு, இசைக்கோட்பாடுகளையும், இசைக்கருவிகளையும் பல்வேறு கோவில்களில் அமைத்துள்ளனர். அவற்றில், மிகவும் தொன்மையான இசைக்கல்வெட்டு எனில் அது அரச்சலூரில் 1ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பெற்ற இசைக்கல்வெட்டு ஆகும்.

“எழுத்தும் புணருத்தான் மணிய
வண்ணக்கன் தேவன் சாத்தன்”

என எழுதப்பட்டிருக்கும் அந்தக் கல்வெட்டின் கீழ் த, தா, தை, தே ஆகிய எழுத்துக்களின் கலவையில் சில வரிகள் வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இவை தாள எழுத்துக்கள், நடனத்துக்கு உரியன என்பது அறிஞர்கள் கருத்தாகும். இந்த கல்வெட்டு உள்ள இடத்தில் ஒரு சமண இசைப்பள்ளி இருந்திருக்கக் கூடும் என தொல்லியல் அறிஞர் டாக்டர் ஆ. பத்மாவதி (அவரது களப்பிரர் ஆய்வு உரை காணொளிகளில்) குறிப்பிட்டுள்ளார்.

அடுத்துள்ள படத்தில், கட்டத்தில், கல்வெட்டின் வட்டெழுத்தின் இன்றைய வடிவம் தரப்பட்டுள்ளது. வலது பக்க கல்வெட்டில் 2 & 5ஆவது வரி சிதைந்துள்ளது. நாம் இடப்பக்க கல்வெட்டை மட்டும் பார்ப்போம். ஐந்தைந்துக்

கட்டங்களில்(5x5) இந்தக் கல்வெட்டு அமைந்துள்ளது. இதுபற்றி மேலும் விரிவாக, அடுத்து உள்ள கம்பைநல்லூர் கல்வெட்டைக் கண்ட பின் அலசுவோம்.

e lu ta tu ma pu na ru ta taa na ma lai ya

va na na ka ka na te va na ca ta ta na

ta tai ta tai ta
tai taa tay taa tai
taa tay tai tay taa
tai taa tay taa tai
ta tai taa tai ta

kai ta tai ta kai
ta (kai) (ta) (kai) (ta)
tai ta kai ta (ta)i
ta kai (ta) (kai) (ta)
(kai) ta (tai) ta (ka)i

ta-த taa-தா tai-தை tay-தே

த தை தா தை த

தை தா தே தா தை

தா தே தை தே தா

தை தா தே தா தை

த தை தா தை த

(II) கம்பைநல்லூர் கல்வெட்டு - 12ஆம் நூற்றாண்டு:

தருமபுரி மாவட்டத்தைச் சேர்ந்த கம்பைநல்லூர் என்ற சிற்றூரில் உள்ள சிவன் கோவிலில், அரச்சலூர் கல்வெட்டைப் போலவே நான்கு ஐந்தைந்துக் கட்டக் கல்வெட்டுகள்(5x5) காணப்படுகின்றன. அவற்றில் இரண்டு படியெடுத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. அதில் முதல் கல்வெட்டு தான் கீழுள்ள நமசிவாய கல்வெட்டு. இதில் நமசிவாய என்ற சொல் வெவ்வேறு வரிசையில் எழுதப்பட்டுள்ளது.

| | | | | |
|---|---|---|---|---|
| வா | ம | ய | ந | சி |
| ந | சி | வா | ம | ய |
| ம | ய | ந | சி | வா |
| சி | வா | ம | ய | ந |
| ய | ந | சி | வா | ம |

ஐந்தைந்துக் கல்வெட்டு(5x5)

| | | | | |
|---|---|---|---|---|
| G | D | A | C | E |
| C | E | G | D | A |
| D | A | C | E | G |
| E | G | D | A | C |
| A | C | E | G | D |

Western Notes

| | | | | |
|---|---|---|---|---|
| ப | ரி | த | ச | க |
| ச | க | ப | ரி | த |
| ரி | த | ச | க | ப |
| க | ப | ரி | த | ச |
| த | ச | க | ப | ரி |

| | | | | |
|---|---|---|---|---|
| இ | து | வி | கு | கை |
| கு | கை | இ | து | வி |
| து | வி | கு | கை | இ |
| கை | இ | து | வி | கு |
| வி | கு | கை | இ | து |

ச - கு - குரல் - C
ரி - து - துத்தம் - D
க - கை- கைக்கிளை - E
ப - இ - இளி - G
த - வி - விளிரி - A

இந்த நமசிவாய கல்வெட்டை ஆராய்ந்த டாக்டர் ஆ. பத்மாவதியும், முனைவர் வீரபாண்டியனும், இது மோகனம் பண்ணை குறிப்பது எனவும், இக்கல்வெட்டின் நோக்கம், மோகனப்பண்ணின் மிகச்சரியான சுர வரிசையைக் கூறுவதாகும் என்று ஆய்ந்து கூறியுள்ளனர். அதன்படி, ஐந்துசுரப் பண்ணான முல்லைத்தீம்பாணி எனும் இக்கால மோகனத்தின் சரியான சுர வரிசைகள் ”சபரிகத” ஆகும். இக்கல்வெட்டின் அமைப்பைப் படித்து அதன் உதவியால் தான் சிலப்பதிகாரத்தின் ஆய்ச்சியர் குரவை, முல்லைத்தீம்பாணி பற்றிக் கூறும் செய்தியைச் சரியாகப் புரிந்துகொள்ள முடிந்தது என்பதும் இவர்களின் ஆய்வு முடிவாகும். மட்டுமின்றி, சிலம்பின் உதவியால் தான் இக்கல்வெட்டைப் படிக்கவும் முடிந்தது என்பதும் கூடுதல் தகவல்.

இக்கல்வெட்டை விலங்காமொழி எனும் 11ஆம் நூற்றாண்டு மன்னன் அமைத்திருக்கக்கூடும் எனக்கூறுதற்கேற்ப, இக்கோவிலில், அவன் பெயரான

'விலங்காமொழி' என்பதையும் 'நமசிவாய' கல்வெட்டைப் போலவே, எழுத்துக்களைச் செதுக்கி அமைத்துள்ளதைக் கண்டு தெரிந்துகொள்ளலாம்

| | | | | |
|---|---|---|---|---|
| மொ | லங் | ழி | வி | கா |
| வி | கா | மொ | லங் | ழி |
| லங் | வி | வி | கா | மொ |
| கா | மொ | லங் | ழி | வி |
| ழி | ழி | கா | மொ | லங் |

கோவிலில், இதைக் குறிக்கும் கல்வெட்டு பாடல் ஒன்றும் உண்டு, அது கீழே:-

**பாடல் கல்வெட்டு வருமாறு :**

*உரைமருவும் குலோத்துங்க சோழ தேவர்க்கு*
*உரைத்தயான் டிருபதின்மே லிரண்டிற் பெண்ணைக்*
*கரைமருவுஞ் சிறுகோட்டை குளன்நாகை நாயகற்*
*களித்துக்கற்றளிதன் பேரிட்டகா ரணைய கையான்*
*திரைமருவுந் தடங்கமலைத் தகடை மன்னன்*
*செழும்பாலி பெண்ணைத்திரு நன்மூன் றுடைய*
*விரைமருவுந் தார்மார்பன் ராஜராஜ வதிகன்*
*விலங்காமொழி விடுகாதழ கியப்பெரு மாளேய்*

இதே கம்பைநல்லூர் கோவிலில், இதுபோல், இன்னும் இரண்டு ஐந்தைந்துக் (5x5) எழுத்துக்கள் கொண்ட கல்வெட்டுக்கள் உள்ளன, ஆனால் அவை, கட்டமிடப்படாமல் எழுத்துக்கள் மட்டும் உள்ளன. அவற்றின் எழுத்துக்கள் மேலுள்ள இரண்டைப்போல் சிலம்பின் செய்யுள் கோட்பாட்டுடன் ஒத்துவரவில்லை. அவை தவறான கல்வெட்டாய் இருக்கக்கூடும் எனவேதான் அவற்றைக் கட்டம் போடாமல் விட்டிருக்கக்கூடும்.

மேலுள்ள கம்பைநல்லூர் கல்வெட்டும் சரி, அரச்சலூர் கல்வெட்டும் சரி, ஐந்தைந்துக் கட்டங்கள்(5x5) கொண்டிருப்பதைக் கண்டால், அக்காலத் தமிழர், தாளங்களை வகுக்கவும், பண்களின் சுர வரிசை கணக்கிடவும் இதுபோன்ற கட்டங்களைப் பயன்படுத்தினர் என முடிவுக்கு வரலாம். இவ்விரண்டு கல்வெட்டுக்களுமே இன்னும் ஆழமான ஆய்வுக்குரியன.

புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த குடுமியான்மலை என்ற சிறு மலைமேலுள்ள 7ஆம் நூற்றாண்டு கோவிலின் வெளியே ஒரு மிகப்பெரிய இசைக் கல்வெட்டு ஒன்று உள்ளது. அதற்கு ஒரு கூரை அமைத்துப் பாதுகாக்கப்படுகிறது.

இக்கல்வெட்டு 38 வரிகளைக்கொண்டு சமஸ்கிருத கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ளது. இது பல்லவ அரசனான மகேந்திரவர்மன் காலத்தது என்பது பல அறிஞர்களின் கணிப்பு. முழுவதும் கிரந்த எழுத்தில் உள்ள இக்கல்வெட்டின் முடிவில் "இவை எட்டிற்கும் ஏழிற்கும் உரிய" என எழுதி முடிக்கப்பட்டுள்ளது. இதை "இவை யாழிற்கும் பாட்டிற்கும் உரிய" எனக்கொள்ளும் அறிஞர்களும் உள்ளனர்.

புதுக்கோட்டை குடுமியான்மலை கல்வெட்டு - 7ஆம் நூற்றாண்டு




இக்கல்வெட்டு செய்திகளுக்கு ஸ்வராகமா (சுவர ஆகமம் எனப் பெயரிடப்பட்டுள்ளது, காந்தர்வ இசை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. ருத்ராச்சாரியார் எனும் இசையோன், இசை மாணவர்களுக்காக இக்கல்வெட்டை வடித்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. இந்த 38 வரிகளில், எழுத்துக்களை இசை vowels ஆகப் பாவித்து, பல்வேறு விதமான கிராம மூர்ச்சனைகள் சொல்லப்பட்டுள்ளன. இவற்றின் வாயிலாகக் கடைசியாக 1) மத்தியம, 2) ஷட்ஜ, 3) ஷாடவ, 4) சாதாரித, 5) பஞ்சம, 6) கைசிக மத்தியம, 7) கைசிக கிராமங்கள் என ஏழு ராக முறைகள் கிடைக்கின்றன. இவற்றை முறையே ஏழ்பெரும் பண்களுடன் ஒப்பிடலாம் என, இசையறிஞர் வி.பா.க சுந்தரம், தனது 'தமிழிசைக் கலைக்களஞ்சியம்' தொகுதி இரண்டு பக்கம் 145இல் கூறியுள்ளார்.



| | | | | |
|---|---|---|---|---|
| 38 | धु[के]सपुं | [के]स[मुं]पें | सरिमुंपें | रिसरुपं |
| | मुं[कें]समुं | [के]सउंपें | स²म[ए]पुं | रिकंमपं |
| , | सधेसपुं | मिधु[रि]पुं | [के]सरुंपें | मुंपेंरपि |
| | सेकुंसेपुं | मिसेमपि | .... | .... |

श्रीरुद्राचार्य्यशिष्येण परम-
माहेश्व[रे]ण रा[ज्ञा] शिष्य-
हितार्थं[3] कृताः स्वरागमाः ॥

[4] [E]ṭṭiṟkum ēḻiṟkum [i]vai uriya : ||




இக்கல்வெட்டினால் அறியக்கூடிய இறுதிச் செய்தி என்பது சற்றே குழப்பமாக இருந்தாலும், இந்தியாவிலேயே இத்துணை பெரிய இசைக்கல்வெட்டு வேறெங்கும் இல்லை என்பது இதன் தனிச்சிறப்பாகும். இக்கல்வெட்டு மேலும் ஆழமாக ஆராய்வதற்குரியது.

திருமெயம் மலையக்கோவில் பரிவாதினி - 7ஆம் நூற்றாண்டு



குடுமியான்மலைக்கு அருகிலேயே உள்ள திருமயம் எனும் இடத்திலுள்ள குடைவரைக் கோவிலில் மற்றுமொரு இசைக்கல்வெட்டு கிடைக்கின்றது. ஆனால் இதன் சில பகுதிகள் அழிந்துபட்டுள்ளன, ஆனால் கிட்டத்தட்ட இதே வரிகள் கொண்ட மற்றொரு கல்வெட்டு, இதே திருமயத்திற்கு அருகே உள்ள மலையக்கோவிலில் அழியா நிலையில் காணக்கிடைக்கிறது.

இரண்டிலுமே 'பரிவாதிநிதா' என்ற வரி முதலில் உள்ளது. முழுமையாக
"பரிவாதிநிதா
"குணஸேண ப்ரமாணஞ்
செய்த வித்யா பரிவாதிநிகற்
கற்பிக்கப்படுவது காண்
ஞ் சொல்லிய புகிற்பருக்கும் நிமி
முக்கந் நிருவத்துக்கும் உரித்து"

என்று இக்கல்வெட்டு உள்ளது. இதிலுள்ள பரிவாதிநி என்பது ப என்ற இளிச்சுரம் மற்றும் ரி2 வன் துத்தம் இணைச்சுரமாகக் கொண்டு உருவாகும் மேற்செம்பாலை பண்ணை குறிக்கிறது என்பது, வி.பா.க சுந்தரம் அவர்களின் கருத்து. இதனால் இதை ஏழ்நரம்புடைய வீணை என்று சொல்லலாம் என்கிறார் அவர்.

திருநெல்வேலி - நெல்லையப்பர் கோவில் - 7ஆம் நூற்றாண்டு



திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலில் உள்ள தாளச்சக்கரக் கல்வெட்டு



மேலே காணப்படுவது, திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலில் உள்ள ஒரு மிக அரிதான தாளச்சக்கரக் கல்வெட்டு. இது 17ஆம் நூற்றாண்டு எனச் சிலரும், 12ஆம் நூற்றாண்டு எனச் சிலரும் கூறுகின்றனர். இது, தற்கால கர்நாடக சங்கீதம் வழங்கும் 35 தாளங்களை அதன் பெயர் அங்கங்களுடன் விளக்கும் ஒரு விரிவான சக்கரம். இதன் மையப்பகுதியில் ஒரு சிறு மயில் செதுக்கப்பட்டு அதைச்சுற்றி 5 அடிப்படைத் தாளங்களைக் குறிக்கும் வகையில் ஒரு தாமரையின் ஐந்து இதழ்களும், அவை, 7 ஜாதிகளாகப் பெருகுவதை, வெளிச்சக்கரத்தில் 7 தாமரை இதழ்களாகவும் விரிவதை மேலுள்ள படத்தில் காணலாம். அந்த 5 தாளம் மற்றும் 7 சாதிகளும் சேர்ந்து மொத்தம் 35 தாளங்கள் உருவாவதை, அதற்கும் வெளியிலுள்ள இரு சக்கரங்களில் காணலாம், முதல் சக்கரத்தில், 35இல் ஒவ்வொரு தாளத்தின் குறியீடுகளையும், அதற்கும் வெளியே அதாவது

இக்கல்வெட்டின் கடைசி, வெளிப்புற சக்கரத்தில் ஒவ்வொரு தாளத்தின் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. இதுவும், இந்தியாவில் (மதுரையைத் தவிர) வேறெங்கும் இல்லாத ஒரு தாளச்சக்கர அமைப்பாகும். தற்கால தாளங்களின் சில பெயர்களும் அங்கங்களும் இக்கல்வெட்டில் மாறியுள்ளது.




அதே நெல்லையப்பர் கோவிலில், மிகவும் புகழ்பெற்ற நான்கு இசைத்தூண் தொகுப்புக்கள் உள்ளன. ஒவ்வொரு தூண் தொகுப்பிலும், 48 தனித்தூண்கள் சுற்றி உள்ளன, நடுவில், மையமாக, கையால் தொடமுடியாத அளவு உள்ளே ஒரு பெரிய தூண், தாங்குவதற்காக உள்ளன. வெளிப்புறத்தில் உள்ள தூண்களுக்கும் மையத்தூணுக்கும் இடையிலும், சில கையால் அணுகித் தொட்டு

அசைக்கமுடியாத தூண்களும் உள்ளன. இத்தூண்கள் இன்றளவும் இயங்குகின்றன, கையால் மென்மையாகத் தூணின் நடுவில் தட்டினால் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுரங்களை ஏற்படுத்துகின்றன. இவற்றைக் கொண்டு சில முழு ராகங்களை வாசிக்கமுடியும் எனச் சொல்லப்படுகின்றது ஆனால் இத்தூண்களின் இசைப்பண்புகளை இன்னும் முழுமையாக ஆய்வு செய்யப்படாத நிலை உள்ளது. கீழே, இத்தூண் தொகுப்புகளில் ஒன்றின், மேல்நோக்கிய குறுக்குவெட்டு அமைப்பு படமாகக் காட்டப்பட்டுள்ளது. இதை நோக்கினால், சில தூண்கள் வட்டமாகவும் சில சதுரமாக, சாய்சதுரமாக, 8 முக வட்டமாக, அலைவரிசை வடிவாக என இத் தூண்கள் வெவ்வேறு வடிவில் உள்ளது தெரியவரும். எந்த தூண் வெளியே உள்ளது, எது உள்ளே வாசிக்க இயலா நிலையில் உள்ளது என்பதும் தெரியவரும்.




1.—Plan of south-eastern pier.

இத்தூண்களின் இசைப்பண்புகளை முழுமையாக ஆராய்ந்தால், கீழ்க்கண்ட தகவல்களை அறியலாம்:

- தூண்களின் சுரம் மற்றும் அதிர்வெண்,
- எத்தனை மண்டிலம் / கோவை ஒரு தூண் தொகுப்பில் உள்ளது,
- ஒரு மண்டிலம்/கோவையில் அலகுகள் 24ஆ 22ஆ,

• ஒரு தூணின் அதிர்வு அருகாமைத்தூண்களில் அதிர்வு ஏற்படுத்துகிறதா(sympathetic resonance),
• அதனால் இத்தூண்களுக்கிடையே இணை கிளை நட்பு பகை உறவு உள்ளதா என ஆராயலாம்,
• தூண்களின் வடிவங்கள் வெவ்வேறு, அதனால் அதன் ஒலிப்பண்பு Timbre மாறுகிறதா,
• நூற்றாண்டுகளாக நிற்கும் இசைத்தூண்கள் இன்று சற்றே மாறியிருக்கும், அன்று எப்படி ஒலித்திருக்கும்.





View of south-east pier from north-east.

இத்தகைய இசைத்தூண்கள், நெல்லை அருகே உள்ள ஆழ்வார்திருநகரி கோவில் மற்றும் சுசீந்தரம் கோவிலிலும், கர்நாடக மாநில ஹம்ப்பியிலும் உள்ளன, ஆனால் அவை நெல்லை கோவில் அளவுக்கு விரிவான தூண்கள் இல்லை.

(III) மதுரை மீனாட்சியம்மன் கோவில் தாளச்சக்கரங்கள் - 17ஆம் நூற்றாண்டு:

மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் இரண்டு அரிதான தாளச்சக்கரங்கள் உள்ளன. அவற்றில் முதல் சக்கரம் கீழே உள்ள சிம்மநந்தன தாளச் சக்கரம். 35 தாளங்களில் அடங்காத தனித்துவமான தாளமான சிம்மநந்தன தாளம் மிகச்சிக்கலான, மிக நீண்டதாக 128 அட்சரங்களைக் கொண்டுள்ளது. அதைக் குறிக்கும் விதமாகக் கீழுள்ள சக்கரம் உள்ளது.

சிம்மநந்தன தாளம்



Plate 42: Tāla sculptures in Sri Meenakshi Amman Temple, Madurai. Simhanandana Tāla

மதுரைக் கோவிலிலுள்ள மற்றொரு தாளச்சக்கரம், கீழுள்ள சப்த சூழாதி தாளம் என்ற 35 தாளங்களின் அங்கங்களைக் குறிக்கும் சக்கரம். இது நெல்லை கோவிலின் தாளச்சக்கரத்தை ஒத்தது எனினும் அதனளவு விரிவானது அல்ல.

சப்த சூழாதி தாளம்



Plate 39: Tāla sculpture, Sri Meenakshi Amman Temple, Madurai. 35 Tālas

இதே மதுரைக் கோவிலிலும் இசைத்தூண்கள் உள்ளன எனவும், அவையும் நெல்லை கோவில் போல் பல சுரங்களை எழுப்ப வல்லன என்றும் செய்தி உண்டு. அது உண்மையே, ஆனால், அத்தகைய தூண்கள் இருப்பதே இக்காலத்தில் பலருக்கும் தெரியா வண்ணம் அவற்றைத் தடுப்புகள் போட்டு வைத்துள்ளனர், காரணம், மக்கள் கூட்டம் அதை இயக்கி தூண்களை பாழ்ப்படுத்திவிடாமல் பாதுகாக்கவே. இத்தூண்களும் விரிவான ஆராய்ச்சிக்கு உள்ளான தகவல்கள் ஏதும் இதுவரை கிடைக்கவில்லை.

இவை அனைத்தும் நமக்குக் கூறுவது என்னவென்றால், தமிழர்கள் தமிழ் இசையை எவ்வளவு நுட்பமாக வளர்த்திருந்தனர், அதைக் கல்வெட்டுக்களில் எவ்வளவு புதுமையாகப் பதிவு செய்துள்ளனர் என்பதே. இவற்றில்;

- ராகம்/பண்களை வகுத்துக்கூற ஒரு வழி சொல்லும் குடுமியான்மலை இசைக்கல்வெட்டு,
- அங்கு திருமயத்தில் வாசிக்கப்பட்ட பரிவாதிநி வீணை,
- மதுரையிலும் நெல்லையிலும் கோவில்களில் உள்ள மூன்று வெவ்வேறு விதமான தாளச் சக்கரங்கள்,
- நெல்லை, ஆழ்வார்திருநகரி, சுசீந்திரத்தில் உள்ள பல்வேறு அம்சங்களைக் கொண்ட இசைத்தூண்கள்,
- பாடலுக்கும் ஆடலுக்கும் உரிய தாளங்களை வகுக்கும் அரச்சலூர் கல்வெட்டு,
- இசைக்கலை மிக உயர்ந்த நிலையிலிருந்தது என மகேந்திரவர்மன் பெருமையுடன் சொல்லும் மாமண்டூர் பல்லவர் காலக் கல்வெட்டு,
- கல்லில் காற்றைச் செலுத்தி ஊதி வாசிக்கக்கூடிய கல் நாகசுரம்- ஆழ்வார்திருநகரி,
- ஒரு கல் பந்தை உருட்டினால் ஏழு சுரங்களை வாசிக்கும் இசைப்படிகள்(தாராசுரம்),
- வெள்ளம் வந்தால், வெள்ள நீர் வடியும் வரை விடாமல் ஓசை எழுப்பும் அபாயக் கல் சங்கு - தாமிரபரணி ஆறு.

இப்படி, வெறும் கல்லைக்கொண்டு, தமிழன், ராகம், தாளம், சுரம் இசைக்கருவிகள் ஓசை, இவற்றை உருவாக்கினர். இதுவரை இக்கட்டுரையில் கூறியுள்ள கற்படைப்புகள் போக, இசைக்கலைஞர்கள் இசைக்கருவி வாசித்து நடனமாடும் சிற்பங்களும், இன்னும் இசைப்பாடல்களைத் தாங்கிய கல்வெட்டுக்களும் தமிழகத்தில் இன்றளவும் ஆங்காங்கே உள்ளன. மறைந்த இசை அறிஞர் திரு.தண்டபாணி அவர்கள் எழுதிய 'திராவிடர் இசை' எனும் நூலிலும், இன்னும் சில தமிழிசை நூல்களிலும், இங்குக் கூறப்படாத இசைக் கற்படைப்புகள் பட்டியலிடப்பட்டுள்ளன. அப்படியெனில், 3000 ஆண்டு பழமையான தமிழிசை, அக்காலத்தில் எவ்வளவு உயர்ந்த நிலையிலிருந்தது என்று எண்ணி வியக்காமல் இருக்கமுடியவில்லை.

உலகிலேயே வேறெந்த இசைப்பண்பாட்டிலும் கல்லை இப்படி பலவிதமாகவும் பயன்படுத்தியதில்லை எனுமளவுக்கு, கல்லில் இத்துணை இசையறிவை வடித்த தமிழன், அதைவிடப் பன்மடங்கு சொல்லில், அதாவது ஓலைச்சுவடி எழுத்தில் வடித்திருக்கிறான், அதைவிடப் பன்மடங்கு, இசையை வில்லில்(வில் யாழ் முதலிய யாழ் வகைகள்) வாசித்துள்ளான்! எனவே, அக்காலத்தமிழன் இசையில் மிகவும் உயர்ந்திருந்தான் என்பதை, தொழில்நுட்பத்தைக் கையில் வைத்துள்ள இக்காலத் தலைமுறையினராகிய நாம் உணரவேண்டும். பலப்பல ஆழமான ஆய்வுகள் பல செய்து, நம் தமிழிசையின் இசையியல் கோட்பாட்டுத்துறையை மீட்டெடுத்து உலவ விடுவதே நாம், இளங்கோ முதலான நம் இசைமேதைகளுக்குச் செய்யக்கூடிய கைமாறு ஆகும்.

References:

1) 2015.180704. Epigraphia-Indica Vol12
2) ஆய்வுப்பேழை - கா.ம.வேங்கடராமையா (1987) பக்கம் 138
3) தமிழிசையில் புதிய வெளிச்சம் - டாக்டர் ஆ. பத்மாவதி
4) The Musical Dimension of Shiva - A New Discovery - Dr. S.A.Veerapandian
5) The Ragas of Early Indian Music - Richard Widdess
6) தமிழிசைக் கலைக்களஞ்சியம் தொகுதி 2, பக்கம் 145 - வி.பா.க. சுந்தரம்
7) தமிழிசை இலக்கண வரலாறு - மு.அருணாசலம். பக்கம் 90 & 255
8) The Music Academy Journal 1943 - Piano in Stone, page109
9) Mridangam - Shreejayanthi Gopal - Pages 73 & 81
10) திராவிடர் இசை - ப. தண்டபாணி, பக்கம் 80

குறிப்பு:

ஆபிரகாம் பண்டிதர் 6 இசை மாநாடுகளை நடத்தியபின்பு விழுந்த 100 ஆண்டுகள் இடைவெளிக்குப்பின் முதன்முறை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் மீண்டும் இசை மாநாடுகள் நடத்துவது மிகவும் பாராட்டுக்குரியது. இது அந்த மதுரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்திய "முதலாவது உலகத் தமிழிசை மாநாடு - 2019"(14 & 15 டிசம்பர் 2019) படிக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை.

தொடர்பு: இசை ஆய்வாளர் S.A.விஜய், சென்னை (vijeeth@gmail.com)

# 7. கலைஞரைக் கவர்ந்த செங்கம் கல்வெட்டு

—— மா.மாரிராஜன்

கல்வெட்டு காலாண்டிதழ்; தொல்லியல்துறையின் பருவ இதழ் வெளியீடுகளில் மிகவும் சிறப்பான ஒன்று கல்வெட்டு காலாண்டிதழ். 1974 ஆம் ஆண்டு முதல் இவ்விதழ் 45 ஆண்டுகளுக்கும் மேலாக வெளிவருகிறது. பல்வேறு தொல்லியல் தரவுகளை உள்ளடக்கிய ஒரு நீண்ட காலமாக வெளிவந்த காலாண்டிதழ். இதன் முதல் இதழ் ஏப்ரல்14 ம் தேதி 1974 இல் வெளிவந்தது.

முதல் இதழில் முதல் தொல்லியல் கட்டுரையாக அன்றைய தமிழக முதல்வர் கலைஞர் அவர்களின் "என்னைக் கவர்ந்த கல்வெட்டு" என்ற தலைப்பில் செங்கம் நடுகல் பற்றிய கட்டுரை வெளிவந்தது.

என்னைக் கவர்ந்த கல்வெட்டு
தமிழக முதல்வர்




செங்கத்தில் உள்ள சிலையின் படமொன்றை இங்கே காணலாம். அச்சிலை என்னை மிகவும் கவர்ந்தது. வீரனொருவன் நிற்கின்றான். அவன் பின்னால் ஒரு நாய் நிற்கிறது. இதுதான் அந்தச் சிலையின் அமைப்பு. பல்லவர்களிலே பெரும் புகழ் பெற்ற மன்னன் மகேந்திரவர்மன் காலத்தியது அது. எருமைப் பண்ணையின் காவலன் அவன். அவனைக் கள்ளர்கள் வீழ்த்திவிடுகிறார்கள். வீரனுக்குத் துணையாக நின்ற நாய் அந்த அடி பட்ட வீரன் விழுந்து கிடந்த இடத்திலேயே, அவனை அடித்து வீழ்த்திய கள்ளர்களோடு போரிட்டு, அந்தக் கள்ளர்களை வீழ்த்தி வெற்றி கண்டது. இதைக் கல்வெட்டாக ஆக்கியிருக்கின்றார்கள். இன்றைக்குச் சிலை வைத்து, சிலைக்குக் கீழே யார் தலைவர், யார் திறப்பாளர் என்று எழுதினால் கூட கோபித்துக் கொள்ளுகின்ற புண்ணியவான்கள்

எல்லாம் நாட்டிலே இருக்கின்றார்கள் அன்றைக்கு ஒரு நாய் இரண்டு பேரை அடித்துக் கடித்துக் கொன்றது. அதற்கு ஒரு கல்வெட்டு எடுத்தான். நன்றி மறவாதது நாய் மாத்திரமல்ல, அந்தக் காலத்துத் தமிழனும் நன்றி மறவாதவனாக இருந்தான் என்பதைக் காட்டிக் கொண்டான் அந்தக் கல்வெட்டின் மூலமாக.



எவ்வளவு அழகான கல்வெட்டு

"கோவிசைய மயீந்திர பருமற்கு"

அவர்கள் மகேந்திரவர்மன் என்று எழுதினார்களோ அல்லது மகீந்திரவர்மன் என்று எழுதினார்களோ, கல்வெட்டிலே இருப்பது

"கோவிசைய மயீந்திர பருமற்கு முப்பத்து நான்காவது: வாணகோ அரைசரு மருமக்கள் பொற்றொக்கையார் இளமகன் கருந்தேவக்கத்தி"

காவல் காத்த அந்த வீரனுடைய பெயர் கருந்தேவக்கத்தி என்பதாகும். மகேந்திரவர்மனுடைய காலத்தில், 34-வது ஆண்டில், வாணகோ என்கின்ற அரசருடைய மருமக்களான பொற்றொக்கையாருடைய இளமகன் கருந்தேவக்கத்தி,

"தன் எருமைப் புறத்தே வாடிபட்டான் கல்",

எருமைகளைக் காப்பாற்றுகின்ற அந்த காவல் கூடத்தில் அவன் கொல்லப்பட்டான்.

அந்த இடத்தில் " கோவிவன் என்னும் நாய்", நாயினுடைய பெயரே கோவிவன். இப்பொழுது ஏதேதோ பெயர்கள் வைக்கிறோமே, ஆங்கிலப் பெயர்களை நாடி - அப்பொழுது,

"கோவிவன் என்னும் நாய் இரு கள்ளரைக் கடித்து காத்திருந்த வாறு."



இப்படி அந்தக் கல்வெட்டிலே எழுதப்பட்டுள்ளது ஒரு நாயினுடைய வீரச்செயல்; அதற்கு முந்தி தான் எடுத்துக் கொண்ட பொறுப்பை கடமையுணர்வோடு செய்து, அங்கே கொல்லப்பட்ட ஒரு வீரனுடைய வாழ்க்கையை இந்தக் கல்வெட்டிலே அன்றைக்கு காண்பித்திருக்கிறார்கள் என்றால் இது நம்முடைய பழங்கால மன்னர்களால், பழங்காலத் தமிழர்களால், தமிழ் நாட்டு மக்களால் எவ்வளவு போற்றப் பட்டிருக்கிறது என்பதனை நாம் அறிந்து கொள்ள முடியும்.

தொடர்பு: மா.மாரிராஜன் (marirajan93@gmail.com)

# 8. ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வு ஏற்படுத்தும் ஆர்வங்கள்

— முனைவர் சிவ. இளங்கோ

கீழடி அகழ்வாய்வுகளைத் தொடர்ந்து தமிழ் மக்களுக்கு வரலாற்றின் மீதும் தொல்லியல் சார்ந்த கண்டுபிடிப்புகள் மீதும் ஆர்வம் பொங்கிப் பெருகிக் கொண்டிருக்கிறது. தமிழக அரசின் தொல்லியல் துறை, தொல்லியல் பயிற்சிப்பட்டறை நடத்த முன்வந்ததும், அதற்கு எட்டாயிரத்துக்கும் மேல் விண்ணப்பங்கள் இணைய வழியில் குவிந்திருப்பதைக் கண்டு அத்துறை அமைச்சரே ஆச்சரியத்தை வெளிப்படுத்தும் அளவுக்குத் தமிழ் மக்களின் ஆர்வ விழிகள் தொல்லியல் மீது கூர்ந்திருக்கின்றன. தமிழக அரசின் கீழடி அறிக்கைப்படி தமிழ் எழுத்துக்களின் காலம் கி.மு.2600 வரை நீண்டு, இந்தியாவின் முதல் எழுத்துரு அமைந்த மொழியாகத் தமிழை உறுதிப்படுத்தியிருப்பதே இந்த ஆர்வங்களுக்கு அடிப்படை. இதற்கு மேலும் தமிழ் மொழியின் காலம் பின்னோக்கி நீளக்கூடும் என்ற எதிர்பார்ப்புதான் தற்போதைய நாடித் துடிப்பு. அதற்கேற்றாற்போல் கீழடி, ஆதிச்சநல்லூர், கொடுமணல், சிவகளை ஆகிய இடங்களில் அகழ்வாய்வு நடத்த, மத்திய அரசின் தொல்லியல் துறை அனுமதியுடன், தமிழக அரசு களமிறங்கி உள்ளது. அதே நேரம் 2004 ஆம் ஆண்டில் ஆதிச்சநல்லூரில் மத்திய தொல்லியல் துறையால் ஆய்வு நடத்தப்பட்டு, அதில் ஒருசில மாதிரிகள் காலக் கணிப்பும் செய்யப்பட்டு, அவை கீழடி முடிவுகளைவிட பின்னோக்கிச் செல்லக்கூடிய காலமாக இருக்கின்றன என்று வெளிவரும் தகவல்களால் ஆதிச்சநல்லூரில் நடைபெற்ற அகழ்வாய்வின் முடிவுகளை இந்தியா முழுவதுமான வரலாற்றாய்வாளர்கள் பெரும் ஆர்வத்துடன் எதிர்நோக்கி உள்ளனர்.

பெயர்க்காரணம்:

தமிழகத்தின் தென்கோடியில் தூத்துக்குடி மாவட்டம், திருவைகுண்டம் வட்டத்தில், தாமிரபரணி என்று இப்போது அழைக்கப்படும் பொருநை ஆற்றின் தென்கரையில் பொன்னக்குடி (பொன்னன் குறிச்சி) என்ற ஊரின் அருகில் மேடாக அமைந்திருக்கும் பகுதியே தற்போது ஆதிச்சநல்லூர் என்றழைக்கப்படுகிறது. அப்பகுதி பறம்பு என்றும் வழங்கப்படுகிறது. அரசின் வருவாய்த் துறை ஆவணங்களின்படி வெள்ளூர் என்னும் கிராமத்தின் எல்லைக்குள் அடங்கும் பகுதி. இங்கு முதுமக்கள் தாழிகள் ஏராளமாக உள்ளன என்பது தற்போது கண்டுபிடிக்கப்பட்ட வரலாறு. ஆனால் இதற்கு தாழிக்காடு என்ற பெயர் பலகாலமாக வழங்கப்பட்டு வருகிறது. இத்தாழிக்காடு இடுகாட்டுப் பகுதியாக இருப்பதால், இங்கு புதைக்கப்பட்ட மனிதர்களின் வாழ்விடப்பகுதியாக பொருநை ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள கொங்கராயக் குறிச்சி என்ற ஊர் இருந்திருக்கலாம் என்றும், அவ்வூரில் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஒரு

செங்கற்கட்டுமானம் தன்னால் காணப்பட்டதாகவும் அலெக்சாண்டர் ரீ, தனது 1906 ஆம் ஆண்டு அகழ்வாய்வு அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.



ஆதிச்சநல்லூரில் அதிகமாகக் கிடைத்தவை முதுமக்கள் தாழிகள்

கொங்கராயக் குறிச்சி என்னும் இப்பழமையான ஊர் பத்தாம் நூற்றாண்டுச் சமணர் கல்வெட்டுகளில் முதுகோனூர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[1] ஆனால் நல்லூர் என்ற பெயர் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. ஆற்றுநீர் பாயும் மருதநிலத்தில் அமைந்த ஊர்கள் நல்லூர் என்று அழைக்கப்படுகின்றன. அவை கடலோடு சேரும் ஆற்று முகத்துவாரங்களாகவும் இருக்கும்.[2] நல்லூருக்கு முன்னே சேரும் ஆதிச்ச என்ற பெயர் 17ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளதாகக் கூறப்படுகிறது.[3] ஆதிச்ச என்ற முன்னொட்டு இராஜராஜ சோழனின் அண்ணனான ஆதித்த கரிகாலன் என்ற பெயரிலிருந்து வந்திருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. ஆதி தச்ச நல்லூர் என்ற பெயரே ஆதிச்சநல்லூராக மருவியது என்றும் ஒரு கருத்து உள்ளது. எனினும், நல்லூர் என்பது மட்டும் மாறாமல் உள்ளது.[4]

அகழ்வாய்வுகள்:

ஆதிச்சநல்லூர்ப் பகுதியில் தொல்லியல் சான்றுகள் 18ஆம் நூற்றாண்டிலேயே ஒருசிலரால் கண்டறியப்பட்டன. 19ஆம் நூற்றாண்டில் அப்பகுதிகளில் இருப்புப்பாதை அமைக்கும் பணிகள் நடைபெற்றபோது முதுமக்கள் தாழியுடன் பல தொல்லியல் பொருட்கள் கிடைத்தன. இது குறித்துப் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் செய்திக்குறிப்பொன்றை வெளியிட்டது (மதராஸ் அரசாணை எண்:867 நாள் 13.08.1876). இதைக் கண்ணுற்ற ஜெர்மானியர் ஜாகோர் என்பவர் தன்னார்வத்தில் இந்தியா வந்தடைந்து ஆதிச்சநல்லூர்ப் பகுதிகளில் அம்மாவட்ட ஆட்சியர் உதவியுடன் 1876 ஆம் ஆண்டில் அகழ்வாய்வினை மேற்கொண்டார். இதில் பல அளவுகளில் மண்பாண்டங்கள், இரும்புப் பொருட்கள், எலும்புக் கூடுகள்

கிடைத்தன. இவற்றைப் பெரும் அளவில் ஜாகோர் தன்னோடு ஜெர்மனி எடுத்துச் சென்றார் என்றும், அவை தற்போது பெர்லின் அருங்காட்சியகத்தில் உள்ளன என்றும் ஆய்வாளர்கள் பலர் கூறியுள்ளனர். ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர்கள் 1886 இல் இங்கு இனப்பகுப்பாய்வுக்கு ஆய்வு செய்துள்ளனர். இதே காலகட்டத்திற்குச் சற்று முன்னர், அவ்விடங்களில் தனிப்பட்ட முறையில் ஆய்வு செய்த கால்டுவெல், "தென்னிந்தியாவில் மிகப்பெரிய பழமையான நாகரிகமாகச் சிறந்து விளங்கியது பொருநைக் கரையே" என்று கூறியுள்ளார்.

இதற்குப் பிறகு அலெக்சாண்டர் ரீ என்பவர், 1899 முதல் 1904 ஆம் ஆண்டு வரை 33 இடங்களில் அகழ்வாய்வு மேற்கொண்டார். இருபத்தோரு மாட்டு வண்டிகளில் அவர் ஏற்றிச்சென்ற பொருட்கள் பலவும் இன்று சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளன. பின்னர் 1915 இல் அவர் வெளியிட்ட அறிக்கையில் "எகிப்திய பிரமிடுகள் என்று சொல்லக்கூடிய புதைகுழிகளை விடவும் பழமையானவை இங்குள்ளன. தென்னிந்தியாவிலேயே மிகப் பரந்த அளவில் கண்டுபிடிக்கப்பட்ட வரலாற்றுக்கு முந்தைய இடம் இதுதான்" என்று கூறினார். 1903 - 1904 ஆம் ஆண்டுகளில் அகழ்வாய்வு செய்த பாரிசு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த லூயி லாப்பேக் என்பவர் நான்கு குழிகளிலிருந்து, தான் கண்டெடுத்த பொருட்களைப் பாரிசு அருங்காட்சியகம் கொண்டு சென்றார். "அப்பொருட்கள் தொன்மைத் திராவிடர்களுடையவை" என்று அவர் கருத்து வெளியிட்டார். ஜே.ஆர். ஹெண்டர்சன் என்பவர் 1914 ஆம் ஆண்டில் ஆய்வுகள் மேற்கொண்டார். இதன் பின்னர் 2004 - 2006 ஆம் ஆண்டுகளில் மத்தியத் தொல்லியல் துறை அகழ்வாய்வு செய்ததில் 169 முதுமக்கள் தாழிகளும், மண்பாண்டங்களும், எலும்புகளும் கிடைத்தன. இவ்வாய்வின் அறிக்கை இதுவரை வெளியிடப்படவில்லை.[5] அதே நேரம், தற்போது (பிப்ரவரி 2020) மத்திய தொல்லியல் துறை, 2004 - 2006 ஆண்டு அகழ்வாய்வு குறித்து இடைக்கால அறிக்கையை மத்திய அரசுக்குக் கொடுத்துள்ளதாக ஊடகங்கள் தெரிவிக்கின்றன.[6]

பொருட்களும், காலமும்:

ஆதிச்சநல்லூரில் இருபதாம் நூற்றாண்டுக்கு முன்னர் நடைபெற்ற அகழ்வாய்வுகள் பலவும் அறிவியல் முறைப்படியான அகழ்வாய்வுகளாக நடத்தப்படவில்லை. மேலும் தொல்லியல் பொருட்கள், புதையல்கள் போன்றவற்றின் மீதான சட்டங்கள் ஏதும் இயற்றப்படாத நிலையில் அவற்றைத் தோண்டி எடுத்தவர்கள் அவர்களுடன் எடுத்துச் சென்றனர். ஆதிச்சநல்லூரில் அதிகமாகக் கிடைத்தவை முதுமக்கள் தாழி என்பதால் அவற்றை வைத்து அப் பறம்பு முழுமையும் இடுகாட்டுப் பகுதி என்றே பலர் கருத்துரைக்கின்றனர். ஜாகோரின் 1876 ஆம் ஆண்டு அகழ்வாய்வில் பலவகையான, அளவிலான மண்பாண்டங்களுடன் இரும்பினால் செய்யப்பட்ட ஆயுதங்கள், கருவிகள், வெண்கலத்தால் ஆன உருவச் சிலைகள், தங்க நெற்றிப் பட்டயங்கள், மனித எலும்புகள், நெல், சாமை போன்ற தானியங்கள் கிடைத்துள்ளன. அலெக்சாண்டர் ரீ நடத்திய 1899-1904 ஆம் ஆண்டு ஐந்து கட்ட அகழ்வாய்வுகளில் முன்னர்க் கூறிய பொருட்களோடு வெண்கலக் கருவிகள், தங்க அணிமணிகள், கல் அம்மிகள். கலைநயம் மிக்க பூச்சாடிகள், கிண்ணம், சட்டி, சல்லடை போன்ற சமையல்

பாத்திரங்கள் ஆகியவையும் கிடைத்துள்ளன. மத்திய தொல்லியல் துறை 2004 - 2005ஆம் ஆண்டுகளில் நடத்திய சிறிய பகுதியிலான அகழ்வாய்வில் பெருமளவில் முதுமக்கள் தாழிகளும் (169), அவற்றின் உள் சிறிய மண்பாண்டங்கள், எலும்புகள், தானியங்கள் ஆகியவையும் கிடைத்துள்ளன. இவ்வாய்வின்போது, கோட்டைச் சுவரின் ஒரு பகுதியும், குயவர்களின் சூளையும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கோட்டைச் சுவர் சீரான வடிவமைப்பைக் கொண்டது. கோட்டையில் குயவர்களின் குடியிருப்பும் இருந்திருக்கிறது. மூன்று பானை சுடும் சூளைகளும், சாம்பலும், கரியும், உடைந்த பானை ஓடுகளோடு அங்குள்ளன. இரும்புக் கட்டிகள், பாசிமணிகள், சிவப்புப் பளிங்கு மணிகள் (Carnelian gems), பிறவண்ண மணிகள், பெருங்கற்காலக் குறியீடுகளைக் கொண்ட பானை ஓடுகள், எலும்பினால் செய்யப்பட்ட கருவிகள் ஆகியவை இக்கோட்டைச் சுவர் இருந்த பகுதிகளுக்குள் கிடைத்துள்ளன.[7]



இதில் கிடைத்த ஒரு துண்டு தமிழர் நாகரிகத் தேடலுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.
அந்த ஓட்டினில் ஒரு பெண், நெற்கதிர், நாரை, மான், முதலை ஆகியவை புடைப்பு உருவங்களாக மிகவும் நேர்த்தியான வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாய்வில் கிடைத்த ஒருமண்பாண்டத் துண்டு தமிழர் நாகரிகத் தேடலுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. அந்த ஓட்டினில் ஒரு பெண், நெற்கதிர், நாரை, மான், முதலை ஆகியவை புடைப்பு உருவங்களாக, மிகவும் நேர்த்தியான வகையில் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வுருவம் உள்ள தாழி மூவாயிரம் ஆண்டுகள் பழமையானது என்றும், அந்தத் தாழியில் புடைப்பு உருவ முறையில் இச்சித்திரங்கள் உருவாக்கப்பட்டுள்ளன என்றும், இப்பானை ஓட்டினில் இருந்த சில குறியீடுகள் அரப்பா கால உருவ எழுத்துகளை ஒத்தன என்றும் தமிழகத் தொல்லியல் துறையின் முன்னாள் இயக்குநர் நடன. காசிநாதன் தெரிவித்துள்ளார். மேலும், ஆதிச்சநல்லூரில் கிடைத்த பானைகள் மூவாயிரம் முதல் ஐயாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்தவை என்றும் அவர் கருத்து வெளியிட்டுள்ளார்.[8]

இந்தியத் தொல்லியல் துறை அகழ்வாய்வு (2004-2005) செய்த பொருட்களை, உயர்நீதிமன்ற மதுரைக் கிளையின் ஆணைப்படி அமெரிக்க (புளோரிடா) ஆய்வுக் கூடத்தில் நடத்தப்பட்ட கார்பன்-14 பரிசோதனையில் ஒரு பொருளின் காலம் கி.மு.791 என்றும், இன்னொரு பொருளின் காலம் கி.மு.905 என்றும் கண்டறியப்பட்டு, அவை ஊடகங்களிலும் வெளியிடப்பட்டன.[9] அலெக்சாண்டர் ரீ நடத்திய அகழ்வாய்வில் கிடைத்த பொருட்கள் சில, இதற்கு முன்னரே காலக் கணிப்பு ஆய்வுக்குட்படுத்தப் பட்டுள்ளன. அதில் ஒரு மரத்துண்டு, கி.மு.900 என்று டாட்டா ஆய்வு நிறுவனமும், ஒரு மண்பாண்டத் துண்டு கி.மு.2000 என்றும், மற்றொரு மண்பாண்டத் துண்டு கி.மு. 4000 என்றும் மணிப்பூர் பல்கலைக் கழக ஆய்வுக் கூடமும், தேசிய கடல்சார் தொழில்நுட்ப நிறுவனமும் அறிவித்துள்ளன. இக்காலக் கணிப்புகளால் தமிழ் மக்களுக்கு எழுத்தறிவு வருவதற்கு முந்தைய நாகரிகமாக ஆதிச்சநல்லூர் நாகரிகம் இருந்திருக்கலாம் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். 3700 ஆண்டுகளுக்கு முந்தைய, கிட்டத்தட்ட சிந்துசமவெளி நாகரிகத்திற்கு இணையான நாகரிகமாக ஆதிச்சநல்லூர் நாகரிகம் உள்ளது என பி.பி.சி. செய்திகள் தெரிவிக்கின்றன.[10] வங்காள ஆராய்ச்சியாளரான பானர்ஜி என்பவர், சிந்துவெளி நாகரிகத்தைவிட ஆதிச்சநல்லூர் தொன்மையான நாகரிகம் என்றும், அதன் காலம் கி.மு.12,000 ஆண்டுகள் என்றும், இந்திய அரசு இவ்வுண்மைகளை மறைப்பதாகவும் கருத்து வெளியிட்டுள்ளார்.[11] ஆக, சிந்துவெளிக் காலம் அல்லது அதற்கு முன்னரும் கூட தமிழ்நாட்டில் மக்கள் வாழ்ந்து வந்தனர் என்பது தான் ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுகள் தெரிவிக்கும் செய்தி.

மேலும், ஆதிச்சநல்லூருக்கும், சிந்துவெளிக்குமான பொருத்தப்பாடுகளில் உலோகக் கலவையில் ஆறு விழுக்காடு துத்தநாகம் கலப்பு, பானைகளின் மெல்லிய கனம், பானை ஓடுகளில் அரப்பா காலக் குறியீடுகள் உள்ளமை, சமயச் சின்னங்கள் இல்லாத நிலை, நடனமாடும் பெண் உருவம் (தாய்த் தெய்வ வழிபாடு) கிடைத்துள்ளமை ஆகியவற்றைத் தொல்லியல் அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். சிந்துவெளி நாகரிகம் தமிழ் நாட்டோடு இனம், மொழி, பண்பாடு, சமயம் ஆகிய கூறுகளில் தொடர்புடைய திராவிட நாகரிகம் என்று பன்னாட்டுத் தொல்பொருள் அறிஞர்கள் பலரும் தங்கள் ஆய்வில் தெரிவித்துள்ளனர். சிந்துவெளி ஆராய்ச்சியில் ஜான் மார்ஷல், ஆர்.டி.பானர்ஜி, ஐ.ஆர்.அண்டர், ஈராஸ் பாதிரியார், எச்.டி.சங்காலியா, பி.பி.லால், ஜி.எம். ஹேவிட், ஐராவதம் மகாதேவன் போன்றோர் ஈடுபட்டிருந்தனர். தற்கால ஆய்வறிஞர்களான அஸ்கோ பார்பலோ, ஜார்ஜ் எல். ஹார்ட், ஆர். பாலகிருஷ்ணன் உள்ளிட்ட பலரும் ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றனர். இவர்கள் அனைவரும் சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிட அடித்தளத்தைக் குறிப்பாகச் சிந்துவெளி - தமிழர் பண்பாட்டின் அடையாளமாக இருப்பதைத் தங்கள் ஆய்வின் முடிவில் தெரிவித்துள்ளனர்.[12] ஆனால் சிந்துவெளி நாகரிகத்தைச் சரசுவதி நாகரிகமாகக் கட்டமைக்க இந்திய அரசு பெரும் முயற்சிகள் எடுத்துவரும் இன்றைய சூழ்நிலையில், ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வு முடிவுகள் எத்தனை விழுக்காடு சரியான தகவலைக் கொண்டு வெளியிடப்பட உள்ளது என்பது வரலாறு, தொல்லியல் ஆர்வலர்கள் மத்தியில் மில்லியன் டாலர் கேள்விக்குறிதான்.

மொழி:

ஆதிச்சநல்லூரில் கிடைத்த மேற்கூறிய பொருட்கள் சங்க இலக்கியக் காட்சிகளைக் கண்முன் நிறுத்தி சங்க இலக்கியங்கள், தமிழரின் வாழ்வியலைச் சித்தரிக்கும் எழுதப்பட்ட ஆவணம் என்று கூறுவதற்குச் சான்றாக அமைகின்றன. ஆனால், மூன்றாம் தமிழ்ச்சங்க காலத்தினைச் சேர்ந்த சங்க இலக்கியங்களில் ஆதிச்சநல்லூர் பற்றிய குறிப்புகள் இல்லை. கொற்கை, திருச்செந்தூர், பொதிகை மலை இவற்றைப் பற்றிய குறிப்புகள் மூன்றாம் தமிழ்ச் சங்க இலக்கியங்களில் இருப்பதால், மூன்றாம் தமிழ்ச்சங்கம் தோன்றி மதுரையில் பாண்டியர்கள் ஆட்சி அமைப்பதற்கு முன்பாகவே, அதாவது, கொற்கையினைத் தலைநகராகக் கொண்டு பாண்டியர்கள் ஆட்சிபுரிந்த இரண்டாம் தமிழ்ச்சங்கக் காலத்தில் ஆதிச்சநல்லூர் நாகரிகம் இருந்திருக்கலாம் என்று தொல்லியல் அறிஞர் சாந்தலிங்கம் கூறுகிறார். அதற்கொப்பவே ஆதிச்சநல்லூர் முதுமக்கள் தாழிகளின் காலம் கி.மு. 4000 வரை முன்னோக்கிச் செல்வது குறிப்பிடத்தக்கது.[13] சங்க இலக்கியக் காலத்தின் முன் எல்லை 2300 ஆண்டுகளாக இதுவரை கூறப்பட்டு வந்த நிலையில், கீழடியில் எழுத்துருப் பொறிப்பு கொண்ட பானை ஓடுகள் கிடைத்து எழுத்துருவின் காலத்தையும், அதன்வழி சங்க இலக்கிய முன் எல்லைக் காலத்தையும் 2600 ஆண்டுகள் என நிறுவ வழிகோலி உள்ளன. இந்தக் காலத்தைக் கொற்கை அகழ்வாய்வில் கிடைத்த தமிழி எழுத்துரு கொண்ட பானை ஓடுகள் கி.மு. 780-க்கு முன்னெடுத்துச் சென்றுள்ளன. இந்திய அகழ்வாய்வுகளில் எழுத்துரு கொண்ட பானை ஓடுகள் எங்கும் கிடைக்காத நிலையில், தமிழகத்தில் இதுவரை ஆய்வு செய்யப்பட்ட 175 இடங்களில் 37 இடங்களில் தமிழி எழுத்துருக் கொண்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவையெல்லாம் தமிழி எழுத்துரு முறை 3000 ஆண்டுகளுக்கு முன்பே இருந்திருக்கக் கூடிய சாத்தியக் கூறைத் தெளிவாக்குகின்றன.[14] ஆதிச்சநல்லூர் தாழிகளில் பழந்தமிழ் எழுத்துகள் இருந்தன. ‘கதிரவன் மகன் ஆதன்’ என்று பொருள் தரக்கூடிய எழுத்துகள் ஒரு தாழியில் காணப்பட்டதாக 2004 ஆம் ஆண்டு அகழ்வாய்வு செய்த மத்தியத் தொல்லியல் துறை இயக்குநர் தியாக. சத்தியமூர்த்தியும், கல்வெட்டுத்துறை இயக்குநர் எம்.டி. சம்பத்தும் தெரிவித்தனர். கல்வெட்டு ஆய்வாளர் ஐராவதம் மகாதேவனும் அவ்வெழுத்துகள் அரப்பா கால எழுத்துகளைப் போல இருப்பதாகக் கருத்துத் தெரிவித்தார் (Front line, 01.07.2005). ஆனால் அவை யாவுமே பின்னாட்களில் மறுக்கப்பட்டன. அப்படி எழுத்துகளே காணப்படவில்லை என்றும், அவை சாம்பல் கீறல்களே என்றும் கூறப்பட்டது. தமிழி எழுத்துருவின் காலம் அசோகன் பிராமியைவிட முற்காலத்திற்குச் செல்வதால் இவை மறைக்கப்படுகின்றன என்று நடன. காசிநாதன் தனது ‘தமிழகம் - அரப்பன் நாகரிகத் தாயகம்’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[15] இந்தக் காலஎல்லை, ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வு அறிக்கை வெளிவந்தால், இன்னும் முன்னோக்கிச் செல்லும் என முதல்கட்டத் தகவல்கள் தெரிவிக்கின்றன.

பண்பாடு:

பழந்தமிழர்ப் பண்பாட்டில் இறந்தோரைப் புதைக்கும் வழக்கம் மட்டுமே இருந்திருக்கிறது. இனக்குழுக் காலத்தில் கூட இறந்தோர் உடலை வெட்டவெளியில் கிடத்திப் பின் எலும்புகளைச் சேகரித்து மண்பானையில்

வைத்துப் புதைக்கும் வழக்கம் இருந்துள்ளது. ஆதிச்சநல்லூர் மண்டை ஓடுகள் சிந்துவெளியில் கிடைத்த மண்டை ஓடுகளுடன் ஒத்திருப்பதைத் தமிழக அரசு சுட்டிக்காட்டியுள்ளது.[16] இதனுடைய நீட்சியாகவே முதுமக்கள் தாழி புதைக்கும் வழக்கத்தைக் கூறலாம். தமிழர்களின் இவ்வழக்கம் சிந்துவெளி வழி பாலஸ்தீனம், சிரியா வரை பரவலாகக் கடைப்பிடிக்கப்பட்டுக் கி.மு. 15ஆம் நூற்றாண்டு வரையும் பழக்கத்தில் இருந்திருக்கிறது. தாழி அடக்கமுறைகளில் பின்பற்றப்பட்ட சடங்கு முறைகளும் கூட பாலஸ்தீனம், கிரேக்க, ரோமானிய நாடுகளிலும் பின்பற்றப்பட்டுள்ளன. இறந்தவர் நெற்றியில் காசு, பட்டம் வைக்கும் சில சடங்கு முறைகள் அப்படியே பின்பற்றப்பட்டது மட்டுமல்ல, பிறநாட்டின் பரிமாற்றப்பட்ட காசுகளும் இதில் பயன்படுத்தப்பட்டுள்ளன. பவானி, நொய்யல் ஆற்றுப் பகுதிகளில் கிடைத்துள்ள தாழிகளில் ரோமானிய காசுகள் கிடைத்துள்ளன. எகிப்திய பிரமிடுகளுக்கு முன்பாகவே தலைவன் அல்லது அரசன் இறந்தபின்னும் வாழத்தேவையான பொருட்கள் உடன் வைத்துப் புதைக்கும் வழக்கம் தமிழரின் தொன்மைப் பண்பாடாக இருந்துள்ளது. இத்தனை நீண்ட பரவல் இந்த நாடுகளுக்கிடையேயான வணிகப் பரிமாற்றத்தையும் குறிக்கிறது. இதனை உறுதிப்படுத்தும் வகையில் உலகின் பிற மூத்த இனங்களின் மண்டை ஓடுகளும் ஆதிச்சநல்லூர்த் தாழிகளில் கிடைத்திருக்கின்றன.[17]



ஆதிச்சநல்லூர் மண்டை ஓடுகள்
சிந்துவெளியில் கிடைத்த மண்டைஓடுகள் உடன்
ஒத்திருப்பதை தமிழக அரசு சுட்டிக்காட்டியுள்ளது.

சுட்ட செங்கற்களால் வீடு, கோட்டை, மாளிகை கட்டும் வழக்கம் ஆதிச்சநல்லூரிலிருந்து சிந்துவெளி வரை பரவிக் கிடக்கிறது. தலைவர்கள் மாளிகை மற்றும் கோட்டைகளில் வசிக்க, மக்கள் நீள்சதுர வீடுகளில் வசித்தனர். இந்த அமைப்பு முறையே சிந்துவெளி நகர நாகரிகத்தில் மேல்மேற்கு, கீழ்கிழக்கு முறையில் பயன்படுத்தப்பட்டுள்ளது.[18]

ஆதிச்சநல்லூர் மக்கள் இரும்பு, செம்பு, வெண்கலம், தங்கம் ஆகிய உலோகங்களின் பயன்பாட்டை அறிந்து பயன்படுத்தியுள்ளனர். இந்தியாவைப் பொறுத்தவரை, எல்லா உலோகப்பொருட்களும் ஒரே இடத்தில் கிடைக்கும் இடமாக ஆதிச்சநல்லூர் மட்டுமே அறியப்பபட்டிருப்பதாகத் தேசிய கடல்சார் தொழில்நுட்ப நிறுவனத்தின் அறிக்கை கூறுகிறது. இந்நிறுவனம் 2004 ஆம் ஆண்டில், மத்தியத் தொல்லியல் துறை கேட்டுக் கொண்டதற்கிணங்க ஆதிச்சநல்லூரில் கனிமங்கள் பற்றி ஆராய்ந்தது. அந்நிறுவன ஆய்வறிக்கையின்படி ஆதிச்சநல்லூர்ப் பறம்பில் ஆறுமீட்டர் ஆழம் வரை தோண்டப்பட்டு இரும்புக் கனிமங்கள் எடுக்கப்பட்டதாகவும், பின் அந்தக் குழிகளையே முதுமக்கள் தாழிகளைப் புதைக்கப் பயன்படுத்தி இருக்கக் கூடும் என்றும் தெரிய வருகிறது. இரும்பினில் போர்க்களக் கருவிகளும், வேளாண்மைக்குத் தேவையான கருவிகளும் செய்யப்பட்டுள்ளன. தேனிரும்பு, வார்ப்பு இரும்பு, எஃகு இரும்பு ஆகிய இரும்பு வகைகளில் பானைத்தொழில், பயிர்த்தொழில், நெசவுத் தொழில் ஆகியவற்றிற்கான கருவிகளைச் செய்துள்ளனர்.

இரும்பின் வளர்ந்த நிலைப் பயன்பாட்டால் கப்பல் கட்டும் தொழில் இங்கு முழுவீச்சில் நடைபெற்றுப் பிற நாடுகளுடன் வணிகத் தொடர்பும் பெருமளவில் நடைபெற்றிருக்கின்றன. தென்னிந்தியாவில் செய்யப்பட்ட எஃகுப் பொருட்களே எகிப்துக்கும் ஐரோப்பாக் கண்டத்திற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன என்றும் ஆய்வாளர்கள் கூறியுள்ளனர்.[19] மேலும், ஆப்பிரிக்கா, சுமேரியா, கிரீஸ், மெக்சிகோ முதலிய நாடுகளுக்கும் இரும்புப் பொருட்கள் ஏற்றுமதி நடந்து வந்தது. எகிப்தியர்களும், கிரேக்கர்களும் இந்திய நாட்டிலிருந்துதான் இரும்பை உருக்கிப் பயன்படுத்தும் முறைகளை அறிந்தனர் என்பதும், இரும்பின் உபயோகத்தை இந்தியாவில் முதன்முதலில் அறிந்த பகுதி ஆதிச்சநல்லூர்தான் என்பதும் குறிப்பிடத்தக்கது. இங்கும் கிருட்டினாபுரத்திலும் அக்காலத்திலேயே நிலத்தின் மேற்பகுதியில் நீண்ட தொலைவுக்கு இரும்புச் சுரங்கங்கள் இருந்ததையும், சுரங்கத் தொழில் நடைபெற்றதையும் ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தியுள்ளனர்.[20] அதேபோல வெண்கலத்தில் குடுவைகள், சாடிகள், கிண்ணங்கள், விலங்கு உருவங்கள், மனித உருவங்கள், மகளிர் ஆபரணங்கள் செய்யப்பட்டுள்ளன. வெண்கலப் பொருட்கள் தயாரிப்பில் மிக உயர்ந்த தொழில் நுட்பத்தை இங்கு வாழ்ந்திருந்தவர்கள் பெற்றிருந்தனர் என்றும், அதனாலேயே கலையழகு மிக்க மிகச் சிறந்த வெண்கலப் பொருட்களைத் தயாரித்து வந்தனர் என்றும் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தங்கத்திலும் ஆபரணப் பொருட்கள் செய்யப்பட்டுள்ளன. வெண்கலத்தில் ஆர்சனிக் என்ற உலோகமும் கலந்து பொருட்கள் செய்யும் தொழில்நுட்பம் இந்தியாவில் ஆதிச்சநல்லூரைத் தவிர்த்து வேறு எங்கும் காணப்படவில்லை என்றும் தேசிய கடல்சார் தொழில்நுட்ப நிறுவனம் தெரிவித்துள்ளது.[21]

ஆதிச்சநல்லூர் மக்கள் உழவின் பயன்பாட்டை அறிந்து தங்கள் உணவில் நெல், சாமை போன்ற தானியங்களைப் பயன்படுத்தி உள்ளனர். உழவுக்கான பலவிதப் பொருட்கள் இரும்பினால் செய்யப்பட்டுள்ளன. முதுமக்கள் தாழிகளில் தானியங்கள் வைக்கப்பட்டுப் புதைக்கப்பட்டுள்ளன. பருத்தியை விளைவித்து ஆடைகளை அழகுற நெய்து உடுத்தி உள்ளனர். அழகு சாதனப் பொருட்களும்

கிடைத்து அவர்களின் ஒப்பனைத் திறனை வெளிப்படுத்தி உள்ளன. அம்மிக்கல் போன்றவை தமிழரின் சமையல் கலை அன்று தொடங்கி இன்றுவரை நீடித்து வருவதைக் காட்டுகின்றன. மேலும், ஆதிச்சநல்லூரின் பண்பாட்டுக் கூறுகள், சிந்துவெளி வழி உலகமெங்கும் பரவியிருந்ததை பல்வேறு ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். சிந்து வெளியில் அகழ்வாய்வு செய்த பிரிட்டிஷ் இந்தியத் தொல்லியல்துறை இயக்குநராக இருந்த ராக்கல்தாஸ் பானர்ஜி, தனது ஆய்வுக் கட்டுரையில், “இந்தியாவின் மிகத் தென்கோடியில் உள்ள திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து அறுந்துபோகாத ஒரு சங்கிலித் தொடர் போலத் திராவிடர்களின் பண்பாட்டுத் தொடர்பு உள்ளது. மனித நாகரிகம் இந்தியாவின் தென் கோடியிலிருந்து வடஇந்தியா முழுவதும் பரவியது. பலுசிஸ்தான் வழியாகப் பாரசீகம், ஈரான், பக்ரைன் தீவு, கிரீட் தீவு வரை சென்றுள்ளது” என்று கூறியிருக்கிறார். சிந்துவெளி வரலாற்றாய்வாளர் ஈராஸ் பாதிரியார், “மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் இன்றும் வாழும் உழவர், செம்படவர், பிற தொழிலாளர் வாழ்வில் சிந்துவெளி நாகரிகத்தின் தொடர்ச்சியைக் காண்கிறேன்” என்று தன் ஆய்வு நூலில் குறிப்பிடுகிறார்.[22] மேலும், சங்க இலக்கியங்கள் கூறும் அகம், புறம் என்ற காதல் மணம், போர்க்குணம் நிறைந்த வாழ்க்கை முறைக்கும் ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வு வெளிப்படுத்தும் வாழ்வியல் முறைக்கும் பெரும் ஒற்றுமை காணப்படுவதும் நோக்கத்தக்கது.

சமயம்:

இந்தியாவிலேயே மிகவும் பழமையான, சிந்துவெளி நகர நாகரிகத்திற்கு இணையான நாகரிகமாக ஆதிச்சநல்லூர் திகழ்கிறது. இனக்குழுக்கள் கால முன்னோர் வழிபாடுதான் இப்பகுதிகளில் முதன்மை யாக இருந்திருக்கிறது. தொடர்ந்து தாய்த்தெய்வ வழிபாடுகளுக்கான தடயங்கள் பலவும் கிடைத்திருக்கின்றன. அலெக்சாண்டர் ரீயின் அகழ்வாய்வில் வெண்கலப் பெண் சிலை கிடைத்திருக்கின்றது. இந்தியத் தொல்லியல் துறையின் அகழ்வாய்வில் கிடைத்த பானை ஓட்டுப் புடைப்புப் பொறிப்பில் பெண் உருவத்துடன் விலங்கு, பறவை, நெல்கதிர் உருவங்களும் காணப்படுகின்றன. இவை தாய்த் தெய்வ வழிபாட்டை உறுதிப்படுத்துகின்றன. இதுவரை தமிழ்நாட்டினில் தமிழகத் தொல்லியல் துறையால் நடத்தப்பட்ட 40 அகழ்வாய்வு இடங்களிலும் முன்னோர் வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாட்டைத் தவிர வேறு சமய வழிபாடுகளுக்கான தடயங்கள் ஏதும் கிடைக்கவில்லை. பழந்தமிழர் வழிபாட்டில் நடுகல் வழிபாட்டைத் தவிர வேறு எவ்வித வழிபாடும், கடவுளரும் இல்லை என்பதே சங்க இலக்கியக் கொள்கையாக உள்ளது. பகைவர் படைகளை முன்னின்று எதிர்த்து, யானைகளைக் கொன்று, தானும் வீழ்ந்த வீரர்களுக்கு அமைக்கப்பட்ட நடுகற்களுக்கு நெல்தூவி வழிபடுதல் அல்லாது, நெல்தூவி வழிபடக்கூடிய வேறு கடவுள் எதுவும் இல்லை என மாங்குடிக் கிழார் என்னும் புலவர் சங்க இலக்கியமான எட்டுத்தொகை நூலில் (புறநானூறு - 335) குறிப்பிடுகிறார். சமயங்கள் உருவான காலத்திற்கும் முற்பட்ட பழந்தமிழர் நாகரிகத்தைத்தான் சங்க இலக்கியங்களும் கட்டமைக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

தொகுப்புரை:

தமிழர்கள் தொன்மையான மாந்த இனத்தினர் என்பதும், தமிழ் மொழி உலக மொழிகளுள் மிகவும் தொன்மையானது என்றும் பல காலங்களில் பல்வேறு அறிஞர்கள், ஆய்வாளர்கள் தெரிவித்து வந்துள்ளனர்.[23] அதற்கான அகச்சான்றுகளாகத் தமிழ் மொழியில் சங்க இலக்கியங்கள் மட்டுமே இருந்து வந்த நிலையில், புறச்சான்றுகளாகத் தமிழர் பண்பாட்டினை வெளிப்படுத்தும் நகர நாகரிகங்களை அண்மையில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகள் வெளிக்கொணர்ந்திருக்கின்றன. அதே நேரம், இந்த அகழ்வாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் பல்வேறு நாடுகளிலும் சிதறிக் கிடக்கின்றன. அவற்றைக் கண்டுபிடித்து ஆதிச்சநல்லூரில் அமையவிருக்கும் அருங்காட்சியகத்தில் வைப்பதில் மத்திய, மாநில அரசுகளுக்கு மிகப்பெரும் பங்கு உள்ளது.[24]


ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுக் களத்தில் முனைவர் சிவ இளங்கோ,
முத்தாலங்குறிச்சி காமராசு மற்றும் தமிழ் மரபு அறக்கட்டளையினர்.

இந்தியா மதவழியில் மேலாதிக்கம் கொண்ட சமுதாய அமைப்பினில் பல நூறு ஆண்டுகள் இருந்து வந்ததால் வரலாறு வளைக்கப்படுவதும், திரிக்கப்படுவதும் காலங்காலமாய் நிகழ்ந்து கொண்டே வருகின்றன. இந்நிலையில் இந்தியத் தொல்லியல் துறையும், தமிழக அரசின் தொல்லியல் துறையும் நடத்திவரும் அகழ்வாய்வுகளில் தமிழ்ச் சமுதாயத்தைத் தொன்மையான சமுதாயமாக அடையாளப்படுத்தும் வழிகளில் தொல்பொருள்களும், பழமையான கட்டிட அமைப்புகளும் கிடைத்து வருகின்றன. காலம், இனம், மொழி, பண்பாடு, சமயம் ஆகிய கூறுகளின் வழி, தமிழ்மொழியின் காலம் முதன்மை நிலை அடைவதை மேலாதிக்கச் சமுதாயக் கட்டமைப்பினில் சிக்கி இருக்கும் இந்திய அரசு விரும்பாத போக்கு இன்றுவரையும் நிலவி வருகிறது. ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வு அறிக்கை வெளியிடப்படாத நிலை குறித்துத் தமிழ்நாடு உயர்நீதிமன்றம், "தமிழகத்தின் பாரம்பரியங்களை வெளிப்படுத்துவதில் மத்திய அரசு ஆர்வம் இல்லாமல் இருப்பதுபோல் தெரிகிறது. இந்த நடவடிக்கையைப் பார்க்கும்போது, தமிழகம் இந்தியாவில் தான் இருக்கிறதா? என்ற கேள்வி எழுகிறது.

மத்திய தொல்லியல் துறையின் இந்த நடவடிக்கை கண்டிக்கத்தக்கது" என்று முத்தாலங்குறிச்சி காமராசு போன்றோர் தொடுத்த வழக்கில் உயர்நீதிமன்றம் 15.02.2019-இல் கூறியிருப்பது நோக்கத்தக்கது.[25]

இந்நிலையில் தற்போது (பிப்ரவரி 2020) ஆதிச்சநல்லூரில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையால் அகழ்வாய்வு மீண்டும் தொடங்கப் பட்டுள்ளது. மத்திய அரசின் நிதிநிலை அறிக்கையில் (2020-2021) ஆதிச்சநல்லூரில் தொல்லியல் அருங்காட்சியகம் அமைக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இப்படி மத்திய அரசு அறிவித்திருந்த ஒருசில நாட்களில், இக்கட்டுரை உருவாக்கம் பெற்றுக்கொண்டிருந்த வேளையில், அருங்காட்சியகம் மற்றும் வேலி அமைக்க ஆதிச்சநல்லூர் பறம்பில் பெரிய இயந்திரம் கொண்டு தோண்டியதில் காலத்தால் தொன்மைவாய்ந்த பல தாழிகள் சிதைக்கப்பட்ட செய்தி வரலாற்றார்வலர்களைப் பெரிதும் அதிர்ச்சிக்குள்ளாக்கி உள்ளது. ஏறத்தாழ 10க்கும் மேற்பட்ட தாழிகள் நொறுக்கப் பட்டிருப்பதைப் படத்துடன் ஊடகங்களும் வெளியிட்டுள்ளன.[26 ]இந்நிலையில் மீண்டும் ஆதிச்சநல்லூர், சிவகளை, கொடுமணல், கீழடி உள்ளிட்ட பல இடங்களில் தமிழக அரசின் தொல்லியல் துறை அகழ்வாய்வைத் தொடங்கி உள்ளது. இந்த அகழ்வாய்வின் அறிக்கைகளும், முன்னர் கிடப்பில் இருக்கும் அகழ்வாய்வு அறிக்கைகளும் நேர்மையாக வெளியிடப்படுமாயின் தமிழர்கள் பெருமைப்படத்தக்க அளவிலேயே அவை அமையும் என்பதுதான் அனைவரின் எதிர்பார்ப்பும்.

அடிக்குறிப்புகள்:

1. ஜெயக்குமார்.கோ, தமிழ்மணம், varalaru.blogspot.com, 2.08.2013.
2. ரா.பி.சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், சென்னை, 2006, பக் .28.
3. Dinamani, 4.4.2019.
4. இதேபோன்று ஆறு கடலோடு கலக்கும் கழிமுகப் பகுதிக்கு முன்னால் உள்ள மருதநிலப் பகுதி, நல்லூர் என இடைக்கழி நாட்டுப் பகுதியிலும் வழங்கி வருகிறது. சங்க இலக்கியங்களில் எயிற்பட்டினம் என்று வழங்கப்படும் இன்றைய மரக்காணத்தை அடுத்துள்ள இரண்டு கழிமுகத்துவாரப் பகுதிகளுக்குள் அமைந்துள்ளது, இடைக்கழிநாடு. சங்க இலக்கியமான சிறுபாணாற்றுப் படை நூலை இயற்றியவர் நல்லூர் நத்தத்தனார் என்பதும் குறிப்பிடத்தக்கது. Francis Cyril Antony (ed.), Gazetteer of India, vol II, Union Territory of Pondicherry, 1982, p. 1524 / இக்கட்டுரை ஆசிரியரின் கள ஆய்வுகள்.
5. Excavations of Archaeological site in Tamil Nadu (1969 - 1995), Dept. of Archaeology, Govt. of Tamil Nadu, 2004, P46-56 / தொல்தமிழ், சதக்கத் ஆய்விதழ் சிறப்புப் பதிப்பு, அக்டோபர் 2019, ப.73, 97. / அமுதன், ஆதிச்சநல்லூர் - கீழடி, மண்மூடிய மகத்தான நாகரிகம், 2017, பக்.81 -91.
6. The Hindu, 03-02-2020.
7. ta.m.wikipedia.org.

8. கல்வெட்டு, 19.04.2015 / m.facebook.com / tarr

9. The Hindu, 06.04.2019 / தினமணி, 04.04.2019.

10. BBC News Tamil, 05.04.2019 / bbc.com

11. கல்வெட்டு, 19.04.2015 / m.facebook.com / tarr

12. முனைவர் சிவ.இளங்கோ, சிந்துவெளி அவிழும் முடிச்சுகள், புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், 2019, ப.7.

13. BBC News Tamil, 05.04.2019 / bbc.com

14. தொல்தமிழ், op.cit., p.74, 99.

15. ஏர் இதழ் - 2019 / erithazh.blogspot.com

16. உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு ஆய்வரங்கச் சிறப்பு மலர், தமிழ்நாடு அரசு, 2010, ப.7.

17. ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுகளில் கிடைத்த மனித எலும்புக்கூடுகள், மண்டை ஓடுகளின் எண்ணிக்கை குறித்துப் பல்வேறு செய்திகள் உள்ளன. அவரவரும் தங்கள் ஆவலில் ஆய்வுசெய்து, கிடைத்தவற்றைத் தங்களோடு எடுத்துச் சென்றதே இதற்குக் காரணம். இதனால் அங்குக் கிடைத்த ஒருசில மண்டை ஓடுகளை வைத்து, திராவிட இனம் சார்ந்த மண்டை ஓடுகள் எட்டு விழுக்காடு அளவில் உள்ளன என்றும் கருத்துரைக்கின்றனர். சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள ஆறு மண்டை ஓடுகளும் 3000 ஆண்டுகளுக்கு மேலான தொன்மை வாய்ந்தவை. அதிலொன்று ஆஸ்திரலாய்டு இனக்குழுவை ஒத்திருக்கிறது. அதே நேரம் ஆஸ்திரலாய்டு - திராவிட இனங்களின் நெருங்கிய தொடர்பினை ஆய்வாளர் ஹக்சுலி குறிப்பிட்டுள்ளார். தொல் ஆஸ்திரேலிய இனம், தொல் திராவிட இனம் (புரோட்டோ-திராவிடர்கள்), தென்னிந்திய மலைவாழ் இனம், வேடர்கள் மற்றும் சகாய் இனக் குழுக்களின் மண்டை ஓட்டுத் தோற்ற ஒற்றுமையை, எலியட் ஸ்காட்டின் அறிக்கையை மேற்கோள்காட்டி ஆதிச்சநல்லூர் மண்டையோடுகள் குறித்து ஆராய்ந்து எழுதிய சக்கர்மேன் விளக்கியுள்ளார். ஆஸ்திரேலியாவில் கிடைத்த தல்காய் இன மண்டையோடு மற்றும் உடலமைப்புடன் புரோட்டோ - திராவிடர்களின் உடலமைப்புகள் ஒத்திருக்கின்றன என்றும் சக்கர்மேன் நிறுவியுள்ளார். இவை தவிர, ஆப்பிரிக்க நீக்ராய்டு இனக்குழு மண்டை அமைப்பு, ஐரோப்பிய கிரிமால்டி இனக்குழு மண்டை அமைப்பு ஆகியவற்றை ஒத்த மண்டை ஓடுகளும் சென்னை அருங்காட்சியகத்தில் உள்ள ஆதிச்சநல்லூர் மண்டை ஓடுகளில் அடக்கம். பன்னாட்டுத் தொல் குடிமக்களின் மண்டை ஓடுகள் ஒரே இடத்தில் புதைந்து கிடைப்பதானது, 3000 ஆண்டுகளுக்கு முன்னரே கடல் கடந்து வணிகப் பரிமாற்றம் செய்த தொல்குடிகள் ஒரே சமூகமாக வாழ்ந்த இடம் தமிழகம் என்பதற்கான தொல்லியல் சான்றே ஆதிச்சநல்லூர் நாகரிகம் என்பதை நிரூபிக்கின்றன. (Source: https://www.facebook.com, Nivedita Louis, Referred by தேமொழி, தமிழ் மரபு அறக்கட்டளை, 24.09.2019).

18. ஆர். பாலகிருஷ்ணன், சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிட அடித்தளம், 2017, p.60.

19. http.//keetru.com / 14.03.2014. (Reffering the research paper presented by J.M.Heath at The Journal of the Royal Aisatic Society of Great Britain and Ireland, Vol.5, No:2, Cambridge University Press, 1839, pp.390-397).

20. https://www.jstor.org/stable/pdf/25207527.pdf / முத்தமிழ் வேந்தன், ஆதித்தநல்லூர் புகழ்பெற்ற சுரங்கத் தொழில் நகரம், source:https://www.facebook.com /story.php (based on

அ.இராமசாமி, தொன்மைத் தமிழர் நாகரிக வரலாறு, 2013, பக்.88-93), Referred by தேமொழி, தமிழ்மரபு அறக்கட்டளை, 25.09.2019.

21. தொல்தமிழ், op.cit., pp.74,99,100 - 101.

22. மருதநாயகம் ப, தேவநேயப் பாவாணர் சொல்லாய்வும் சொல்லாடலும், இராச குணா பதிப்பகம், சென்னை, 2017; ப.45, 46.

23. தினத்தந்தி, 06.11.2019.

24. 1876 ஆம் ஆண்டு ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த ஜாகோர் நடத்திய அகழ்வாய்வில் கிடைத்த பொருட்கள் அனைத்தையும் எடுத்துச் சென்று பெர்லினில் உள்ள வோல்கர்குண்ட், ஹேம்பர்க் அருங்காட்சியகத்தில் கொடுத்துவிட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால் இதுவரையில் அவை என்னென்ன என்று அறியும் பட்டியலையோ அல்லது அந்தப் பொருட்களையோ யாரும் பார்த்ததில்லை என்றும் தெரிகிறது. இந்நிலையில் ஜெர்மனியில் தமிழ் மரபு அறக்கட்டளை என்னும் அமைப்பை நடத்தி வரும் முனைவர் க. சுபாஷினி, இதுகுறித்த புதிய தகவல் ஒன்றைத் தெரிவித்திருக்கிறார். திருநெல்வேலி, சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரியில் 04.10.2019 அன்று நடைபெற்ற தொல்தமிழ் பன்னாட்டுக் கருத்தரங்கில் சுபாஷினி பேசும்போது, பெர்லினில் 99 அருங்காட்சியகங்கள் இருப்பதாகவும், இதற்கான தேடலில் ஈடுபட்டபோது, ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுப் பொருட்கள் ஆசியக் கலை அருங்காட்சியகத்தில் (Asian Art Museum) இருக்கும் செய்தியை அறிந்ததாகவும், அவையும் காட்சிப்படுத்தப் படாமலும், கட்டுகள் பிரிக்கப்படாமலும் இருக்கும் நிலையைத்தான் தான் அங்கு அறிந்ததாகவும் கூறினார். அவருடைய நேர்காணல் யூ டியூபிலும் உள்ளது. இணையதளம்: தமிழ் மரபு அறக்கட்டளை.

25. இந்து தமிழ் திசை, 16.02.2019.

26. Indian Express, 09.02.2020.

தொடர்பு:
முனைவர் சிவ.இளங்கோ,
6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,
வெங்கட்ட நகர்,
புதுச்சேரி- 605 011.
இந்தியா.
பேசி: 99940 78907,
Mail ID: ilangosiva57@gmail.com

# 9. கற்குவேல் அய்யனார் கோயில்

## — முனைவர். ப. தேவி அறிவு செல்வம்

திருச்செந்தூரிலிருந்து 16 கிலோமீட்டர் தூரத்தில் இருப்பது குதிரைமொழி கிராமம். இது ஒரு தேரி குடியிருப்பு. தேரி என்றால் செம்மண். குமரிமுனையிலிருந்து தொடங்கி நாங்குநேரி, சாயர்புரம் வரை தேரி விரிந்து கிடக்கிறது. ராபர்ட் புரூஸ் ஃபூட் (Robert Bruce Foote) என்பவர் இங்கு கிடைத்த புதிய கற்கால கருவிகளை ஆராய்ந்து இவை 10,000 ஆண்டிற்கு முற்பட்டவை என்று குறிப்பிடுகிறார். கால்டுவெல் தேரி மண்ணை எடுத்து வியன்னா ஆய்வுக் கூடத்திற்கு அனுப்பி ஆய்வு செய்து இம்மண்ணை போன்று வேறு எங்கும் இல்லை என்றும் கூறியுள்ளார்.




குதிரைமொழி கிராமத்தில் கற்குவேல் அய்யனார் கோயில் அமைந்துள்ளது. கற்குவேல் அய்யனார் மானாடு என்பது மானவீரவளநாடு என்றும் அழைக்கப்பெற்றது. இங்கு கி.பி. 1639 ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று உள்ளது. இப்பகுதியை ஆண்ட 10 நாடார் குறுநில மன்னர்களின் பெயர்கள் இக்கல்வெட்டில் உள்ளது. இக்கல்வெட்டில் இந்த ஐயனார் கருக்கு வேலையன் என்று குறிக்கப்படுகிறார். கி.பி. 1703 இல் செம்பால் செய்த நகரா ஒன்று தானமாக அளிக்கப்பட்டு இங்கு வைக்கப்பட்டுள்ளது.

மூலவர்:

கற்குவேல் அய்யனார்; மகாமண்டபத்தில் விநாயகர், லாட சன்னியாசி போன்றோர் அமைக்கப்பட்டுள்ளனர்.



பரிவார தெய்வங்கள்:

பரிவார தெய்வங்களாக முன்னடியான், வன்னியராசர், பட்டவராயன், சுடலைமாடன், கருப்பசாமி, சின்னத்தம்பி, மாடசாமி, பொன் காத்த அய்யனார், பெரியாண்டவர், இருளப்பர், பிண மாலை சூடும் பெருமாள் செருக்கன், துப்பாக்கி மாடசாமி, எமதர்மர், புலமாடி அம்மன், புலமாடன் சாமி போன்றவர்கள் உள்ளனர் .



பெண் தெய்வங்கள்:

பேச்சி அம்மன், பிடிமண் அம்மன், பத்திரகாளி, பிரம்மசக்தி, இசக்கி அம்மன் மற்றும் சப்தகன்னியர்கள் பெண் தெய்வங்களாக வீற்றிருக்கிறார்கள்.



திருவிழா:

கள்ளர் வெட்டு திருவிழா; இந்த திருவிழா கார்த்திகை மாதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இக்கோயிலில் வில்லுப்பாட்டு இசைக் கருவியும் வைக்கப்பட்டுள்ளது.



தொடர்பு:
முனைவர். ப. தேவி அறிவு செல்வம்,
மருந்தாக்கவியல் பேராசிரியர், மதுரை.
devipharm@yahoo.in
https://www.facebook.com/devipharm

# 10. தஞ்சைப் பெரியகோவிலைக் கட்டியவர் யார்?

— மா.மாரிராஜன்

இது என்ன கேள்வி???!!!

பேரரசர் இராஜராஜர் என்பது யாவரும் அறிந்த ஒன்றுதானே!!!!!

ஆம்... இன்று நாம் அனைவரும் அறிந்த ஒன்றுதான். ஆனால், இக்கேள்விக்கு இன்றிலிருந்து 133 ஆண்டுகளுக்கு முன்பு யாருக்கும் பதில் தெரியாது. சற்று பின்னோக்கிச் சென்றால்; 1858 ல்... ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி இந்தியாவில் முடிவுக்கு வந்து, பிரிட்டனின் நேரடி ஆங்கிலேயர் ஆட்சி இந்தியாவில் ஏற்பட்டது. அப்போதைய ஆங்கில அரசால் 1886 ல் இந்தியத் தொல்லியல் துறை உருவாக்கப்பட்டது (Archaeological survey of india - ASI). இத்துறையின் சென்னை மாகாண கல்வெட்டியல் துறை அதிகாரியாக நியமிக்கப்பட்டவர், ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த டாக்டர். ஹூல்ஸ் (Dr. Euger julius theodor Hultzsch).

ஹூல்ஸ் 1886 ல் அசோகரது கல்வெட்டைப் படியெடுத்தார், 1886 டிசம்பரில் மாமல்லபுரம் கல்வெட்டைப் படித்தார், 1887 டிசம்பர் மாதம் தஞ்சை பெரியகோவிலுக்கு வருகிறார்.கோவிலைக் கட்டியது கரிகால் சோழன், தனக்கு வந்த வியாதி தீர கைங்கரியமாய் கோவிலைக் கட்டினான். மோர் விற்ற அழகி என்னும் மூதாட்டி கதை என்று செவிவழிச் செய்திகள் வழக்கத்திலிருந்த நேரம் அது.

பெரிய கோவிலுக்கு வருகிறார் ஹுல்ஸ். கோவிலின் அமைப்பும் பிரம்மாண்டமும் அவரை உறைய வைத்தது. தன்னிச்சையாக அவரிடமிருந்து வெளிப்பட்ட வார்த்தை...

"The great temple"

கோவிலின் வாயில் முதல் கொண்டு எங்கெங்கு பார்த்தாலும் கல்வெட்டுகள். அழகான தமிழ் எழுத்துக்களில் அமைந்த கல்வெட்டுகள். தனக்கு இங்கு நிறையவே வேலை இருக்கிறது என்று முடிவு செய்கிறார் (பிற்பாடு அவர் எழுதிய கட்டுரை ஒன்றில் இத்தகவல்களை விவரிக்கிறார்). பொறுமையாகக் கல்வெட்டுகளை வாசிக்கத்தொடங்கிய அவர், கல்வெட்டுகளின் தொடக்கத்தைத் தேடினார். மிகச்சரியாக ஸ்ரீ விமானத்தின் வடப்புறம் சென்றடைந்தார். சண்டிகேசர் கோவிலுக்கு எதிரே விமானத்தின் வடப்புற அதிட்டானத்துப் பட்டிகை, அங்குதான்... அந்த வரிகள் இருந்தன.

இராஜராஜனின் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் அக்கல்வெட்டில், "பாண்டிய குலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர் கூற்றத்து தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி இராஜராஜீவரம்"

இந்த வரிகளை வாசித்த பிறகு கோவிலைக் கட்டியது பேரரசன் இராஜராஜன் என்று வெளியுலகிற்கு முதன் முதலாக அறிவிக்கிறார்.

அப்போது இராஜராஜனை இவ்வாறு அழைத்தார்.

"The great king"

பிறகு, தனது பரிவாரங்களுடன் கோவிலில் முகாமிட்டு அனைத்து கல்வெட்டுகளையும் படியெடுத்து அச்சு நூலாக வெளியிடுகிறார். இவரது பணிக்கு மிகவும் உறுதுணையாக இருந்தவர் இவரது உதவியாளர் வெங்கையா. 1887 - 1891 வரை நான்கு ஆண்டுகள் கோவிலில் உள்ள கல்வெட்டுகளைப் படியெடுக்கும் வேலை நடந்தது. தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி எண் 2 ல் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் அச்சு நூலாக வெளிவரத் தொடங்கியது.

இராஜராஜேச்சரமும், இராஜராஜனும், பெருவுடையாரும், அனைத்து மக்களின் இதயங்களை ஆக்கிரமித்தார்கள்.

"The great temple"

"The great king"

தொடர்பு: மாரிராஜன் (marirajan93@gmail.com)

# 11. திருப்புக்கொளியூர் அவிநாசியும் சீனாவும்

— துரை.சுந்தரம்

அவிநாசி:

ஒருங்கிணைந்த கோவை மாவட்டத்தில் அமைந்திருந்த ஊர் அவிநாசி. இது தற்போது திருப்பூர் மாவட்டத்தில் இணைக்கப்பட்டுள்ளது. இவ்வூர் ஒரு புண்ணிய பூமியாகக் கருதப்படுகிறது. விநாசம் என்னும் சமற்கிருதச் சொல்லுக்கு அழிவு என்பது பொருள். வினைக்கோட்பாடு என்னும் ஒரு மெய்யியல் கோட்பாடு உண்டு. நாம் ஆற்றும் வினைகளுக்கேற்ப நம் வாழ்க்கை அமையும் என்பது அதனுடைய எளிய விளக்கம். நல்வினை நன்மையையும், தீவினை தீமையையும் பயக்கும். விநாசம் என்னும் அழிவுக்கு எதிர்ச்சொல் அவிநாசம். நாம் ஆற்றிய தீவினைகளை அழித்து என்றும் அழியா நன்மையை (புண்ணியம்) நமக்கு அளிக்கும் அழிவிலாப் பூமியாக அவிநாசி ஊர் விளங்குவதால் அப்பெயர் பெற்றது எனலாம். அத்தகு ஊரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஈசன் அவிநாசியப்பன். அவிநாசி என்னும் நிலையான பெயர் கொண்ட இவ்வூருக்கு ஒரு இயற்பெயர் இருந்தது. இப்பெயர் பலரும் அறியாப் பெயராகும். திருப்புக்கொளியூர் என்பதே அவ்வியற்பெயர். சைவ சமயக் குரவர் நால்வரில் ஒருவரான சுந்தரர் இவ்வூர்க் கோயிலுக்கு வந்து வழிபட்டுப் பாடிய தேவாரப் பதிகத்தில் "திருப்புக்கொளியூர் அவிநாசி" என்றே குறிப்பிடுகிறார். கி.பி. 1350-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றும் இவ்வூரை "வடபரிசார நாட்டுப் புக்கொளியூர்" என்றே குறிப்பிடுகிறது.

அவிநாசிக் கோயிலின் பழமை:

வரலாற்று ஆய்வாளர் குடந்தை சேதுராமன், சுந்தரரின் காலத்தை கி.பி. 700-728 எனக் கணித்துள்ளார். எனவே, அவிநாசிக்கோயில் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முந்தையது எனக் கொள்ளலாம். ஆனாலும், கோயில், கற்கட்டுமான அமைப்பைப்பெற்றுக் கல்வெட்டுகள் பொறிக்கப்படும் காலகட்டத்தைக் கொங்குச் சோழர் ஆட்சியின்போதே அடைந்தது. காலத்தால் பழமையான கல்வெட்டு கொங்குச் சோழ அரசன் முதலாம் குலோத்துங்கனின் காலத்தைச் சேர்ந்தது. (கி.பி. 1152).

கல்வெட்டுச் செய்திகள்:

சிறப்பான செய்திகளைத் தாங்கிய பல கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. அவிநாசி, கொங்குநாட்டில் இருந்த நிருவாகப் பிரிவுகளான இருபத்து நான்கு நாட்டுப்பிரிவுகளில் ஒன்றான வடபரிசார நாட்டில் அமைந்திருந்தது. இந்த நாடுகளுக்கு நாட்டுச் சபைகள் என்னும் நிருவாகச் சபைகள் இருந்தன. இருப்பினும், வெள்ளானூர், பூலுவனூர் ஆகிய இரு ஊர்களுக்குத் தனித்து ஊரளவில் சபைகள் இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இச்சபையினர் வரியாகக் கிடைத்த கம்பினை (கண்பு என்று கல்வெட்டு குறிக்கிறது) அவிநாசிக்

கோயிலுக்குக் கொடையளித்துள்ளனர். கோயிலுக்கு அரசன் பசுக்களைக் கொடையாக அளித்த செய்தி, கொங்கு நாட்டில் இக்கோயில் கல்வெட்டில் மட்டுமே காணப்படுகிறது. மற்றொரு கல்வெட்டு, பாண்டிமண்டலத்தைச் சேர்ந்த காளையார்கோயில் அதளையூர் நாடாள்வான் என்னும் தலைவன் கோயிலுக்கு விளக்கெரிக்க காசுக்கொடை அளித்ததைக் கூறுகிறது. காளையார்கோயிலின் பழம்பெயர் திருக்கானப்பேறு என்பதாக இக்கல்வெட்டால் அறிகிறோம். இன்னொரு கல்வெட்டு, கோயிலில் பணி செய்து வருமானம் பெறுவதற்கான உரிமையான "காணி" யுடைய தச்சர், கொல்லர், தட்டாருக்கு அரசன் நேரடி ஓலை ஆணை பிறப்பித்துச் சில உரிமைகளை அளிக்கிறான் என்பதைக்கூறுகிறது. இவர்கள், தங்கள் வீடுகளில் நன்மை தீமை நிகழ்வுகளின் போது பேரிகை என்னும் இசைக்கருவியைக் கொட்டிக்கொள்ளலாம் என்பதும், சங்கு ஊதிக்கொள்ளலாம் என்பதும் அந்த உரிமைகளாகும். 16-ஆம் நூற்றாண்டு விஜய நகரர் ஆட்சிக்காலத்துக் கல்வெட்டு ஒன்று, குளம் வெட்டி, அதன்மூலம் பாசன வசதி பெற்ற நிலங்களின் வருவாயில் அரசனுக்குச் செலுத்தவேண்டிய வரியில் பாதியை அவிநாசிக் கோயிலுக்கு அளித்ததைக் கூறுகிறது. சுந்தரர் முதலை வாய்ப்பிள்ளையை மீட்ட நிகழ்வைக் குறித்து ஒரு கல்வெட்டு, "முதலைக் குளத்திலே முதலைவாய்ப் பிள்ளைக்கு" என்று கூறுகிறது.

சீனக்குடை பற்றிய கல்வெட்டு:

மிகச் சிறப்பான கல்வெட்டுச் செய்தி ஒன்றை இங்கு குறிப்பிடுதல் வேண்டும். கொங்குச்சோழ அரசரில் வீரராசேந்திரன் காலத்துக் கல்வெட்டு ஒன்று. கி.பி. 1222-ஆண்டில் பொறிக்கப்பட்டது. வடபரிசார நாட்டிலிருந்த பார்ப்பார் சான்றார்க்குச் சில உரிமைகளை வழங்கி அரசன் ஓலை வழி ஆணை பிறப்பிக்கிறான். அரசன் யானை மீது அமர்ந்து உலா வருகையில் அவனுக்கு முன்னும் பின்னும் சாமந்தர், படை வீரர், பிரதானிகள் புடை சூழ உலா வருதல் நடைமுறையாய் இருந்துள்ளது. பொது மக்களின் காட்சிக்காக எனலாம். இதைக் கல்வெட்டு "உலாகம்" என்று குறிப்பிடுகிறது. அது சமயம், மேற்சுட்டிய பார்ப்பார் சான்றார் அரசனின் ஊர்வலத்தில் குதிரை மீதமர்ந்து செல்லும் உரிமையை அவர்களுக்கு அளிக்கிறான். மேலும் அவர்கள் சீனக்குடை பிடித்துக்கொண்டு வரும் உரிமையையும் அளிக்கிறான். அந்நாள்களில், அணி மணிகளால் அழகுபடுத்தப்பட்ட குடைகள் பிடித்து அணிவகுப்பில் கலந்துகொள்ளல் மிகப்பெரிய சிறப்பாகவும், பெருமையாகவும் கருதப்பட்டது. அதிலும், சீனக்குடையான பட்டுக்குடை பிடித்துக்கொள்ளும் உரிமை மேன்மைக்குரியது. இவ்வுரிமையைப் பார்ப்பார் சான்றார் பெற்றார்கள். பல்வேறு வரிசைகள் (உரிமைகள்) மற்ற சாதியார்க்கு அளிக்கப்பட்டிருந்த போதிலும் சீனப்பட்டுக்குடை பிடித்துக்கொள்ளும் உரிமை அளித்தது குறிப்பிடத்தக்கது. வேறு பல உரிமைகளும் பார்ப்பார் சான்றார் பெற்றார்கள். தழைக்குடை (பனையோலைக் குடை) பயன்படுத்திக்கொள்ளலாம். வீட்டின் சுவர்களுக்குச் சாந்து (காரை அல்லது சுதை) பூசிக்கொள்ளலாம். வீட்டின் இரு வாசல்களிலும் கொடி கட்டிக்கொள்ளலாம். படை அணிவகுப்பின்போது ஆரம் பூணலாம். நன்மை தீமை நிகழ்வுகளில் சேகண்டி ஒலிக்கும் உரிமை உண்டு. பச்சைப்பட்டு மேலாடையாக அணிந்துகொள்ளலாம். அவர்களின் குழந்தைகளுக்குப்

பொன்னாலான காறை என்னும் அணிகலன் அணிவிக்கலாம். திருமணத்தின்போது கட்டணம் கட்டி ஊர் சூழ வலம் வரலாம்.

இந்த உரிமைகளை எல்லாம் பார்ப்பார் சான்றார்கள் இலவசமாகப் பெறவில்லை. அரசனுடைய கருவூலத்தில் பொருள்(பொன்) வைத்த பின்பே இத்தகைய வரிசைகள் அளிக்கப்பட்டன. தற்காலத்தில் உலகப்புகழ் பெற்ற வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் தமிழுக்காகப் பல கோடிப் பணம் முதலீடு போலச் செலுத்தி இருக்கை அமைக்கும் சூழ்நிலையைப் பார்க்கிறோம். அண்மையில், இவ்வாறு அமெரிக்க ஹார்வர்டு பல்கலையில் இருக்கை அமைக்கப்பட்டுள்ளது. இது போலத்தான், சில குடிகள் தங்கள் உரிமைக்காக அரசனின் கருவூலத்தில் பொருள் செலுத்தியுள்ளனர் என்பதைக் கல்வெட்டுகளின் வாயிலாக அறிகிறோம். அரசனுடைய கருவூலம் கல்வெட்டில் "சரக்கு" என்னும் பெயரில் குறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டு, அரசன் நேரடியாகக் கூறுகின்ற பாணியில் அமைந்திருப்பதால், கல்வெட்டில் "நம் ஓலை குடுத்தபடியாவது" என்றும், "நம் சரக்குக்குப் பொருள் வைத்தமையால்" என்றும், "நாம் குடுத்த வரிசையாவது" என்றும் எழுதப்பட்டுள்ளது.

கல்வெட்டறிஞர் மா.கணேசனார்:

அவிநாசிக் கோயிலின் கல்வெட்டுகளை ஆய்வு செய்த பேராசிரியர் முனைவர் மா.கணேசன் அவர்கள், 1980களில் இக்கல்வெட்டினை ஆய்வு செய்து சீனக்குடை பற்றிய செய்தியை நாளிதழில் வெளியிட்டுக் கோயிலின் பெருமையை எடுத்துரைத்தார். அச் செய்திக் குறிப்பில், சீனாவுடன் இக் கொங்குப்பகுதிக்கு வணிகத்தொடர்பு இருந்திருக்கவேண்டும் என்னும் ஆய்வுக்கருத்தை முன்வைத்தார். சீனாவுடனான வணிகத்தொடர்பால் சீனப்பட்டு இங்கு வந்திருக்கவேண்டும் என்பது அவருடைய ஆய்வுக்கணிப்பு. இதற்கு மாற்றுக்கருத்தாக, சீனம் என்னும் சொல் "ஜைனம்" என்னும் சொல்லின் மாற்று வடிவம் என்றும், சீனக்குடை என்பது "ஜைனக்குடை" என்பதைக் குறிக்கும் என்றும் சில ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். இரண்டுமே ஆய்வுக்குரியன. ஜைனம் - அதாவது சமண சமயம் - கொங்குப்பகுதியில் செல்வாக்குடன் இருந்துள்ளது என்பதில் யாதொரு ஐயமும் இல்லை. அதற்கான சான்றாதாரங்கள் கொங்குப்பகுதியில் மிகுதியும் கிடைத்துள்ளன. விஜயமங்கலம் என்னும் ஊரருகில் சீனாபுரம் என்னும் ஓர் ஊர் உள்ளது. அவ்வூருக்கும் சீனத்துக்கும் தொடர்பேதுமில்லை என்றும், அவ்வூர் "ஜைனபுரம்" என்று வழங்கிப் பின்னர், "ஜீனபுரம்" என்று மருவி இறுதியில் "சீனாபுரம்" என்று திரிந்துள்ளது எனக் கூறப்படுகிறது. சீனாபுரத்தில் ஜைன சமயத்து எச்சங்கள் உள்ளன. இருப்பினும், "ஜைனக்குடை" என்பது யாது என விரிவாக ஆராயப்படல் வேண்டும். ஜைனத் தீர்த்தங்கரர் சிற்பங்களில் அவ்வுருவங்களுக்கு மேற்புறம் தலைக்கு மேல் மூன்று குடைகள் ஒன்றை அடுத்து ஒன்றாகச் செதுக்கப்பட்டுள்ளதைக் காணலாம். ஜைன மதத்துத் துறவிகளுக்கும் பெரியார்களுக்கும் இவ்வகையான முக்குடைச் சிறப்பு வழங்கப்படுவதில்லை. தீர்த்தங்கரர் நிலைக்கு உயர்ந்த இருபத்து நான்கு பேர்க்கு மட்டுமே இச் சிறப்பு வழங்கப்பட்டுள்ளது. முக்குடை அமைப்பு சிற்பங்களில் மட்டுமே காணப்படுவதொன்று. ஜைனக்குடை என்று ஒரு குடை இருந்துள்ளது



அவிநாசிக்கோயில்-சீனக்குடை பற்றிய கல்வெட்டு

கல்வெட்டு:

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநசக்கரவர்த்தி கோநேரிந்மை கொண்
2. டாந் வட பரிசாரநாட்டிற் பாப்பார் சாந்றாற்கு நம் மோலை குடு
3. த்த படியாவது இவர்கள் நம் சரக்குக்குப் பொருள் வைத்தமை
4. யில் இவர்களுக்கு நாம் குடுத்த வரிசையாவது மேலே
5. ற்றமுந் துலாகமுங் ஈழேற்றங் குதிரையுந் தழையுஞ்
6. சீனக்குடையுஞ் சேகண்டியும் பெற்று வருவார்களாக
7. வும் மைச்சுக்கு சாந்திடப் பெறுவார்களாகவும் இரட்டை
8. த்தலைக் கடைக்குக் கோற் கட்டிக் கொள்ளப் பெறுவார்
9. களாகவும் படைக்கணிக்கு ஆரம் பூணப் பெறுவார்களாகவு

கல்வெட்டின் பாடம்-முதல் படம்

10. ம் பச்சைப் பிடாம் போர்க்கப் பெறுவார்களாகவும் தங்
11. கள் மக்களுக்குப் பொந்நிந் காறைக் கட்டப் பெறுவார்கள
12. ாகவும் கல்லியாணத்துக்கு கட்டணங்கட்டி யேறி ஊர்
13. சூழப் பெறுவார்களாகவும் இவ்வரிசைகள் இவர்கள் மக்கள்
14. மக்களுக்கு சந்திராத்தவரை செல்வதாகவும் இப்படி செ
15. சம்பிலுஞ் சிலையிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவார் கள
16. ாகவும் நம் மோலை குடுத்தோம் இவை எல்லாம் வல்ல சோ
17. ழ மூவேந்த வேளாந் எழுத்து யாண்டு பதிநஞ்சாவது
18. நாள் முந்நூற்றிருபத்திரண்டிநால் இப்படிக்கு வாண
19. ராய தேவந் எழுத்து

கல்வெட்டின் பாடம்-இரண்டாம் படம்

என்பதற்கும், அது எவ்வகையில் சமுதாயத்தில் பயன்பாட்டிலிருந்தது என்பதற்கும் சான்றாதாரங்கள் உள்ளனவா என்பது தெரியவில்லை. இந்நிலையில், கல்வெட்டில் வரும் குடை சீனப்பட்டுக்குடை அல்ல என்று அறுதியாக மறுக்க இயலாது. ஜைனக்குடை பயன்பாட்டில் இருந்திருந்தாலும், அக்குடையை ஜைனரல்லாத பார்ப்பார் சான்றார்க்கு அரசன் ஏன் உரிமையாக வழங்க வேண்டும் என்னும் கேள்விக்குத் தகுந்த விடை தேடப்படல் வேண்டும். சீனப்பட்டு ஒரு வணிகப்பொருளாக இங்குப் புழக்கத்தில் இருந்துள்ளது என்பதைப் புறம் தள்ள இயலாது. சோழர் காலத்தில் கடல் கடந்து வணிகம் நடைபெற்றது. வணிகம் 13-ஆம் நூற்றாண்டிலும் தொடர்ந்து இருந்திருக்கலாம். வணிகப் பொருளாகச் சீனப்பட்டு இங்கு வந்திருக்கலாம்.

முடிவுரை:

கட்டுரையின் முடிப்பாக, ஜைனக்குடை பற்றிச் சமண அறிஞர் ஒருவரிடம் கருத்துக் கேட்டபோது அவர் தெரிவித்த செய்திகளை இங்குக் குறிப்பிடுதல் நலம். சமணத்தில் போற்றப்படும் முக்குடை என்பது தீர்த்தங்கரர்களுக்கு மட்டுமே உரித்தானது. தீர்த்தங்கரர்களின் சிற்பங்களில் முக்குடை அமைப்பைக் காணலாம். சமணப்பெரியார்களைக் கற்சிலையாக வடிக்கும்போது, ஒற்றைக் குடை காட்டப்படுவதுண்டு. சமணத்தில் விழாக்களின்போதோ, சடங்குகளின்போதோ சமணப்பெரியோருக்குக் குடை நிழல் காட்டும் நிகழ்வுகள் வழக்கத்தில் இல்லை. இச்செய்திகள், கல்வெட்டறிஞர் கணேசனார் அவர்களின் ஆய்வுக்கணிப்புக்கு வலு சேர்க்கின்றன. கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் சீனத்தில் தமிழ் வணிகர்களின் செயல்பாடுகள் இருந்துள்ளமைக்குச் சான்றாக, அண்மையில் சீனாவின் ஃபியூஜி (FUJIYAN) மண்டலத்தில் குவான் ஜௌ (QUANZHOU) நகரத்தில் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்க்கல்வெட்டு கண்டறியப்பட்ட செய்தி வெளியானதைக் குறிப்பிடலாம். இவ்வாறாக, அவிநாசிக் கோயிலின் சீனக்குடை பற்றிய கல்வெட்டு ஒரு சுவையான வரலாற்றுச் செய்தியை முன்வைத்து ஆய்வுக் களத்துக்கு வழியமைக்கிறது எனலாம்.

நன்றிக்குரியவர்கள் :

1. மறைந்த கல்வெட்டு அறிஞர் முனைவர் மா. கணேசனார்.
2. திரு பானுகுமார் அவர்கள், சமண அறிஞர், சென்னை.

தொடர்பு:
துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.
அலை பேசி: 9444939156.

## 12. நீறு ஆடிய களிறும் வெண்கோயில் மாசும்

– முனைவர் ப.பாண்டியராஜா

பாடல்களில் வரும் உவமைகளில் சில கவிதைக்கு அழகூட்டும்; சில காட்சிக்கு மெருகேற்றும், இன்னும் சில புலவரின் கூர்த்த அறிவைக் காட்டும். இவை மூன்றுமே அமையப்பெற்ற ஓர் உவமையை இங்குக் காண்போம்.

அறம் நிலைஇய அகன் அட்டில்
சோறு வாக்கிய கொழும் கஞ்சி
யாறு போல பரந்து ஒழுகி
ஏறு பொர சேறாகி
தேர் ஓட துகள் கெழுமி
நீறு ஆடிய களிறு போல
வேறுபட்ட வினை ஓவத்து
வெண் கோயில் மாசு ஊட்டும் - பட் 43 - 50

சோழநாடு சோறுடைத்து என்பார்கள். வற்றாத காவிரியால் வளம் கொழித்த அன்றைய சோழநாட்டில் ஒரு காட்சி இது. இன்றைக்குப் பஞ்சகாலத்தில் கஞ்சித்தொட்டிகள் அமைத்து, இல்லாதோர்க்கு உணவளிப்பர். அன்றைக்கும் இது போல் நடந்திருக்கிறது. அப்படி என்றால் காவிரி பாயும் நாட்டில் கஞ்சித்தொட்டிகளா? அவ்வளவு வறுமையா? என்று வியக்க வேண்டாம். உழைக்க முடியாதோரும், கவனிப்பார் இல்லாதோரும், சோற்றுக்கு வழியின்றிப் பிச்சையெடுத்துப் பிழைப்பர். இது அரசுக்கு இழிவானது. இந்த இழிவைப் போக்க, கரிகால்வளவன் தன் ஊர்களில் அட்டில்களை உருவாக்கினான். (அட்டில் = அட்டு + இல்) அடுதல் என்பது சமைத்தல் என்ற பொருள் தரும். எனவே அட்டில் என்பது சமையலறை என்ற பொருள் தரும் அழகிய சிறிய சொல். இன்றைக்கு நாம் அதைப் பெரும்பாலும் கிச்சன் (kitchen) என்றே சொல்லிப் பழகிவிட்டோம். சிறிது சிறிதாக இம்மாதிரிச் சொற்களைப் பயன்படுத்துவது நாம் தமிழுக்கு - நம் தமிழுணர்வுக்குச் செய்யும் தொண்டு ஆகும்.

இந்த அட்டிலில் வடித்துக்கொட்டிய கஞ்சி ஆறு போல ஓடுகிறதாம். முன்பெல்லாம், சோற்றை ஆக்கி, வடிப்பார்கள். வடிக்காமல் ஆக்குவதைப் பொங்குவது என்பார்கள். விறகடுப்பில் இது சிரமமானது. சரியான பக்குவத்தில் இறக்கிவைக்காவிட்டால், சோறு அடிப்பிடித்துப்போகும், அல்லது வேகாமலோ, குழைந்தோ போய்விடும். எனவே, அரிசியை உலையிலிட்டு, நிறைய நீர் வார்த்து, கிண்டிக்கொண்டே இருப்பார்கள். அவ்வப்போது, அகப்பையால் எடுத்து வெந்துவிட்டதா என்று நசுக்கிப் பார்ப்பார்கள் (ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்). சரியான பதத்துக்கு வந்தவுடன் மீதமுள்ள நீரை வடித்துவிடுவார்கள். அதற்கு, பாத்திரத்தின் மேல் துளையிட்ட ஒரு தட்டை மூடி,


அறம் நிலைஇய அகன் அட்டில்


சோறு வாக்கிய கொழும் கஞ்சி


யாறு போல பரந்து ஒழுகி


ஏறு பொர சேறாகி


தேர் ஓட துகள் கெழுமி


துகள் கெழுமி


நீறு ஆடிய களிறு போல


வேறுபட்ட வினை ஓவத்து


வேறுபட்ட வினை ஓவத்து


வெண் கோயில் மாசு ஊட்டும்

முன்புறமாக ஒரு சட்டியை வைத்து அதன் விளிம்பில் சாய்த்து வைப்பார்கள். எஞ்சியுள்ள நீர் எல்லாம் இறங்கிவிடும். இந்த நீரையே கஞ்சி என்பார்கள். பெரும்பாலும் இதை மாடுகளின் குழிதாளியில் ஊற்றிவிடுவார்கள். அல்லது பருத்தி ஆடைகளுக்கு விறைப்புக்காகப் பயன்படுத்துவார்கள். இவ்வாறு வடித்து விடுவதால், சோறு பெரும்பாலான சத்துகளை இழந்துவிடுகிறது என்பர் அறிவியலார்.

மன்னன் அமைத்த அட்டில்களில் எந்நேரமும் சோறாக்கி வடித்துவிடுவதால், கீழே கொட்டிய கஞ்சி தெருக்களில் ஆறு போலப் பரந்து ஒழுகியதாம். இது மிகைப்படுத்தல் ஆகாதா? இல்லை. மாறாக வியப்பையும், பெருமையையும் தோற்றி நிற்பது. ஓர் அரசியல் நிகழ்ச்சிக்கு வந்த பெருந்திரளான கூட்டத்தைப் பார்த்துக் கடலெனத் திரண்ட கூட்டம் என்று வருணிப்பதோ, கண்கள் மிக்க நீர் சொரிந்தால், மழையெனப் பெருகிய கண்ணீர் என்று கூறுவதோ மிகைப்படுத்தல் ஆகாது. இது அன்றாட வழக்கு. நம் மரபுகளில் ஒன்று. சொல்லப்போனால், இப்போது சொன்னது இங்குள்ள ஒவ்வோர் அடிக்கும் பொருந்தும்.

மாடுகள் கஞ்சியை விரும்பிக் குடிக்கும். வீட்டு மாடுகளை அவரவர்கள் பார்த்துக்கொள்வர். முந்தைய காலங்களில், ஒவ்வோர் ஊரிலும், சாமிக்கு நேர்ந்துகொண்டு, காளைக் கன்றுகளைப் படைப்பார்கள். இவற்றைக் கோயில் மாடுகள் என்பர். பார்ப்பதற்கு முரட்டுக்காளைகள் போல் தோன்றும். ஆனால் யாரையும் முட்டமாட்டா. அவை ஊர் முழுக்கச் சுற்றித்திரியும். அப்படிச் சுற்றித் திரியும் காளைகள் ஒன்றையொன்று பார்த்துவிட்டால், சீறியெழுந்து பாய்ந்து சண்டையிடும். அப்படிப்பட்ட காளைகள் இந்தக் கஞ்சியைக் குடிக்க வருகின்றன. போட்டியிருந்தால் சும்மா விடுமா? இவற்றின் சண்டையில், கஞ்சியும் மண்ணும் கலந்து தெருவே சேறாகிவிடுகிறது. இந்தச் சேற்றின் மீது வேகமாகத் தேர்கள் ஓடிவந்தால் எப்படியிருக்கும்? பார்த்தவர்கள் பயந்துபோய் ஒதுங்கிக்கொள்வார்கள். அப்படி ஒதுங்கமுடியாத சுவர்களில் இந்தச் சேறு திட்டுத்திட்டாய்ப் படிகிறது. அரண்மனை அட்டில் அல்லவா? அதன் சுவர்கள் நன்கு வெள்ளை அடிக்கப்பட்டு அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டனவாய்த் திகழ்கின்றன. இந்த வெண்சுவற்றில் கருப்புக்கருப்பாகச் சேறு அப்பிக் கிடக்கிறது. இக்காட்சி, புலவருக்கு, சுண்ணாம்பைப் பூசிக்கொண்ட யானையைப் போல் தோன்றுகிறது. நீறு என்பது வெண்சாம்பல் என்ற பொருள் தரும். நெற்றியில் பூசிக்கொள்ளும் விபூதி என்பது திருநீறு - திருநீர் அல்ல.

வெண்மையான சுண்ணத்துகளில் விழுந்தெழுந்த களிறு, கருமையான சேறு படர்ந்த வெண்சுவருக்கு உவமை.

| | | |
|---|---|---|
| உவமானம் | ←→ | உவமேயம் |
| களிறு | ←→ | சுவர் |
| சுண்ணம் | ←→ | சேறு |

இவ்வாறு நேர்நேராய் அமைந்த பொருள்களில் ஒரு முரண் இருப்பதைக் கவனித்தீர்களா?

களிற்றின் நிறம் கருப்பு ←→ சுவரின் நிறம் வெள்ளை
சுண்ணத்தின் நிறம் வெள்ளை ←→ சேற்றின் நிறம்.கருப்பு.

அதாவது, வெள்ளை நிறச் சுண்ணம் பூசிய கறுப்பு நிறக் களிறு, கறுப்பு நிறச் சேறு படர்ந்த வெள்ளை நிற மதிலுக்கு ஒப்பாகிறது. இப்படி முரண்பாடான உவமையைக் கையாளலாமா?

சாதாரணமாக, முகத்தில் தாடி, மீசை வைப்பது வழக்கம். சிலர் மிகப் பெரிய தாடி,மீசை வைத்திருப்பர். காதுவரை உயர்ந்த தாடி கன்னங்களையும் மறைத்து நிற்கும். மீசையோ மிக உயர்ந்து மேலுள்ள மூக்கையே மூடிவிடும். அப்படிப்பட்டவர்களைப் பற்றிக் கூறும்போது, தாடிமீசைக்குள் முகத்தை வைத்திருப்பவர்கள் என்று வேடிக்கையாகக் குறிப்பிடுவது வழக்கம். இப்பொழுது உங்கள் ஐயம் தீர்ந்துவிட்டதா? இல்லையென்றால் விளக்குகிறேன்.

வெள்ளையும் கருப்புமாக ஒரு யானை வந்தால் நமக்கு ஐயம் எழுவதில்லை. கரிய யானை வெள்ளையாக எதையோ அப்பிக்கொண்டு வந்திருக்கிறது என்போம். வெள்ளையும் கருப்புமாக ஒரு சுவர் இருந்தாலும் நமக்கு ஐயம் இல்லை. ஆனால், வெண்மையான சுவரில், ஏகப்பட்ட கருப்பு இருந்தால், வெள்ளைச் சுவரில் கருப்பு அப்பியிருக்கிறதா அல்லது கரிய சுவரில் யாரோ அங்கங்கே வெள்ளை தடவியிருக்கிறார்களா என்று வேடிக்கையாகக் கேட்போம். மிகப் பெரிய அளவில் கஞ்சி ஓடி, மிகப் பெரிய அளவில் சேறு உருவாகி, அதன் துகள்கள் மிகப் பெரிய அளவில், இது வெள்ளையாக இருந்த சுவர்தானா என்று நாம் வியக்கும் அளவுக்குப் படிந்திருக்கிறது என்பதை வலியுறுத்தவே புலவர் இந்த உவமையைக் கையாண்டிருக்கிறார் எனலாம்.

இது தொடர்பான இன்னொரு கேள்வி. கருப்புக் குதிரைகள் உண்டு. வெள்ளைக் குதிரைகளும் உண்டு. வரிக்குதிரையின் படத்தைப் பார்த்திருப்பீர்கள். வெள்ளைக் குதிரையின் மீது கருப்புக் கோடுகளா அல்லது கருப்புக் குதிரையின் மீது வெள்ளைக் கோடுகளா? ஆண்டவனுக்கே வெளிச்சம்!

தொடர்பு:
முனைவர்.ப.பாண்டியராஜா
pipiraja@gmail.com
http://sangacholai.in
tamilconcordance.in/

# 13. நாட்டார் வழக்காற்று முளைப்பாரிப் பாடலும் மாங்குடி கிழார் புறப்பாடலும்

– முனைவர் ச.கண்மணி கணேசன்

முன்னுரை:

தாய்த்தெய்வ வழிபாட்டிற்குரிய கும்மிப் பாடல்களில் முளைப்பாரி வளர்க்கும் முறை இடம்பெறுகிறது. களஆய்வில் சேகரித்த தனிப்பாடல், முத்தாலம்மன் கதைப் பாடல் இரண்டிலும் முளைப்பாரிக்குரிய பயிர்கள் எவை என்பது பற்றிய செய்திகள் உள்ளன. இச்செய்தி சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மாங்குடி கிழாரின் புறநானூற்றுப் பாடலை நினைவூட்டுகிறது. குறிப்பிட்ட புறப்பாடலில் இடம்பெறும் பயிர்களுக்கும்; முளைப்பாரிக் கும்மிப்பாட்டில் உள்ள பயிர்களுக்கும் ஒப்புமை இருப்பதன் காரணம் காண முற்படுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். "Who Are Dravidians?" என்ற தன் ஆய்வுக்கட்டுரையில் (ப.- 1-32) முனைவர் ஆண்ட்ரே எஃப் .ஜோபெர்க் 'திராவிட நாகரிகம் அழிந்துவிட்டது' என்று முடிபாகக் கூறியிருப்பதால் இத்தகைய ஒப்பாய்வு தேவையாகிறது.

முதல்நிலைத் தரவாக முத்தாலம்மன் கதைப்பாடல் செய்தி, புறம் 335ம் பாடல் செய்தி இரண்டும் அமைய; இரண்டாம்நிலைத் தரவாகத் தனிக் கும்மிப்பாட்டுச்செய்தியும் பிற புறநானூற்றுச் செய்திகளும் அமைகின்றன. இருவேறு காலமும் வகையும் சேர்ந்த இவ்விலக்கிய ஒப்பாய்வு தமிழ்ச் சமூகவரலாற்றில் தெளிவு காண உதவுகிறது.

முளைப்பாரி வளர்ப்பதற்குரிய பயிர்கள்:

புன்செய்ப் பயிர்களே முளைப்பாரிக்கு உரிய பயிர்களாகும். முத்தாலம்மன் கதைப் பாடலில் முளைப்பாரி வளர்ப்பதற்குரிய பயிர்களாகச் சொல்லப்படுபவை காராமணி, தட்டைப்பயறு, சிறுபயறு ஆகிய மூன்றாகும்.

"சின்னகொட்டான் பெட்டிகொண்டு
தெருக்களெல்லாம் பயிரெடுத்து
வாங்களம்மா தோழிமாரே அம்மாவுக்கு முளைபோட
என்தாயே ஈஸ்வரியே
காரா மணிபயிறு கலந்துவைச்ச தட்டப்பயறு
சிறு பயறும் தானெடுத்து
என்தாயே ஈஸ்வரியே... [219]

(https://kanmanitamil.blogspot.com/2019/11/blog-post.html) மூன்றையும் ஒன்றாகக் கலக்கின்றனர். மண்பானை ஓட்டை எடுத்து; ஆட்டுப்புழுக்கை, மாட்டுச் சாணம் இரண்டையும் கலந்து; கம்பந்தட்டை, வைக்கோலாகியவற்றைச் சேர்த்துப் பரப்பி;

அதன் மேல் பயறுகளை விதைக்கின்றனர். இப்பயறுகள் புன்செய்ப் பயிர்வகைகள் என்பது குறிப்பிடத்தக்கது.

முளைப்பாரி பற்றிய தனிக் கும்மிப்பாட்டில் மேற்சுட்டிய மூன்று பயறுகள் மட்டுமின்றி இன்னும் சில சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளன. அவரை, துவரை, ஐந்துவகை மொச்சை(கருப்பு மொச்சை, வெள்ளை மொச்சை, பச்சை மொச்சை, புள்ளி மொச்சை முதலியன இன்று நமக்குத் தெரிந்த வகைகள்), ஆமணக்கு, எள், சிறுபயறு, கொண்டைக்கடலை, காராமணி என்று பட்டியல் சிறிது நீள்கிறது (https://kanmanitamil.blogspot.com/2020/02/blog-post.html).

"என்னகச்ச இடுப்பிலிட்டு வண்ணப்பொட்டி தலையிலிட்டு- அங்க
பெரியவீடு'ன்னு சொல்லி பிச்சை கேட்டு வந்தோம் அம்மா- அந்த
பூமியிலே வெளஞ்ச பண்டம்; புதுப் பண்டம் போடுங்கம்மா- அந்த
நாட்டிலே வெளஞ்ச பண்டம் ;நல்ல பண்டம் போடுங்கம்மா- நம்ம
காணியிலே வெளஞ்ச பண்டம் ; கலந்த பண்டம் போடுங்கம்மா
அவர துவர மொச்ச அஞ்சுவகை ஆமணக்கு
எள்ளு சிறுபயறு ஏத்த மணிப்பயறு
கடல சிறுபயறு காரமணிப் பயறு
வாங்கிவந்த பயறுகள வாளியில ஊறப்போட்டு
கொண்டுவந்த பயறுகள கொடத்துல ஊறப்போட்டு..............."

என்ற பாடற்பகுதியைத் தொடர்ந்து செய்முறையும் நுட்பமான விவரம் கொண்டுள்ளது. எல்லாப் பயறுகளையும் ஊறப் போட்டு; மண்பானை ஓட்டில்; ஆட்டுச்சாணம், மாட்டுச்சாணம், கம்பந்தட்டை, வைக்கோல்; சோளத்தட்டை எல்லாம் சேர்த்துப் பரப்புகின்றனர். சாணம் கட்டியாக இல்லாதபடி பொடிக்கின்றனர். நன்கு விளைய ஏதுவாகத் தட்டைகளின் கணுக்களை நெரிக்கின்றனர். சாணத்துடன் அமுக்கி விதைக்கின்றனர். பயறுகள், எள், ஆமணக்கு அனைத்தும் புன்செய்ப் பயிர்களே.

மாங்குடி கிழார் பாடலில் இடம்பெறும் பயிர்கள்:

"அடலருந் துப்பின் ..............
குரவே தளவே குருந்தே முல்லையென்
றிந்நான் கல்லது பூவுமில்லை
கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிளர் அவரையோடு
இந்நான் கல்லது உணாவும் இல்லை...........
கல்லே பரவின் அல்லது
நெல்லுகுத்துப் பரவும் கடவுளும் இலவே" (புறம்- 335)

இப்பாட்டு தமிழ்ச்சமூக வரலாற்றைப் பதிவு செய்துள்ளது. வருணத்தார் வருகைக்குப் பின் தமிழகச் சூழல் எப்படி மாறியது என்று தொகுத்துரைக்கிறார் புலவர். குரவு, தளவு, குருந்து, முல்லை முதலிய பூக்கள் தவிர்ந்த பிற பூக்களின் பயன்பாடு போர்முறைகளில் நடைமுறைப்படுத்தப்பட்டது; வேந்தர்க்கும் குறுநில மன்னர்க்கும் இடையே உருவான அதிகாரப் போட்டியில் திணை மாந்தர்க்கு;

வெட்சி முதலாக வாகை ஈறாகப் போரின் பல நிலைகட்குரிய அடையாளப் பூக்களின் தேவை ஏற்பட்டது. மரபு வழிப்பட்ட வரகு, தினை, கொள், அவரை முதலிய புன்செய்ப்பயிர்களின் வேளாண்மையோடு நெல் வேளாண்மையும் செய்ததைக் குறிப்பாகச் சுட்டுகிறார். கள்ளைப் படைத்து நடுகல்லை வழிபட்ட நிலைமாறிக்; கடவுளர்க்கு நெல்தூவி வழிபடும் வழக்கம் தோன்றிய மரபு மாற்றத்தையும் ஆவணப்படுத்துகிறார். இப் பாடலைச் சமூகவரலாற்று அடிப்படையில் விளக்க பதிப்பித்தவரும் உரையாசிரியரும் முற்படவில்லை. மாங்குடிகிழார் குறிப்பிடும் தமிழர் உணவு அனைத்தும் புன்செய்ப் பயிராகும். அவரை என்பது பயறு வகைகளுக்குரிய பொதுப்பெயர் ஆகும். திணைமாந்தரான தொல்தமிழர் புன்செய் வேளாண்மையை மரபாகக் கொண்டவர் என்பதை எடுத்துக்காட்டும் பிற புறப்பாடல்களும் உள.

கரும்பனூர் கிழானது ஊர்;

“வன்பாலாற் கருங்கால் வரகின்
அரிகாற் கருப்பை அலைக்கும் பூழின்
அங்கட் குறுமுயல் வெருவ அயல
கருங்கோட்டு இருப்பைப் பூவுறைக்குந்து ”- (புறம்.- 384)

என வருணிக்கப்படுகிறது. காட்டில் விளையும் வரகும், அரிகாலில் வாழும் எலியைப் பிடிக்க முயலும் குறும்பூழ்ப் பறவையின் ஆரவாரமும், அதன் காரணமாக அஞ்சி ஓடும் முயலும், அதன் ஓட்டத்தில் இருப்பை மரத்துப் பூக்கள் உதிர்வதும்; அவனது புன்செய் வேளாண்மையை உறுதிப்படுத்தும் சான்றுகளாம். அவனிடம் விருந்தயர்ந்த கிணைப்பொருநன்;

"பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி ............
இருநிலம் கூலம் பாறக் கோடை"யில் (புறம்.- 381)

இருந்ததாகப் பாடுகிறான். ‘மன்னர் மனை சென்று ஊனுணவிற்காகக் காத்துத் துன்புற வேண்டாம்; எவ்வளவு தொலைவிலிருந்தாலும்; வறட்சிக்காலத்தில் என்னிடம் வந்து பாலிற்கரைத்தும், பாகுடன் சேர்த்தும் வயிறார உண்டு செல்க’ என்கிறான். பாகிற் கொண்டதாவது உளுந்தங்களி ஆகும்.

"உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை" (அகம்.- 86)

என்று நல்லாவூர் கிழார் பாடும் உளுந்தங்களி இன்றும் கருப்பட்டிப் பாகுடன் சேர்த்து உண்ணப்படும் ஒரு உணவுவகை ஆகும். பாலிற் பெய்த உணவு பாலுடன் கூடிய வரகரிசிச் சோறாகும். ஆலத்தூர் கிழார் புன்செயில் விளைந்த வரகுச்சோற்றைப் பாலோடு உண்பதை;

"................................புன்புல வரகின்
பாற்பெய்........................................
அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்" (புறம்.- 34)

என்று விரிவாகப் பாடியுள்ளார்.

கிள்ளிவளவன் பஞ்சகாலத்தில் பண்ணன் மக்கள் பசியாற்றிய தன்மையைக் கூறி அவனைப் 'பசிப்பிணி மருத்துவன்' என்று போற்றிப் புகழ்ந்தமைக்கும் (புறம்- 173) இப்புன்செய் வேளாண்மையே காரணம் எனலாம். நீர்வளம் குன்றிய போதும்; அதாவது நெற்கழனி பயன்தராத போதும்;

"வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை.........
வெல்லும் வாய்மொழிப் புல்லுடை விளைநிலம்
பெயர்க்கும் பண்ணன்" (புறம்- 388)

என்ற அடிகள் புலவர்க்குப் புல்லின் விளைநிலத்தைத் தானமாகக் கொடுக்கக் கூடியவன் என்கின்றன.

வலார்கிழான் பண்ணன்;
"பெருங்குறும் புடுத்த வன்புல இருக்கை"- (புறம்.- 181)

உடைய தலைவன் என்று பாடல் பெற்றுள்ளான். இங்கு வன்புலம் புன்செய் ஆகும். இதனால் தொல்தமிழகத்து இனக்குழுத் தலைவராகிய கிழார்கள் புன்செய்ப்பயிர் செய்தவர் என்பதும்; வேளாளர் வந்தேறிய பின்னரே அவர் நெற்பயிர் விளைவித்தனர் என்பதும்; புன்செய் வேளாண்மை மரபின் எச்சமே முளைப்பாரி வளர்த்து வழிபடும் வழக்கம் என்பதும் புலனாகிறது.

முடிவுரை:

பயறுவகைகள், எள், ஆமணக்கு ஆகியவற்றை முளைப்பாரியாக வளர்த்துப் படைத்துக் கும்மியடித்து வழிபடுவது; தொல்தமிழராகிய இனக்குழுச் சமுதாயத்தின் மரபாகும். திராவிட நாகரிகம் அழிந்துவிட்டது என்ற முனைவர் ஆண்ட்ரே எஃப் .ஜோபெர்கின் முடிவு மீளாய்விற்குரியது.

துணைநூற்பட்டியல்:

1. அகநானூறு- களிற்றியானை நிரை- ந.மு.வேங்கடசாமி நாட்டார்& ரா.வேங்கடாசலம் பிள்ளை (உ.ஆ.)- கழக வெளியீடு- முதல் பதிப்பின் மறு பதிப்பு- 2009

2. புறநானூறு I& II - ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.)- கழக வெளியீடு- 438& 598- முதற்பதிப்பின் மறுஅச்சு- 2007

3. Symposium On Dravidian Civilization- Andre F.Sjoberg (editor)- publn. no.1- ASIAN SERIES of the Center for Asian Studies of the University of Texas, Austin- 1971

குறிப்பு: இது திருச்செங்கோடு விவேகானந்தா கல்லூரியில் 24.02.2020 அன்று நடந்த ஒப்பிலக்கிய பண்பாட்டு ஆய்வுக் கருத்தரங்கிற்கு அனுப்பிய ஆய்வுக்கட்டுரை.

தொடர்பு:
முனைவர். ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)

# 14. தொன்ம இலக்கியங்களைப் படிப்பதெப்படி?

## – முனைவர் ப.பாண்டியராஜா

நாம் வாழும் காலத்து வாழ்வியல் கோணத்தில் தொன்ம இலக்கியங்களைப் படிப்பதால் சரியான விளக்கம் கிடைக்குமா? என்ற ஒரு கேள்வி எழுந்தது. இதைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கையில் தற்செயலாக எனக்குச் சில விளக்கங்கள் கிடைத்தன. இப்போது நான் உருவாக்கிக்கொண்டிருக்கும் சங்க இலக்கிய அருஞ்சொற்களஞ்சியத்திற்காக, ‘விதிர்’ என்ற சொல்லை விளக்க முற்படுகையில் இது நிகழ்ந்தது.

குறும்பூழ் எனப்படும் காடைப்பறவைக்கு மேனி முழுக்கப் புள்ளி புள்ளியாக இருக்கும். யாரோ ஒருவர் சிவந்த அரக்கினை அதன் உடம்பில் தெளித்துவிட்டாற்போன்று அது இருக்கிறதாம்.

விதிர்த்த போலும் அம் நுண் பல் பொறி
காமர் சேவல் - அகம் 103/3,4

தெளித்தன போலும் அழகிய சிறிய பலவாய புள்ளிகளையுடைய
அழகிய குறும்பூழ் சேவல்
என்கிறது அகநானூறு.

ஒரு பாத்திரத்தில் ஏதோ ஒரு குழம்பில் ஐந்து விரல்களையும் மேலாக நனைத்து, விரல்களைக் குவித்துப் பின்னர் ஒரு பரப்பின் மீது விசையுடன் பலமுறை தெறித்துவிட்டாற்போன்று அந்தப் புள்ளிகள் இருக்கின்றனவாம். இதைத்தான் ’விதிர்த்த போலும்’ என்கிறது பாடல்.

திருமண நிகழ்ச்சிகளில் வாசலில் நுழையும்போது பன்னீர் தெளிக்கிறார்கள் இல்லையா? அதுவும் விதிர்த்தலே.

அடுப்பில் ஒரு திறந்த சட்டியில் ஏதோ வெந்துகொண்டிருக்கிறது. அதில் ஒரு கரண்டியும் போடப்பட்டுள்ளது. கரண்டி சுடத்தானே செய்யும்? அதை அறியாமல் ஒருவர் அந்தக் கரண்டியின் கைப்பிடியைப் பிடிக்கிறார் என வைத்துக்கொள்ளுங்கள். அவருக்குக் கை சுட்டுவிடும். உடனே அவர் என்ன செய்வார்? கரண்டியை விட்டுவிட்டு, கையைப் பலமுறை உதறுவார் இல்லையா? அதுவும் விதிர்த்தல்தான்.

ஒரு தலைவனும் தலைவியும் தனிமையில் சந்தித்துக்கொள்கிறார்கள். சங்க கால வழக்கப்படி, ஆண்கள் தலையில் மாலை அணிந்துகொள்வது வழக்கம். இதைக் கண்ணி என்பார்கள். அன்றைய காலத்தில் ’கிராப்’ வெட்டிக்கொள்ளும் பழக்கம் கிடையாது. தலைமுடியை உச்சிக்குடுமி போல் கட்டி, அதை மலர்ச் சரத்தால் சுற்றிக்கொள்வர். இது ஆண்கள் தலையில் அணியும் மாலை. கண்ணி

எனப்படும். பெண்கள் சூடிக்கொள்ளும் பூச்சரம் கோதை எனப்படும். 'கூந்தல் வேய்ந்த கோதையும்' என்கிறது பெருங்கதை. தலைவி என்ன செய்கிறாள் - தலைவன் கண்ணியைக் கழற்றித் தன் கூந்தலுக்குள் செருகிக்கொள்கிறாள். வெளியில் தெரியும்படி அணிந்துகொள்ளமுடியாது. பூச் சூடாமல் வெளியில் சென்றவள் பூவுடன் திரும்பி வந்தால் வீட்டில் கேள்வி கேட்பார்களே!

வீட்டுக்கு வந்தவளின் தலைமுடியைச் செவிலித்தாய் அவிழ்க்கிறாள். உள்ளே மறைத்துவைத்திருந்த பூ வெளியில் வந்து விழுகிறது. அப்பனும் ஆத்தாளும் வீட்டில்தான் இருக்கிறார்கள். அவள் வெளியில் பூச்சூடாமல் சென்றது அவர்களுக்குத் தெரியாது போலும். எனவே அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. செவிலித்தாய்மட்டும் கவனித்துப் புரிந்துகொள்கிறாள். எனினும், வெளியில் வந்து விழுந்த பூவைப் பார்த்துத் திடுக்கிட்டுப்போன செவிலி, "ஐயோ, குட்டு வெளிப்பட்டுவிடும் போலிருக்கிறதே" என்று கையைப் பலமுறை உதறியவாறு வேகமாக வெளியில் சென்று மறைகிறாள்.

இந்தச் சூழலை மனத்திற்கொண்டு, "அச்சச்சோ" என்று கூறிக்கொண்டு நீங்கள் கைகளை உதறிப்பாருங்கள். இதுவும் விதிர்த்தலே. இது என்னுடைய விளக்கம் அல்ல. இதற்கு ஒரு சங்கப்பாடல் உண்டு.

புல்_இனத்து ஆயர்_மகன் சூடி வந்தது ஓர்
முல்லை ஒரு காழும் கண்ணியும் மெல்_இயால்
கூந்தலுள் பெய்து முடித்தேன்-மன் தோழி யாய்
வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே
அன்னையும் அத்தனும் இல்லரா யாய் நாண
அன்னை முன் வீழ்ந்தன்று அ பூ
அதனை வினவலும் செய்யாள் சினவலும் செய்யாள்
நெருப்பு கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கி புறங்கடை போயினாள் - கலி 115/11,12

இதன் பொருள்:
ஆட்டினத்து ஆயர்மகன் சூடி வந்த ஒரு முல்லைச் சரத்தையும்,
தலைமாலையையும், மெல்லிய இயல்புடையவளே! என்னுடைய கூந்தலுக்குள்
வைத்து முடிந்திருந்தேன், தோழியே!
என் செவிலித்தாய் என்னுடைய தலைக்கு வெண்ணெய் தடவுவதற்காக என்
கூந்தலை விரித்துவிட என் தாயும், தந்தையும் வீட்டிலே இருக்கும்போது,
செவிலித்தாய் பதறிப்போக, அவள் முன் விழுந்தது அந்தப் பூ;
அதனை ஏன் என்று அவள் கேட்கவுமில்லை, கோபப்படவும் இல்லை,
நெருப்பைக் கையால் தொட்டவர் அக் கையை விதிர்க்குமாறு போலக் கையை
விதிர்த்து வீட்டைவிட்டு நீங்கி வாசலுக்கு வெளியே சென்றாள்.
"நெருப்பு கை தொட்டவர் போல விதிர்த்திட்" என்ற தொடர் இக்காட்சியில் வரும் விதிர் என்ற சொல்லை நன்கு விளக்கும்

இப்போது இன்னொரு காட்சிக்குச் செல்வோம். இது ஒரு திருமணக் காட்சி.

ஈர்ம் தண் முழவின் எறி குணில் விதிர்ப்ப
தண் நறும் சாந்தம் கமழும் தோள்மணந்து - அகம் 186/11,12

இதன் பொருள்:
மிக்க தண்மை வாய்ந்த முழவினைக் குறுந்தடியால் அடிக்கவும்
தண்ணிய நறிய சந்தனம் நாறும் தோளையுடையவளை மணம்புரிந்து
என்பது இதன் பொருள் என்கின்றந்த உரை.
முழவு = மத்தளம். குணில் = குறுந்தடி. எறிதல் = அடித்தல்.
ஆனால் இங்கே விதிர்ப்ப என்ற சொல்லுக்கு எந்த உரைகாரரும் வேறு விளக்கம் தரவில்லை. எறி குணில் விதிர்ப்ப என்பதற்குக் குறுந்தடியால் அடிக்க என்றுமட்டுமே உரை சொல்கின்றனர். இங்கு 'எறி குணில் விதிர்ப்ப' என்ற தொடரை உற்றுப்பார்க்கவேண்டும். அடிக்கின்ற குறுந்தடி அடிக்க என்பது கூறியது கூறல் ஆகாதா?

முதலில் குறிப்பிட்ட பல வகை விதிர்ப்புகளை உற்றுநோக்குங்கால், விதிர்த்தலில் ஒரு விரைவான செயல் (quick action) தெரிகிறது. எனவே, இங்குக் கூறப்பட்டுள்ள 'எறி குணில் விதிர்ப்ப' என்பதிலும் ஒரு விரைவான செயல் இருக்கவேண்டும். 'அடிக்கும் குறுந்தடி வேகமாக இயங்க' என்ற பொருள் பொருத்தமானதாகத் தோன்றுகிறது. இங்குக் குறிப்பிடப்படும் முழவினைத் தடியால் விதிர்ப்பது என்பது, ஒரு மண நிகழ்வின் போது நடப்பதாகும். 'எறி குணில் விதிர்ப்ப---தோள் மணந்து' என்று வருவதால், தற்காலத்துத் திருமணங்களில் மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டும் நேரத்தில் எழுப்பப்படும் கெட்டிமேளம் போல் அன்றைக்கும் விரைவாக முழவு அடிக்கப்படுவதையே பாடலாசிரியர் 'எறி குணில் விதிர்ப்ப' என்கிறார் என்று தோன்றுகிறது. எனவே, 'எறி குணில் விதிர்ப்ப' என்பதற்குக் 'கெட்டிமேளம் முழங்க' என்று பொருள்கொள்ளலாம்.

இப்பொழுது சொல்லுங்கள்:
நாம் வாழும் காலத்து வாழ்வியல் கோணத்தில் தொன்ம இலக்கியங்களைப் படிப்பதால் சரியான விளக்கம் கிடைக்குமா ?

தொடர்பு:
முனைவர்.ப.பாண்டியராஜா
pipiraja@gmail.com
http://sangacholai.in
tamilconcordance.in/

# 15. தொல்காப்பியத்தில் நவீன சிந்தனைகள்

– முனைவர்.ச.கண்மணி கணேசன்

ஆசிரியர் நூலுக்கு மாணவர் கருத்துரை கூறுவது மரபுவழிப்பட்ட பணி; எனினும் மிகுந்த எச்சரிக்கை உணர்வோடு இப்பணியை மேற்கொள்கிறேன். புதிய சிந்தனை, புதுப் பார்வை, புதுக்கருத்து இவற்றிலெல்லாம் மிகுந்த நாட்டம் கொண்டவர் எம் ஆசிரியை திருமதி பொ.நா.கமலா அவர்கள். ஆராய்ச்சிக்கு வயதோ உடல்நலமோ வரம்பு கட்ட முடியாது. மனத்தின் ஆர்வம் ஒன்றே ஆய்வுப்பணியைத் தொடர வைக்கவும், நிறைத்து வைக்கவும் இயலும். அந்த மனத்திட்பத்தைச் சரிவர எடுத்துக் காட்டுவதாக இந்தக் கருத்துரை அமைய வேண்டுவது இன்றியமையாதது. எனவே பொறுப்பின் கனம் மிகுதியானது என்பதைப் புரிந்து கொண்டு நூலைப் பயின்றேன்.

தொல்காப்பியம் ஒரு படைப்பு நூல் என்று சொல்வதைக் காட்டிலும்; 'பிரதி' என்று சொல்லக் கூடிய தகுதி உடையது என்னும் கருத்தை முதல் கட்டுரை சான்றுகளுடன் விளக்கிக் காட்டுகிறது. பிரதிக்குரிய பல பண்புகளுள் இசை திரிந்திசைத்தல், ஆடையின் உற்பத்தியை ஒத்திருத்தல், தந்திக் கம்பியைப் போன்ற செயற்பாடு, உபபிரதிகள் உருவாக இடந்தருதல், பல குறிகளின் சேர்க்கையாக அமைதல், மனிதமன விடுதலைக்கு வித்திடுதல், சமூக இயக்கத்திற்கு ஆதாரமாதல் என ஏழு பண்புகளைத் தொகுத்துத் தருகிறார். குறியியல், தொடர்பியல், அமைப்பியல் என்ற மூன்று கொள்கைகளை அடியொட்டிய பிற ஆறு கட்டுரைகள் இந்நூலில் உள்ளன.

இலக்கிய ஆய்வைப் பொருத்தவரை தொல்காப்பியர் உலக முன்னோடி என்பதை நிலைநாட்ட 'தொல்காப்பியமும் குறியியலும்' என்ற ஆய்வு துணை செய்கின்றது. மேனாட்டார் ஆய்வியல் வழி நம் தாய்மொழி இலக்கியத்தை நோக்க வேண்டிய தேவை என்ன என்ற சிலரது காரமான விவாதங்களுக்கு இத்தகைய ஆய்வுக்கட்டுரைகள் நல்ல சாரத்தைப் பதிலாகத் தருகின்றன. நூலாசிரியரின் நுட்பமான நோக்கும் ஆழ்ந்த சிந்தனையும் தனித்திறனும்; அவர் குறி பற்றிப் பதினைந்து கருத்துக்களைத் தொகுத்தளிப்பதிலிருந்து புலப்படுகின்றன.

'தொல்காப்பியத்தில் அரங்கக் குறிகள்'- இக்கட்டுரையில் இடம் பெறும் புதுக் கலைச்சொற்கள் மட்டுமே தொல்காப்பியத்திற்கும் சங்க இலக்கியத்திற்கும் புறம்பானவை. ஆனால் மேலைநாட்டாரின் திறனாய்வுப் பார்வை 2000 ஆண்டுகட்கு முன்னர் நம் தொல்காப்பியர் கொண்டிருந்த பார்வை. அவரது பார்வையைத் தொடர்ந்து 2000 ஆண்டுகளாக நம் தமிழுலகம் வளர்த்துக் கொள்ளவில்லை என்ற உண்மை மனதிற்குள் கசக்கிறது. இன்று தமிழிலக்கியத்தில் மேலைநாட்டுத்

திறனாய்வாளர் பின்பற்றிய பார்வைகளை மேற்கொள்வதால் இந்த நூற்றாண்டில் தமிழுக்குக் கிடைத்துள்ள வளம் கலைச்சொல்வளம் என்று சொன்னால் அது மிகையாகாது. இக்கலைச் சொற்களைக் கட்டுரையின் போக்கில் ஆங்காங்கு; ஆங்கிலக் கலைச்சொற்களை அடைப்புக்குறிக்குள் இட்டு; நூலாசிரியர் பயன்படுத்தியுள்ளார். தொடக்க நிலையில் இது கட்டுரையைப் புரிந்து கொள்ளத் துணை செய்கிறது. கட்டுரைச் செய்தியை நன்கு புரிந்து கொண்ட பின்னரோ சீரான ஓட்டத்திற்குச் சிறுதடையாக உள்ளது. பரற்கற்கள் உறுத்தும் பாதசாரியின் நிலையில் தவிக்க வேண்டியுள்ளது. இந்நிலை தவிர்க்க முடியாதது. எனினும் நூலின் இறுதியில் நூலாசிரியர் தமிழ் ஆய்வியலின் புதுக்கலைச்சொற் பட்டியல் ஒன்றைத் தயார் செய்து கொடுத்தால் அது இனி வரும் ஆய்வாளர்க்கு மிக்க பயனைத் தரும்.

'தொடர்பியல் - சில நோக்குகள்' என்ற கட்டுரை இருவகைப் போக்குகளைக் கொண்டுள்ளது. முற்பகுதி மேனாட்டார் ஆய்வுக் கொள்கைகளைத் தொல்காப்பியத்தில் தேடிப் பொருத்தும் முயற்சியாக அமைகிறது. அம்முயற்சியில் முழுமையாக வெற்றியடைந்தும் உள்ளார். பிற்பகுதியில் ஒரு புது முறை; ஆய்வுக் கட்டுரையின் தரத்தை மேம்படுத்தித் தனித்துவப்படுத்துகிறது. அகப்பாடலில் ஆண்பாற்கவிஞர் அம்மூவனார் பாடலில் இடம்பெறும் தொடர்பியல் உத்தியையும் பெண்பாற் கவிஞர்கள் ஔவையார், நக்கண்ணையார் ஆகியோர் பாடல்களில் இடம் பெறும் தொடர்பியல் உத்தியையும் ஒப்பிட்டு ஆராய்கிறார். இரத்தினச் சுருக்கமாக அமையும் இவ்வாய்வுக்கு மிக ஆழமான நுட்பமான அறிவும் பயிற்சியும் தேவை. தமிழ் ஆய்வுலகில் சங்க இலக்கிய அகப்பாடல் ஆய்வு புதுக்கோணத்தில் திருப்பம் பெற இப்பார்வை துணை செய்கிறது.

'முன்னம்- தொடர்பியல் பணி' என்ற கட்டுரை தொல்காப்பியம் சுட்டும் 'முன்னம்' என்ற உறுப்பு பற்றிய முழுமையான விளக்கக் கட்டுரையாக அமைகிறது. அதன் பல்வேறு பரிமாணங்களைத் தொகுத்துத் தருகிறார் ஆசிரியர். பேச்சு மொழியிலும் எழுத்து மொழியிலும் முன்னம் தொடரியல் அமைப்பின் அலகாகவும்; பொருளியல் அமைப்பின் அலகாகவும் செயல்படுகிறது. அது மட்டுமின்றி இலக்கியத்தில் உடல்மொழித் தொடர்பியல் அலகாக; அதாவது மெய்ப்பாட்டியல் அலகாகப் பயின்று வருவதையும் எடுத்துக் காட்டுகிறார்.

'இலக்கியக் கலையில் முன்னக்கோட்பாடு' பற்றி ஆராய்ந்து எழுதும் போது புறஇலக்கியத்தில் இடம் பெறும் குறிப்புப்பொருள், அக இலக்கியத்தில் இடம் பெறும் உள்ளுறை உவமமும் இறைச்சியும், குறிப்புமொழி எனும் இலக்கிய வகை, புதுக்கவிதையின் இருண்மை நீக்கம் ஆகியவற்றைச் சான்றுகளோடு விளக்கிச் செல்கிறார். 'முன்னம்' என்ற உறுப்பை ஒரு கருவியாக அளவுகோலாகக் கொண்டு உள்ளுறை உவமத்தையும் இறைச்சியையும் விளக்கி ஒப்பிடும் போது அவ்விரண்டும் கவர்மொழியில் கருத்தை விளக்கும் சிறந்த வாயில்கள் என்ற

ஒற்றுமையை முதலில் எடுத்துக் காட்டுகின்றார். பின்னர் இரண்டிற்கும் இடையே உள்ள நுட்பமான வேறுபாடுகளைத் தெளிவாக வரையறை செய்து இனம் பிரித்துக் காட்டியிருப்பது இந்த ஆய்வின் மூலம் கிடைத்துள்ள ஒரு புதையல் என்றால் அது மிகையாகாது. வரிக்கு வரி இருண்மை நிறைந்த புதுக்கவிதை ஒன்றைத் தெரிவு செய்து முன்னத்தின் மூலம் பொருள் விளக்கம் கொடுக்கிறார். இனிச்செய்ய வேண்டியன இன்னின்ன என்று என்று தொகுத்தும் தந்துள்ளார். இந்த ஆய்வின் மூலம் பல வளமான புது ஆய்வுகளுக்கு வழி கிட்டுகிறது. அதனால் முன்னம் பற்றிய ஆய்வின் மதிப்பு உயர்கிறது.

'தொல்காப்பியத்தில் அமைப்பியல் சிந்தனைகள்' உள்ளன என்று பலவேறு கோணங்களில் நோக்கிக் கருத்துக்களைத் தேர்ந்தெடுத்துத் தருகிறார். அமைப்பியல் கோட்பாடு மேனாட்டில் தோன்றி வளர்ந்து வரும் கொள்கையாகும். நம் சமூகத்தின் பரம்பரைச் சொத்தான தொல்காப்பியத்தில் அக்கோட்பாடுகளைப் பொருத்திக் காண்கிறார். அமைப்பியல் கோட்பாடுகளில் பல கருத்து வேறுபாடுகட்கு உட்படக்கூடியவை தாம். எனினும் அவற்றை ஒதுக்கி வைக்க வேண்டிய நியதி ஏதுமில்லை.

மேலைநாட்டுத் திறனாய்வுக் கொள்கைகளைப் பயிலவேண்டும் என்ற முனைப்பு ஏற்படுவதே குறிப்பிடத்தக்க அம்சம் தான். முனைப்பு ஏற்பட்டபின் அவற்றைப் பயின்று புரிந்துகொண்டு நம் இலக்கியத்தில் அத்தகைய ஆய்வுகளைச் செய்து பார்ப்பது பெரிய சாதனையே. ஆராய்ச்சி உலகைப் பொருத்தவரை மரபை மீறுவது என்பது எளிதில் யாரும் ஏற்றுக் கொள்ள இயல்வது அன்று. இப்பிரதியில் உள்ள ஏழு கட்டுரைகளும் தத்தம் போக்கில் புதுக்கருத்துக்களைத் தருகின்றன. நம்முள் புதிய சிந்தனைகளைத் தோற்றுவிக்கின்றன. நம் முன்னோர் மறந்தவற்றை நினைவூட்டுகின்றன. தமிழ் ஆய்வுலகில் இந்நூல் ஒரு மைல்கல்லாக அமையும் என்பது உறுதி.

(குறிப்பு: டிசம்பர் 1997ல் முனைவர் பொ.நா.கமலா எழுதி பெங்களூர் காவ்யா பதிப்பகம் மூலம் வெளியிட்ட ஆய்வுக்கட்டுரைகளின் தொகுப்பிற்கு 20.10.1997ல் நான் அளித்த கருத்துரை)

தொடர்பு:
முனைவர். ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)
முதல்வர் (ஓய்வு)
ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி(தன்னாட்சி), சிவகாசி

## 16. திருக்குறள் - சிறப்பு திருமுறை ஆகமம்

– "சொல்லாக்கியன்"

திருக்குறள் எழுதப்பட்ட காலம் கி.மு. முதலாம் நூற்றாண்டு. களப்பிரர் அதிகார உச்சத்திலிருந்த காலம். சில காலம், திருக்குறள் முறையாக அரங்கேற்றப் படாமல் தடுக்கப்பட்டதாய் கூறப்படுகின்றது. அது பௌத்தம் மற்றும் சமணத்தையும் எதிர்ப்பதாய் கருதப்பட்டிருக்கக் கூடும். ஆனால், அதன் பொருண்மையும் வெளிப்பாடும் குறிப்பிட்ட சமயங்களைக் குறிப்பதாக இல்லாமல் அனைவருக்கும் பொதுவாக இருப்பதால், செம்மையான வாழ்விற்கு வழிகாட்டியாக இருக்கின்றமையால், முழுமையாகப் புறக்கணிக்க முடியவில்லை. மேலும், புலவர்கள், அறிஞர்கள் மற்றும் பொதுமக்கள் மத்தியில் அது ஏற்கனவே புழக்கத்தில் வந்திருக்க வேண்டும் என்றே தோன்றுகின்றது. திருக்குறளைப் பற்றிய பற்பல சான்றோர்களின் கருத்துகளும், ஆய்வுக் குறிப்புகளும்தான் அதை அரங்கேற்ற நிர்ப்பந்தித்திருக்க வேண்டும். ஏனென்றால், தமிழ் இலக்கிய வரலாற்றில் வேறெந்த தனி நூலுக்கும், புலவருக்கும் இத்தகைய புகழ்மாலை பரவலாக அணியப்படவில்லை. அதுதான் இன்று பாயிரமாக, திருவள்ளுவ மாலையாக மணக்கின்றது.

திருவள்ளுவர் வாய்மொழி செய்தியாக தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர் என்றே சமீபகாலம் வரை கருதப்பட்டார், கூறப்பட்டார், கற்பிக்கப்பட்டார். ஆனால், இப்பொழுது, பல சமயங்களும் திருக்குறளுக்கு உரிமை கொண்டாடுவது போல், பல சமூகத்தினரும் திருவள்ளுவருக்கு உரிமை கொண்டாடுகின்றனர். இதற்குக் காரணம், அது இன்றைய உலகளாவிய வாழ்வியல் சூழலுக்கும் பொருந்தும் தன்மை, எல்லா நாட்டவரும் வியந்து விரும்பி ஏற்கும் தன்மை. திருக்குறள் இன்று உன்னதமான உலக இலக்கியமாகக் கருதப்படத் துவங்கியுள்ளது. வாழ்வியல் நெறிமுறைகள் மற்றும் நடைமுறைகளைக் காட்டும் கையேடாக மிளிர்கின்றது. திருவள்ளுவரோ உண்மையாகவே உலகக் குடிமகனாக நோக்கப்படும் காலம் வந்து கொண்டிருக்கின்றது. குறளின் அறம் காட்டும் வழியில் மக்கள் நடந்தால் பொருளாதார வளமும், அமைதியான ஆட்சியும், மட்டில்லாத இன்பமும் உலகமெலாம் நிலவும். பல்வேறு நாட்டு மாந்தர் ஒற்றுமையான உலகக்குடிகளாகவும், இன்று நிலவும் இந்த பூமியே சுவர்க்கமாகவும் ஒளிரும்.

திருக்குறளை முதலில் அறநெறி நூல் என்றனர். அதன் ஞான மரபைக் கண்ணுற்று மறைநூல் என்றனர். அதன் தத்துவ அடிப்படையை உணர்ந்து தமிழ்வேதம் என்றனர். அதன் சரியைகளையும், கிரியைகளையும், ஓகத்தையும்

(யோகத்தையும்), ஞானத்தையும் அறிந்துணர்ந்தால் அதைத் திருமுறை என்றும் ஆகமம் என்றும் கூறலாம்.

திருமுறை என்றால் என்ன? ஆகமம் என்றால் என்ன? அவற்றின் தோற்றம் எவ்வாறு?
திருமுறை = திரு + முறை.
இறை + வழி. இறைமையை அடையும் வழி.
சமணர்கள் ஆகமங்களைக் கொண்டிருந்தனர்.
பௌத்தர்கள் நிகாயங்களைக் கொண்டிருந்தனர்.
தத்தம் சமய தத்துவங்களில் கூறப்படும் மெய்மைகளை உணர்வதற்கான நடைமுறை செயல்பாடுகளை, குறிப்பாக விளக்குவதே ஆகமம் அல்லது நிகாயம் ஆகும்.

ஆகமம் = ஆக் + அம் + அம். ஆகின்ற தன்மை. மெய்யாகும் தன்மை. பரம்பொருளாகும் தன்மை. இறைமையாகும் தன்மை.
நிகாயம் = நி + காயம் = இன்மை + தேகம். தேகமற்ற உணர்வு. பிரபஞ்ச மனநிலை.
சமணம் மற்றும் பௌத்தம், இந்திய நிலப்பரப்பில் உலகக் கண்ணோட்டத்தை மாற்றியமைத்தன.

சமணம்:

உலகம் தெய்வத்தால் படைக்கப்படவில்லை, அது துவக்கமும் முடிவுமின்றி தொடர்ந்து நிலவுகின்றது. சீவன், சீவனற்றது என இரண்டுமாய் ஆனது உலகம். சீவன், மறுபிறப்பு எடுப்பதற்கான காரணம், அதன் ஆன்மாவைச் சேரும் கருமமாகும். மனித வாழ்க்கையின் இலட்சியம், கருமத்திலிருந்து விடுதலை பெற்று சித்தர் உலகை அடைவதும், பிறப்பறுத்தலுமாகும்.

அதற்கான நடைமுறை;

1. எண்ணம், சொல், செயல் ஆகியவற்றில் அகிம்சை; அல்லது ஊறுவிளைக்காமை,
2. உண்மை,
3. களவாமை,
4. துறவிகளின் காமமின்மை மற்றும் குடும்பங்களில் தம்பதியர்களுக்கிடையிலான நேர்மை,
5. பற்றின்மை

என சமணம் மொழிகின்றது. துறவு வாழ்க்கையை முன்னிலைப்படுத்துகின்றது. ஆனால், பெண்களுக்குத் துறவையும், விடுதலையையும் மறுக்கின்றது.

பௌத்தம்:

பௌத்த தத்துவமும், உண்மைகளும், நடைமுறைச் செயல்பாடுகளும் கீழ்வருவன;

மூன்று பிரபஞ்ச உண்மைகள்:

1. பிரபஞ்சத்தில் எதுவும் அழிவதில்லை.
2. எல்லாம் மாறிக்கொண்டே உள்ளது.
3. காரணமின்றி விளைவில்லை என்பது விதி.

நான்கு உன்னத உண்மைகள்:

1. வாழ்வு துன்பமயமானது.
2. பற்றால் துன்பம் ஏற்படுகின்றது.
3. துன்பம் மற்றும் ஆசையிலிருந்து விடுதலை பெற முடியும்.
4. அதற்கு, எட்டுவகை வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டும்.

எட்டுவகை வழிகள்:

1. சரியான புரிதல். (நான்கு உன்னத உண்மைகள்)
2. சரியான சிந்தனை. (விருப்பு, வெறுப்பின்மை)
3. சரியான பேச்சு. (பொய், புறம் கூறாமை)
4. சரியான நடத்தை (கொல்லாமை, ஊறு செய்யாமை, களவாமை, காமமின்மை, மது அல்லது போதைப் பொருள் உட்கொள்ளாமை)
5. சரியான வாழ்வாதாரம். (இரத்தல், ஊறின்றி உழைத்தல்)
6. சரியான முயற்சி. (நல்ல சிந்தனையை வளர்த்தலும், தீய சிந்தனையை விலக்கலும்)
7. தியானம்.
8. சமாதி.

தியானமும் முடிவாய், சமாதியும்தான், புத்தமதத்தின் மிக உயர்ந்த இலக்குகள். பின்பு, 'யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக' எனும் நோக்கில், புத்தமதக் கொள்கைகளைப் பரப்புவதே, வாழ்வியலாய் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

புத்தர் ஞானம் பெற்ற பிறகு, முதலில், முன்னாளில் தன்னுடன் ஞானத்திற்காக முயன்ற நண்பர்களுக்கு அறிவுரை வழங்கினார். அவர்களும் ஏற்கனவே பக்குவம் பெற்றிருந்ததால் விரைவாக ஞானத்தை உணர்ந்தனர். அடுத்து, அவர் தன்னுடைய நீண்ட 45 வருடக்காலத்தில் சந்தித்த பல்லாயிரக் கணக்கான மக்களின் மனவளர்ச்சிக்கு ஏற்றவாறு தன்னுடைய ஆலோசனைகளைக் கதை, உபதேசம், விவாதம் போன்ற வெவ்வேறு வடிவங்களில் வழங்கினார் (ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மேற்கொண்ட உரையாடல் முறை, விவாதம் வகையைச் சார்ந்தது).

அவை பல்வேறு நிகாயங்களாய் உருப்பெற்றன. அவற்றில் மனம் எந்தெந்த வகைகளில் தன் இயக்கத்தை இழக்கின்றது, அப்பொழுது தோன்றும் உணர்வுநிலை என்ன, அதன் வெளிப்படு பண்புகள் என்ன என்று கூர்ந்து கவனமாகக் கவனிக்கப்பட்டுப் பதிவு செய்யப்பட்டுள்ளன. இறுதியாக, ஒற்றைச் சொல்லால், புன்முறுவலால், மௌனத்தால், பார்வையால், புத்தரால் ஞானத்தைப்

போதிக்க முடிந்தது. அதாவது, மனத்தின் இயக்கத்தை நிறுத்தி, தோன்றும் உணர்வைப் பற்றிக்கொண்டு, தொடர்ந்து நிலைக்க வைப்பது. இதை, ஒரு உளவியல் தந்திரமாக, மந்திரமாக வளர்த்தெடுத்தனர். ஜென் பௌத்தம் எனும் பெயரில் உலகின் பல்வேறு நாடுகளில் அது ஆர்வத்துடன் பயிற்றுவிக்கப்படுகின்றது.

நாலந்தா பல்கலைக்கழகம் தீக்கிரையானதும், பல்வேறு பௌத்தம் சார்புடைய அரசுகள் வீழ்ந்ததும், களப்பிரர் அழிந்ததும், பௌத்தர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கும், அவர்கள் வன்முறையில் ஈடுபடுவதைக் கொள்கை அளவில் தவிர்த்ததுதான் காரணமாகும். ஆனால், சீனம் சென்ற இளவல் தாமோ எனும் போதி தர்மன், தற்காப்புக்காக முன்னொரு காலத்தில் தான் போர்க்களத்தில் பயன்படுத்திய களரியைப் பயன்படுத்துவதில் தவறில்லை என்று முன்மொழிந்து செயல்படுத்தினான்.

களப்பிரர் காலம்:

களப்பிரர் வரலாறு சமீபகாலம் வரை இருண்டே இருந்தது. பூலாங்குறிச்சி கல்வெட்டுதான் அக்காலம் பொற்காலமாய் இருந்திருப்பதற்கான அடிப்படைகளை வெளிச்சம் போட்டுக் காண்பித்தது. அக்காலத்தில், சமண மற்றும் பௌத்த சமயங்கள் அரசியல் செல்வாக்குடன் வலிமையாய் இருந்தன என்றும், வளமும், வாணிபமும், செல்வமும் செழித்தன என்றும், தமிழில் ஐம்பெருங்காப்பியங்களும், பிற படைப்பாக்கங்களும் தோன்றின என்றும் அறிகின்றோம். இந்தக் கால கட்டத்தில், பொருள் வாணிபத்துடன், கருத்து பரிமாற்றங்களும் நிகழ்ந்துள்ளன. பௌத்தம் கடல் கடந்து, பர்மா (பர்மம்), தாய்லாந்து (தாய்நிலம்), கொரியா(கொரியம்), சீனம், சப்பான் முதலிய தெற்கு ஆசிய நாடுகளில் தழைத்தது.

அதே சமயம், வைதிக மதங்கள் (சைவம், வைணவம்), ஆதரவற்ற நிலையில், வலுவிழந்திருந்தன. பிரமதேய நிலங்களும், சதுர்வேதி மங்கலங்களும் பறிக்கப்பட்டு, உழைக்கும் மக்களுக்கு மறு பங்கீடு செய்யப்பட்டன. களப்பிரரின் இறுதிக் காலத்தில் அதிகாரம் குவிந்ததால், கேள்விகள் இன்றி ஆட்சி தொடர்ந்ததால், சமய, சமூக, அரசியல், பொருளாதார சீர்கேடுகளும், கலாச்சார பண்பாட்டு நெறிதவறுதல்களும் பெருகின. மாற்றம் அவசியமானது.

பக்திமார்க்கம்:

மாற்றம், பக்திமார்க்கமாய் வந்தது. புலம் பெயர்ந்த வைதிக சிந்தனையாளர்கள் தங்கள் தத்துவங்களை மீளாய்வு செய்தனர். சமண ஆகமங்களையும், பௌத்த நிகாயங்களையும் உள்வாங்கி புதிய வைதிக ஆகமங்களை உருவாக்கினர். ஆனால், அவற்றின் ஊற்றுக்கண்ணாய் வேதத்தையே குறித்தனர். வேதங்களில் உள்ள மிகப்பெரும் சிக்கல் என்னவென்றால், பிராமணர்கள் இறைவனின் உயர்ந்த தலையிலிருந்து தோன்றியதாயும்,

அரசப்பிரிவினர் மார்பிலிருந்து உதித்ததாயும், வணிகரும் வேளாளரும் தொடையிலிருந்து பிறந்ததாயும், அடியாட்களும் சேவகர்களும் இறைவனின் கால்களிலிருந்து தோன்றியதாகவும் கூறப்படுவதுதான். தகுதிகள் மாறினாலும், இதை நிலையான தன்மையுடையதாயும், பிறப்பின் அடிப்படையில் தொடரச்செய்வதாயும் இருத்துவதுதான் எல்லா சமூக, பொருளாதார, அரசியல், அதிகார சமமற்றத் தன்மைகளுக்கும், அடிமைத்தளைகளுக்கும், கொடுமைகளுக்கும் அடிப்படைகளாய் அமைகின்றன.

பிறக்கும்போது சூத்திரனாய்ப் பிறந்து, நல்ல ஒழுக்கத்தாலும் செயல்பாட்டாலும் இரண்டாம் பிறப்புள்ள பிராமணனாகின்றான் என்று கூறினாலும், நடைமுறையில் பிராமண சாதியில் பிறக்காத பிறருக்கு அத்தகைய வாய்ப்புகள் வழங்கப்பட்டதில்லை, வழங்கப்படுவதில்லை. இத்தகைய அடிப்படைகளின் மேல் கட்டுமானமாக எழுப்பப்பட்டதுதான் மனுநீதியும், ஆகமங்களும்.

பிராமணர்கள் வேள்விகளிலிருந்தும், மந்திரங்களிலிருந்தும் பிரிக்க முடியாத வண்ணம் வரலாற்றுமுறையில் இறுக்கமாகப் பிணிக்கப்பட்டுள்ளனர். வேள்விகளும், இறைமொழி என நம்பப்படுகின்ற சமஸ்கிருத மொழியிலான மந்திரங்களுமின்றி, தங்கள் வாழ்வுச் செயல்பாடுகளை அவர்களால் நினைத்தும் பார்க்க முடியாத வண்ணம், இளவயதிலிருந்தே, சிற்சில இன்றைய மதங்கள் போன்று, இக்கருத்துகள் ஆழ விதைத்து வளர்க்கப்பட்டுள்ளன. வாழ்க்கை வரலாற்றில் இடம்பெற்றுவிட்ட பதிவுகளை அவ்வளவு எளிதாக நீக்க முடிவதில்லை. விஞ்ஞானமும் தருக்கமும் இதன் எல்லைக்குள் நுழைய முடிவதில்லை. கேள்விக்குட்படுத்தாமல் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கை எதுவும் தானாகவே மாறிவிடுவதால், தன்னைப் பாதுகாத்துக் கொள்வதுபோல், எப்பாடு பட்டாயினும் அக்கொள்கையைக் காக்கின்றனர்.

பிராமணர்களின் மூதாதையர்களாகிய ஆரியர்களின் முதன்மையான வாழ்விடம் பனிகள் நிரம்பிய குளிர்பிரதேசமாக இருந்திருக்க வேண்டும். அவர்கள் உயிர்வாழ்வதற்கே தீ அவசியமாய் இருந்திருக்க வேண்டும். அதை உருவாக்குவதும், தொடர்ந்து காப்பதும், அவர்களின் கலைகளாகவே தொடர்ந்திருக்கும். அதுவே, அவர்களது போர்களில் முக்கிய பங்காற்றி இருக்கும். எனவேதான், தீயின் மற்றொரு வடிவமான வேள்வியையும், அதனோடு இணைக்கப்பட்ட மந்திரங்களையும், அவர்கள் மரபுரீதியாகவே விலக்க முடியாமல் இருக்கின்றனர் போலும். அவர்கள் தங்கள் வாழ்வில் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. பிறர்தம் வாழ்வின் ஒழுக்கங்களிலும், செயல்பாடுகளிலும் அவற்றைத் திணிக்கும்போதுதான், அவையின்றி வாழ்வு குலையும் எனும் மாய பிம்பத்தைத் தொடர்ந்து ஏற்படுத்தும் போதுதான், அவற்றை தங்களின் சொந்த வாழ்வாதாரமாக ஆக்கிக் கொள்ளும்போதுதான், அவற்றை

அடுத்து உயர்ந்த சிந்தனைக்கு வரவிடாமல் செய்யும்போதுதான் கவலை உண்டாகின்றது.

ஆகமங்கள் யாவும், பொதுவாக, கீழ்க்காணும் நான்கு பகுதிகளைக் கொண்டனவாய் அமைக்கப்பட்டுள்ளன:

1. சரியை: ச் + அர் + இயை. இயக்கம் அறுத்து இணை. உடலின் செயலின்மை.
2. கிரியை: க் + இர் + இயை. மெய்யை நிலைத்து இணை. உடலின் அசையாமை.
3. யோகம்: ய் + ஓக் + அம். நிலையாய் முழுமையான மெய்யாய் இருக்கும் தன்மை. இறைமையுடன் இணைவது.
4. ஞானம்: ஞான் + அம். நானாகும் / தானாகும் / சித்தமாகும் தன்மை. இறைமையாய் நிலைப்பது.

சமணத்தின் துறவு இன்றியும், பௌத்தத்தின் முயற்சி இன்றியும், இறைமையைப் பக்தி வழிபாடுகள் மூலம் அடையலாம் என்று வேதாந்த வைதிக சமயத்தினர், புராணங்களையும், பண்ணமைந்த பாடல்களையும் இயற்றி நாடெங்கும் பரப்பினர். அதுவரை, சிவனையும் (பதி), சீவனையும் (பசு) பற்றி மட்டுமே தத்துவங்கள் விளக்கின. ஆனால், இக்காலத்தில், "பாசம்" எனும் புதிய காரணியை உள்நுழைத்தனர். அந்த பாசத்திற்கு தாங்கள் கருவியாய் உதவுவதாய் கூறிக்கொண்டனர். அதுவரை, யோகம் மற்றும் தியானம் மூலம் ஞானம் பெறும் வழிகள் கூறப்பட்டன. இப்பொழுதோ, "பக்தி" எனும் "பாசத்"தின் மூலம், இறைவனை அடையலாம் என கற்பிக்கப்பட்டது. அது எளிமையான பாதை என நிலைநிறுத்தப்பட்டது. திருமந்திரம், பெரிய புராணம் உள்படத் திருமறைகளும், பிரபந்தங்களும், ஆகமங்களும் உருவாக்கப்பட்டன.

ஆகமங்கள் பலவாயினும், ஒன்பது முதன்மையான ஆகமங்களாகக் கூறப்படுபவை, கீழ்வருமாறு:

1. காரணம், 2. காமிகம், 3. வீரம், 4. சிந்தம், 5. வாதுளம், 6. வியாமளம், 7. காலோத்தரம், 8. சுப்ரம், 9. மகுடம்.

ஞானம் அடையும் வழி மற்றும் தன்மையைக் கொண்டு, ஆகமங்களுக்குப் பெயர் சூட்டியது போல் தோன்றுகின்றது. ஆகமங்களில் பக்திவழியின் விரிவாக்கமாகச் சடங்குகளும், பூசைகளும், சரியையாகவும் கிரியையாகவும் முன்மொழியப்பட்டன. யாகங்களும், பூசைகளுமே, மோட்சத்திற்கான வழிகளாக முன்மொழியப்பட்டன. எல்லாப் பிரச்சனைகளுக்கும் தீர்வாக அவையே முன்வைக்கப்பட்டன. யோகமும், ஞானமும் பெயரளவில் நின்றன. யோகம், ஞானம் கற்காத பழியை மக்கள் மீதே சாற்றினர். அவர்கள் பக்குவம் எய்தவில்லை, எனவே, உருவ வழிபாடுகளும் பூசைகளும் தேவை என்றனர். ஆட்சியும் அதிகாரமும் வைதிகருக்குச் சாதகமாக, பெரும்பான்மையான பௌத்தர்கள் இலங்கைநாடு அகன்றனர். சில சமணர்கள் கழுவேறி இருக்கலாம். பொது மக்கள் சைவ மற்றும் வைணவ மதங்களுக்கு மாறினர். பௌத்தக் கோயில்களின் ஆனந்த புத்தர், அனந்தசயன பெருமாளானார்.

சமணக் கோயில்களின் அருகக்கடவுள் முருகக்கடவுளானார். புதிய சைவ, வைணவ கோயில்களும் கட்டப்பட்டன.

களப்பிரர் பிடுங்கி உழைப்பாளர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட பிரமதேயங்களும், சதுர்வேதி மங்கலங்களும் மீட்கப்பட்டு, மீண்டும் பிராமணருக்கே வழங்கப்பட்டன. தங்கள் உற்பத்திக்கும், செயல்பாட்டிற்கும் வேண்டிய வகுப்பினரை சமூக படிநிலையில் இருத்தினர். நிலத்தை இழந்து எதிர்த்தவர்களோ, பள்ளர் பறையரென மொத்த சமுதாயத்திற்கும் அடிமைப்படுத்தப்பட்டனர். அதனால்தான், பிராமணரின் நேரடியான ஈடுபாடு இன்றியேகூட இடைச் சாதியினரின் வன்முறையால், சாதியம் மீண்டும் மீண்டும் நிலைநிறுத்தப்படுகின்றது. பள்ளர், பறையரும் ஆதிக்கம் செலுத்த, சமுதாயத்தில் பொருளாதார வலிமையற்று, சமூக ஒழுங்கு பிறழ்ந்தவர்களை, அருந்ததியர் எனும் பெயரிட்டு உருவாக்கியது. இவ்வாறு, சாதிய அமைப்பு ஆதிக்க மற்றும் இடைநிலை சாதிகளின் படிநிலைச் சுரண்டலுக்கு எளிமையாக வழிவகுத்தது.

ஒருவேளை, காட்சி மாறிய காலத்தில் யோகமும், ஞானமும், வைதிக மதச்செயல்பாடுகளிலும் உயரிய இடத்தை வகித்திருந்திருக்கலாம். ஆனால், பின்னாளிலும், இந்நாளிலும், சரியை மற்றும் கிரியை மட்டுமே நடைமுறைகளாக உள்ளன. யோகமும், ஞானமும் கொள்கையளவில் மட்டுமே நிலவுகின்றன, நடைமுறைப்படுத்தப் படுவதில்லை. ஏனென்றால், அதைப் போதிப்பவருக்கு, பொருள்வகையான எந்தப் பயனும் கிடைப்பதில்லை.

சித்தாந்தம்:

பரஞ்சித்தம், இறைமை சித்தமாய் உள்ளது. சித்தம்பரம், தனிமனித சித்தம் இறைமையாய் உள்ளது. சித்தமாதியந்தம், சித்தமே துவக்கமும் முடிவுமாய் இருக்கின்றது. சித்தத்தில் சித்தமாய் உறைதலே யோகமாகும், ஞானமாகும். சித்தர்களுக்குச் சரியையோ, கிரியையோ, யோகமோகூட கிடையாது. அவர்களின் நேரடிப்பாதை ஞானமே. சித்தர்கள், அமைப்பற்று இயங்குபவர்கள், இயக்கமாய் இயங்குபவர்கள். தனித்தன்மை இழப்பவர்கள். சமுதாய நலனுக்கென தமை வழங்குபவர்கள், தெய்வமாய், இறைமையாய் நிலைப்பவர்கள் அவர்கள்.

திருக்குறள்:

இத்தகைய பன்மைப் பண்புகளைக் கொண்ட காலகட்டத்தில்தான், திருக்குறள் தோன்றியது.

சமணத்தாலும், பௌத்தத்தாலும் துறவு வாழ்க்கை முன்னிலைப்படுத்தப்பட்டது. சோம்பித்திரிந்தவர்கள் மிகுந்தனர், போலித்துறவிகளாக அவர்கள் மாறினர். உழைப்பவர்கள் குறைந்தனர், உழைப்போர் பெரிதும் சுரண்டப்பட்டனர். யாகம், பூசை என வேறு வகைகளில் வைதிக மரபினரும் மக்களைச் சுரண்டினர்.

இவற்றையெல்லாம் கண்ட திருவள்ளுவர், சமநிலை கொண்டு நீடித்து இயங்கும் ஒரு சமுதாய அமைப்பிற்கான முழுமையான வாழ்வியல் தத்துவத்தை, கொள்கை வரையறையை, திட்ட அமைப்பை, நடைமுறை செயல்பாடுகளை, திருக்குறளாக வழங்கினார் போலும்.

தந்த அப் பொருளை வெற்று சட்டமாகவோ, சலிப்பூட்டும் அறிவுரையாகவோ இல்லாமல், உவமையணிகளுடனும், இசைமைப் பண்புடனும், தொல்காப்பியத்தின் இலக்கணங்களுக்கு இலக்கியச் சான்றாய் அமைவதுபோல், திருக்குறளைப் படைத்துள்ளார், மகான் திருவள்ளுவர்.

தத்துவம்:

இப்பிரபஞ்சம் எப்படி உருவானது? உயிர்கள் எவ்வாறு தோன்றின? மனிதர்களாகிய நாம் எப்படிச் சிறப்படைந்தோம்? நம்முடைய வாழ்வின் பயன் யாது? இத்தகைய அடிப்படையான கேள்விகளுக்கெல்லாம், முதல் குறள், பதில் இறுக்கின்றது. படைப்பிற்கு மகுடம் சூட்டினாற்போல், கடவுள் வாழ்த்தில் இருப்பின் மற்றும் வாழ்வின் தத்துவத்தையும் பயனையும் முன்வைக்கின்றார்.

அகர முதல எழுத்தெலா மாதி
பகவன் முதற்றே உலகு.

அகரம் எனப்படும் "அ" எனும் எழுத்தொலிதான் திரிந்து மற்ற எல்லா உயிர் எழுத்துகளாகவும், மெய்யுடன் கலந்த ஆய்த எழுத்தாகவும், ஆய்தம் ஒன்றிய எல்லா மெய்யெழுத்துகளாகவும், உயிர்மெய் எழுத்துகளாகவும், அசையாகவும், சொல்லாகவும், தொடர்மொழியாகவும், சொற்றொடராகவும், மொழியாயும் விளங்குகின்றது. அகரமே மொழியாகின்றது. அகரமின்றி மொழியில்லை. மொழியெல்லாம் அகரமே!

அகரத்தைப் போன்றே, பொருண்மையான விண்வெளியை அகமாய்க் கொண்ட இறைவன் (பகவன் = ப் + அகம் + அன்), நுண்துகள்களாகி, இணைந்து அணுவாகி, கலந்து பொருளாகி, பிணைந்து உயிராகி, நினைந்து மனிதராகி, இனிமையான உலகாகி இயங்குகின்றான். இறைமையே உலகாகின்றது. இறைமையின்றி உலகில்லை, இயற்கையில்லை. இருப்பன யாவும் இறைமையே! நாமெல்லாம் இறைமையே!

'நீரின்றி அமையாது உலகு' என்றதனால், உயிர் தோன்றுவதற்கும், நிலைப்பதற்கும், வாழ்வதற்கும், தண்ணீர் இன்றியமையாதது எனும் அறிவியல் யதார்த்தத்தை, மிகவும் இயல்பாக, "கடவுள் வாழ்த்து"க்கு அடுத்த "வான் சிறப்பு" எனும் அதிகாரத்தில் கூறியுள்ளது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். அரசன் அல்லது ஆட்சி அதிகாரம் என்பதன் முதன்மையான பணி நீர்மேலாண்மையை நிர்வகிப்பதுதான்.

நீத்தார்ப்பெருமையை முன்வைப்பதன் மூலம், அத்தகையோராய் முயல்வதற்கான தூண்டுதல் தரப்படுகின்றது. மனிதவாழ்வோட்டத்தின் அடிநாதமாய் விளங்க வேண்டியது அறம் ஒன்றுதான். அதுவே, அனைவரது வாழ்வின் இயங்குவிசையாய் இருக்க வேண்டும். அதுவே, சுயவழிகாட்டி. அறமற்ற எந்த ஒன்றையும் செய்ய முற்படும்போதே அறிவார்ந்த மனம் எச்சரிக்கை செய்கின்றது. அதன் குரலைச் செவிமடுத்தால், குற்றம் இழைக்காமல், மாற்று வழியில் முன்செல்லலாம். புறக்கணித்தால், பின்னாளில், வருந்த வேண்டி வரும்.

ஞானயோகம்:

கல்வியின் மூலம், இறைமையை அறிந்துணர்ந்து அதற்கு இணையாக நிலைப்பதே வாழ்வின் முடிவும், பயனுமாகும். அதற்கான மந்திரக்குறள்:

கற்க கசடற கற்பவை கற்றபின்
நிற்க அதற்கு தக.

தொல்காப்பியம், எழுத்து அதிகாரம், நூற்பா 367-ன் படி, லகார ஒற்றெழுத்தை இறுதியாகக் கொண்ட பெயர்ச்சொல், வேற்றுமைப் பொருளில், வல்லின எழுத்தை முதலாய்க் கொண்ட சொல்லுடன் புணரும்போது, அந்த "லகார" ஒற்றெழுத்து, "றகார" ஒற்றெழுத்தாய் திரியும். அல்வழியில், "தகரமும் றகாரமாய்" திரியும்.

எனவே,
"கற்க" என்பதன் திரியாத வடிவம், "கல் + க". கல்போன்று மெய்.
"கசடற" = கசடு + அற. தேங்கி நின்று, அடைப்பை உருவாக்குவது கசடு. எழுந்த எண்ணமே மீண்டும் மீண்டும் எழுவது. ஓய்வில்லாத எண்ணம்.
"கற்பவை" என்பதன் திரியாத வடிவம், "கல் + ப + வை". கல்போன்று மனம்.
"கற்ற" என்பதன் திரியாத வடிவம், "கல் + த". கல்லான தேகம்.
"நிற்க" என்பதன் திரியாத வடிவம், "நில் + க". நிலைக்கும் நுண்பொருண்மை.
அதற்கு = இறைமைக்கு.
தக = சமமாய்.

மெய்யெனும் உடலானது கல்போன்று அசையாமையில் நிலைக்கையில், நீள்கின்ற எண்ணவோட்டம் எனும் கசடு அறுகின்றது. எண்ணமற்ற மனம், அசையாமையில் நிலைக்கையில், தேகம் கல்லாய் சமையும். பின்பும், அசையாமையில் தொடர்ந்து நிலைக்க, இறைமையின் நுண்பொருண்மைத் தன்மையாகும். அதாவது, உடல்வினை அடங்க, ஐம்புலன் அடங்க, மனம் அடங்கும். மனமடங்க உயிர்மை விளங்கும். உயிர்மையுடன் எண்ணமற்ற மனம் ஒன்ற, இறைமை துலங்கும். இறைமையுடன் அழுந்த, இருத்தல், ஆலாய் கிளைத்து கல்லாய் நிலைக்கும்.

இவ்வாறு இறைமையுடன் இணங்கியவரே, தான், தனது, புறம் என்பனவற்றை நீத்தவர். அவர், இறைமையைப்போல் செயற்கரிய செய்வார். இந்த யோக, ஞான நிலையை இளமையிலேயே எய்துதல் பொதுவாக இயலாத காரியம். ஏனெனில், வாழ்வின் ஓட்டத்தில் பல ஆசைகளுக்கான தூண்டுதல்கள் நிகழும். அவற்றை இயல்பாக ஒதுக்கிவிட்டு முன்செல்லுதல் கடினமான செயல். இளமையில், அது தேவையும் இல்லை.

இல்லறம்:

எனவே, துறவறத்தைக் காட்டிலும், முதன்மையான அறமாக இல்லறத்தைத் திருவள்ளுவர் முன்மொழிந்ததுதான் மிகவும் புரட்சிகரமான கருத்தாகும். இது முதலில், மக்களைச் சமுதாய வெளிக்குள்ளேயே இருத்தியது. மனித உழைப்பையும் சமூக வளத்தையும் உறுதிசெய்தது. சமூக அங்கத்தினர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டிய குணங்களையும், அவர்கள் ஆற்ற வேண்டிய சமூகக் கடமைகளையும், மிகவும் விஞ்ஞான முறையில், சுயமுரண்பாடற்ற வகையில் தந்துள்ளார், வள்ளுவப் பெருந்தகை.

துறவறத்தால் சமூகத்திற்கு விளையும் பயன் என்ன? தனிமனிதர்கள் ஞானம் அடைவதாலோ, முக்தியடைவதாலோ, பொது மக்களுக்கு என்ன இலாபம்? பிறரின் உழைப்பைப் பிச்சையாகவும் வாங்குவது சரியா? துறவு மேற்கொண்டோர், பற்று நீத்தாராகி சமுதாயத்திற்குக் கல்வி, உடல்நலம், மனநலம், ஒழுக்கம், படைப்பாக்கம், ஆலோசனை போன்றவற்றை வழங்கினால்தான் தாங்கள் சமுதாயத்திற்குப் பட்ட கடனை திருப்பி செலுத்துபவராவர். இல்லையெனில், சமுதாயத்திற்கு பாரமாக, சுமையாகவே இருப்பர். இதை அறிந்த ஜென் புத்த மதத்தினர், ஜப்பானில், இயன்றவரை தங்கள் உழைப்பைக் கொண்டே உயிர் வாழ்கின்றனர். ஒருசில சமணரும், பௌத்தர்களும் மக்களுக்கு வேண்டிய கல்வி, ஆலோசனை, படைப்பாக்கம் போன்றவற்றை அளித்துள்ளனர். குறிப்பாக, சித்தர்கள், மருத்துவத்தை தங்கள் கடமையாகவே கொண்டிருந்தனர் போலும்.

மேலும், ஒரு சிலர் மட்டும் ஞானம் பெறுவது என்பது பாரபட்சமாகும். எனவே, மக்கள் அனைவரும் பொதுவாக உழைத்தும், உழைக்க முடியாதவருக்கு (முதியவர், சிறுவர், நோயுண்டோர், விருந்தினர் போன்றோர்க்கு) உதவியும், தாம் உழைக்க முடியாதபோது பிறரிடம் இருந்து உதவி பெற்றும் வாழ்வது, வாழ்வின் ஓட்டத்தில் தவிர்க்க முடியாததாகும்.

இயக்கம் அறுதல் எனும் சரியையும், உடல் நிலைத்தல் எனும் கிரியையும், இல்லறவாழ்வின் வெவ்வேறு காலகட்டங்களில் நிகழ்கின்றன. தான் உழைத்து, உழைக்க முடியாதவருக்கு உதவுவது என்பதே, தன்னை இறைமைக்கு உயர்த்திக் கொள்வதாகும். இனிமையாகப் பேசுவது பிறருக்கு மட்டுமல்லாது, தனக்கும் இன்பம் தரும், பெருமிதம் வரும். தனக்கு உதவியவர்களுக்குத் தேவையுள்ளபோது உதவுவது மனநிறைவை ஏற்படுத்தும். நடுவுநிலைமையுடன்

இருத்தல், மனத்தை அமைதியாக்கும், உறுதியாக்கும். அம்மனம் அசையாது, மெய்யும் நிலைபெறும்.

கற்புடைய பெண்ணை மனைவியாகக் கொண்டாலே, கணவனின் மனம் சஞ்சலம் கொள்ளாது. மெய்யும் அமைதிப்படும். பிள்ளைப்பெறுதல் என்பதே என்பதே மனம் நிறைவாகும் நிகழ்வு. அதன் மெல்லிய உணர்வு அசையாமைக்கு வழிகோலும். தன்குழந்தை சிதறச்செய்யும் எளிய கூழை வாயால் வழித்து உண்ணுதலும், கண்களைக் கிறங்க வைக்கும், உலகையே மறக்கவைக்கும் அமிழ்தமாகும். பிள்ளைகளின் உடலைத் தீண்டுதலும், அவர்களின் பேச்சைக் கேட்டலும்கூட, மெல்ல உணர்ந்தால், இன்பம் தருவதாகும். தன்னை எவர் மிஞ்சினும், மனதில் ஆற்றாமை தோன்றும், ஆனால், தம்மக்கள் தம்மைவிட உயர்கின்றார்கள் என்றால் பெருமை உணர்வே தோன்றுகின்றது. இயல்பான நட்பும் அன்பும் உடைய கணவனும் மனைவியும், ஒருவருக்கு ஒருவர் அமைதிதரும் உயிர்நிலைபெறச் செய்யும் பெருமை உணர்வை அளிப்பர். சமூகத்தில் தொடர்ந்து இருந்து, உழைத்து, பகிர்ந்து, கலந்து வாழ்வதற்கான அவசியத்தை உருவாக்குவது, மனைவியும் பிள்ளைகளுமாவர்.

சமூக வாழ்வின் செயல்பாடுகளில், அடக்கத்தை மேற்கொள்ளச் சொல்கிறார் திருவள்ளுவர். சமூகத்தில், சொல், செயல்களில் காட்டும் அடக்கம், பின்னாளில், யோகம் செய்யும் நாளில், புலன்கள் ஐந்தையும் எளிமையாக அடக்க உதவும். ஒழுக்கம் என்பது சுயகட்டுப்பாட்டால் விளைவது. அது உலகத்தோடு சேர்ந்து வாழ்வதற்கு உதவுவதோடு அன்றி, பிற்கால யோகத்திற்கும், ஞானத்திற்கும் உதவும். பிறன் மனைவியை நோக்காமல் இருத்தலை, பேராண்மை என்கிறார் வள்ளுவர். பொறுமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினை அச்சம் போன்ற பிற மனக்கட்டுப்பாடுகளையும், ஒப்புரவு, ஈகை போன்ற குணங்களையும் உள்ளவர், ஐம்புலன்களை எளிதாக அடக்கி, மனத்தை இருத்தி, அசையாமையில் இறைமையுடன் ஒன்றுவர். வாழ்வு என்பது சிறுசிறு இன்ப நிகழ்வுகளைக் கொண்டது. அவை, மனதையும், உடலையும் அசையாமையில் நிறுத்தவல்லது. மென்மையான அவ்வுணர்வுகளில் தொடர்ந்து நிலைப்பதுகூட மனவிடுதலைக்கு வழிவகுக்கும். பேரின்பம் அளிக்கும்.

துறவறம்:

துறவற வாழ்விற்குப் பல வழிகாட்டி நூல்கள் ஏற்கனவே இருந்தும் துறவறவியலையும் திருக்குறளில் வைக்கின்றார் வள்ளுவர். அதில், சமூகத்துடன் வினையாற்றுகையில், துறவிகள் மேற்கொள்ள வேண்டிய பண்புகளையும் செயல்பாடுகளையும், ஒழுக்கங்களையும் நிரல்படுத்துகின்றார். அனைத்து உயிர்களுக்கும் காட்டும் அன்பாம் அருளுடைமை, கொல்லாமையுடன் புலால் மறுத்தல், இயல்பான ஆர்வத்துடனான தவம், பிறன் அறியாவிட்டாலும் ஒழுக்கம் தவறாமை, பிறர் பொருளைப் பறிக்கும் மனமின்மையெனும் கள்ளாமை,

எவ்வுயிர்க்கும் தீமையில்லாத வாய்மை, எவரையும் வெகுளாமை, இனிமையற்றவை செய்யாமை, வாழ்வின் நிலையாமையை அறிதல், துறவின் இன்பம் அறிதல், மெய்யுணர்தலின் பயன், மெய்யுணர்ந்தப் பின்னும் தோன்றும் ஆசைகளை அறுத்தலே துறவு முழுமையாவதற்கான வழி ஆகியன, துறவு மேற்கொள்பவருக்கு உற்ற துணையாகும். ஜென் தத்துவ வாழ்வில், மேற்கூறிய மனநிலைகளில் ஒன்றுவதுகூட ஞானத்திற்கு வழிகாட்டிவிடும். உண்மையில், முழுமையாகப் பார்த்தால், அசையாமை எனும் நிலை, ஞானமாளிகையின் வாசலுக்கு அழைத்துச் சென்றுவிடும். உடல், புலன், மனம், சுவாசம் ஆகியவற்றின் அசையாமை, ஞானத்தின் கருவறைக்குள் நிலைக்கச் செய்துவிடும். பிறப்பின் பயனை, இவ்வுலகிலேயே தந்துவிடும். மனைவியும், மக்களும், கல்வியும், செல்வமும், தவமும், இன்பம் துய்த்தலும் ஊழின் பயனென்கிறார், வள்ளுவர். பிறப்பறுத்தல் என்பது தவத்தால், யோகத்தால், ஞானத்தால் ஊழ் அழிதல். இயலாவிட்டால், நல்வினைகள் ஆற்றி, வரும் பிறப்பில், நற்பயன்களைப் பெற அறிவுறுத்துகிறார், எம்பெருமான்.

அரசியல் மற்றும் அங்கவியல்:

பொருட்பாலின் அரசியல் மற்றும் அங்கவியலில் கூறும் பண்புகள், அரசனுக்கும் அமைச்சருக்கும் மட்டுமல்ல, ஒவ்வொரு குடிக்கும் தேவையானது. அரசனுக்கும் அமைச்சருக்குமோ அவை மிகவும் இன்றியமையாதன. தானாக அறியும் கல்வி, பிறர் மூலம் பெறும் கேள்வி, தன்னியல்பான அறிவுடைமை, சிறுமையின்மை, அறிஞர் மற்றும் ஞானியரின் நட்பு, சிந்தித்துச் செயல்படல், சுற்றத்தை அரவணைத்தல், கடமை மறவாமை, நீதி வழுவாமை, இன்றியமையாதது அறிந்த கண்ணோட்டம், பிறர்மூலம் அறியும் ஒற்று, சோர்விலா ஊக்கம், தயக்கமில்லா முயற்சி, சிக்கலுக்கான தீர்வைச் சிந்தித்தல் போன்றவை அரசனுக்கு இன்றியமையாதவை.

சிக்கலைப் பலவாறு சிந்தித்து தீர்வுகூறும் சொல்வன்மை, தன்னலமற்ற செயல்பாடு, செயல்பாட்டில் உறுதி, செயலை முடித்தல், செய்தி பரிமாற்றும் தூது, மன்னரின் மனமறிந்து செயல்படல், மன்னர் வெளிப்படையாய் கூறாததையும் குறிப்பால் அறிந்து செயல்படல், சூழ்ந்திருப்பவரைக் கணக்கில் கொண்டு பேசுதல், தவறு நேரவிருக்கும் சமயத்தில் துணிந்து பேசுதல், தேர்ந்த காக்கும் நட்பைப் பேணுதல், ஆழ்ந்து அறிதல், மனச்செயல்பாடின்மையை உணர்தல், பகைகளை அறிதல், பெரியாரைப் பகைக்காமை, மனைவியின் சொல்லுக்கு அடங்காமை, அடக்கமற்ற பெண்களுடன் உறவு கொள்ளாமை, போதைப் பொருட்கள் உண்ணாமை, சூதாடாமை போன்ற குணங்கள் அமைச்சரின் செயல்பாட்டிற்கு இன்றியமையாதவை.

அரசனும், அமைச்சனும் சிந்தித்துச் செயலாற்றுவதும்கூட, அவர்களுடைய மனவிடுதலைக்கு வழிவகுக்கும். மனித உணர்வுகளையும்,

சிந்தனைகளையும் கட்டுப்பாட்டுடன் ஒழுங்குபடுத்துவதன் மூலம், வேண்டியபொழுது, வேண்டியவாறு அவற்றை வழிநடத்த முடியும். அது, யோக மற்றும் ஞான முயற்சிக்குப் பெரிதும் உதவும்.

ஒழிபியல்:

குடிப்பெருமை, குன்றாத மானம், தகாதன செய்யாத நாணம், சான்றாகும் ஆளுமை, குடும்ப முன்னேற்றத்திற்கான ஓய்வில்லா உழைப்பு, உழைப்பில் உயர்ந்த உழவு, இனிமையற்ற வறுமையிலும் இரவாமை, கயமையின்மை ஆகிய குணங்கள், குடிமக்கள் யாவர்க்கும், மனம் சஞ்சலப்படாமல் இருக்க உதவும்.

காமம்:

காமம் (க் + ஆம் + அம் = மெய்யாகும் தன்மை)

காமத்துப் பாலை, பெண்ணை தெய்வத்திற்கு இணையாக வைத்துத் துவக்குகிறார் திருவள்ளுவர். மிகவும் நுண்மையான மெல்லுணர்வுகளை, குறிப்பால் உள்ளுணரச் செய்கின்றார். ஐம்புலன்களும் மகிழும் புணர்ச்சியை உணரச்செய்து, அவற்றின் சுகத்திலேயே ஆழ்ந்து மனத்தை இழக்கும் வித்தையைக் காட்டுகின்றார். உவமைகளின் அழகியலில் மெய்மறக்கும் தந்திரம் உபதேசிக்கிறார். அசைவில்லாத கூடலில், ஆழ்ந்த மெய்யுணர்வில், இறைமையை உணரலாம் என்கிறார். நெற்றியில் இடும் முத்தம், இறைமையை ஈடுசெய்யும் என்பார். இவ்வாறு சமூக வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் பெறும் பல்வேறு சுகங்களை, இயந்திரகதியில் அன்றி, உணர்வுப்பூர்வமாக அனுபவித்தும், யாரும் அளவுக்கு அதிகமாகப் பாதிக்காத வகையில், அறவழியில் பொருள் ஈட்டியும், பாரபட்சமின்றி நேர்மையான ஆட்சி அதிகாரத்தைச் செலுத்தியும், களவு மற்றும் கற்பியல் வாழ்வில், மென்மையான காம தந்திர நுணுக்கங்களை அறிந்துணர்ந்தும், கல்வியின் யோக, ஞான பாதையில் சென்றும், இறைமையுடன் ஒன்றி, நிலைபெற்று, பிறப்பறுத்து, இறவாமையை எய்தும் வழியைக் காட்டுகின்றார், வள்ளுவப் பெருந்தகை.

எனவே, திருக்குறளை, திருமுறை என்றும், ஆகமம் என்றும் அழைப்பது, மிகவும் பொருத்தமாய் இருப்பதைக் காணலாம். மேலும், அதன் சிறப்பு என்னவென்றால், இணக்கமான, அன்பான, இன்பமான தனிமனித, குடும்ப, சமூக, அரசியல், தேச வாழ்வியலின் ஊடே, ஞானயோகத்தை முயன்று, இறைமையுடன் ஒன்றி, இறைமையாய் நிலைப்பதுதான்.

உதவிய உரைகளும் நூல்களும்:

1. பூலாங்குறிச்சி கல்வெட்டுகள் பற்றிய திருமதி அ. பத்மாவதியின் உரை
2. சொல்லாக்கியம்
3. திருக்குறள் - ஒரு மறுவாசிப்பு

# 17. குறள் கூறும் பகுத்தறிவின் இலக்கணம்

## – முனைவர் தேமொழி

அறிவுடைமை (அதிகாரம் 43) என்றே 10 குறள்கள் கொண்ட ஒரு அதிகாரத்தை அறிவுக்காக ஒதுக்கியுள்ளார் வள்ளுவர். மேலும் அறி, அறிய, அறிவு, அறிக, அறியும், அறிந்து, அறிந்த, அறிவது, அறியா, அறியாமை, அறியார், அறிந்தார், அறிவார், அறிவான், அறியான், அறியேன், அறிவுடையார், அறிவிலார், அறிவிலான், அறிவினவர் போன்ற அறிவு குறித்த 50க்கும் மேற்பட்ட சொற்களை (54 சொற்கள்), 100க்கும் மேற்பட்ட முறை (163 முறை) அறிவின் இன்றியமையாமை, அது இல்லாவிட்டால் ஏற்படும் துன்பம் ஆகியவற்றைக் குறித்து அறிவுறுத்தும் நோக்கில் வள்ளுவர் கையாண்டுள்ளார். இவற்றில் அறிந்து (39 முறை) மற்றும் அறிவு (22 முறை) ஆகிய இரு சொற்களும் அதிக முறை அதிக அளவில் குறள்களில் இடம்பெற்றுள்ளன. அறிவின் தேவை குறித்து வள்ளுவர் அறிவுடைமை அதிகாரம் மட்டுமின்றி மேலும் பல அதிகாரங்களிலும் தேவைக்கேற்ப குறிப்பிடுகிறார்.

அறிவுடைமை என்பதன் விளக்கம்:
அறிவுடைமை அதிகாரம் அறிவு என்பதைக் கீழ் வருமாறு விளக்குகிறது;
பகைவரிடம் இருந்து நம்மைக் காக்கும் அரண் அறிவு (421),
மனதை அலையவிடாமல் தீமையை விலக்கி நன்மையைத் தெரிந்தெடுக்க உதவுவது அறிவு (422),
சான்றோர் அறிவுரைப்படி இன்பம் துன்பம் ஆகியவற்றை ஒரே போன்று கருதும் மனப்பான்மையைக் கடைப்பிடிக்க அறிவுறுத்துவது அறிவு (425),
அவர்கள் வழிகாட்டியபடி உலகவழக்கை ஒட்டி நடக்கச் செய்வது அறிவு (426),
தனது செயலினால் விளையக் கூடியவற்றை அறிந்திருக்க உதவுவது அறிவு (427),
அஞ்ச வேண்டியவற்றுக்கு அஞ்சி நடக்கச் செய்வது அறிவு (428),
எதிர்கொள்ளக்கூடிய துன்பத்திலிருந்து தடுத்துக் கொள்ளும் வகையை அறியச் செய்வது அறிவு (429),
இவ்வாறாக அறியும் திறன் பெற்றவருக்கு அறிவே எல்லா செல்வத்துக்கும் இணையாக அமையும் (430) என்று அறிவின் சிறப்பை குறள்கள் வழியே கோடிட்டுக் காட்டுகிறார் வள்ளுவர்.

மேலும், அந்த அறிவை எவ்வாறு அடைவது என்பதையும் அறிவுடைமை அதிகாரத்தின் இரு குறள்கள் மூலமும், மெய்யுணர்தல் அதிகாரத்தின் குறள் ஒன்றின் மூலமும் விளக்குகிறார். வள்ளுவர் தரும் இந்த விளக்கங்கள் பகுத்தறிவு பாசறை கூறி வந்துள்ள கருத்துகளாக அமைந்துள்ளன.

குறள் கூறும் பகுத்தறிவின் இலக்கணம் :

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்ப தறிவு. (அறிவுடைமை: 423)

எந்தவொரு பொருள் குறித்து யார் என்னதான் சொன்னாலும், அதை அப்படியே நம்பி ஏற்றுக் கொண்டு விடாமல் அது உண்மைதானா என ஆராய்ந்து தெளிவதுதான் அறிவுடைமையாகும் என்பது இக்குறளின் பொருள்.

தான் சொல்வதையும் அவ்வாறே ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று அறிவுரை கூறிய சிறந்த வழிகாட்டி புத்தர். தங்கத்தின் மாற்றை உரசிப் பார்த்து ஆராய்ந்து அறிவது போல அவர் அறிவுரைகளையும் மதிப்பிட்டு, தக்க அறிவுரையாக இருந்தால் மட்டுமே ஏற்கச் சொன்னார். மற்றவர் அவர் மேல் கொண்ட அன்பினாலோ அல்லது மதிப்பினாலோ அவர் கூறியவற்றை எல்லாம் பின்பற்றுவதில் அவருக்கு உடன்பாடு இருந்திருக்கவில்லை. அவரது இந்தக் கருத்தினால் கவரப்பட்ட இக்கால மனிதர்களுள் ஒருவர், சமூக சீர்திருத்தவாதி ஈ. வெ. ரா. பெரியார். அவரும் தனது சொற்களைப் பகுத்தறிந்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றுதான் வலியுறுத்தினார். 'பகுத்தறிவால் ஆராய்ந்து பார்' என்று அறிவுரை கூறிய மற்றொருவர் கிரேக்க அறிஞர் சாக்ரடீஸ். 'ஏன்' என்று கேள்வி கேட்கத் துணிய வேண்டும் என்று கூறி எதையும் கேள்வி கேட்காமல் ஏற்கும் மக்களிடையே விழிப்புணர்வை ஊட்டினார். மெய்ப்பொருள் காண்பதுதான் அறிவு எனப் பகுத்தறிவு வழிகாட்டிய இக்குறள் சென்ற 19ஆம் நூற்றாண்டின் புகழ்பெற்ற மேலை நாட்டுப் பகுத்தறிவாளர் ராபர்ட் இங்கர்சால் அவர்களையும் கவர்ந்த குறளும் ஆகும்.

உண்மைப் பொருளைக் காண்பதுதான் அறிவுடைமை என வள்ளுவர் அறிவுறுத்துவதால், வள்ளுவரின் கூற்றையும் மதிப்பிட்டே நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதையும் இதனால் அறிகிறோம். பகுத்தறிவு கருத்து கூறும் அறிவுடைமை அதிகாரத்தின் மற்றொரு குறள்;

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. (அறிவுடைமை: 424)

நாம் சொல்ல விரும்புவதைக் கேட்பவர் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாகச் சொல்லி, பிறர் சொல்லிய கருத்தில் அவர் நேரடியாகச் சொல்லாதவற்றின் உட்பொருளையும் (சொன்னதும் சொல்லாமல் விட்டதுமான) நுட்பமான கருத்துகளையும் ஆராய்ந்து உணர்வது அறிவுடைமையாகும் என்று கூறுகிறது இக்குறள். ஆகவே, ஒன்றைக் கூறியவரின் நோக்கத்தையும் அவரது சொற்களின் வழியாக எடை போடுவதும் தேவை.

இவ்வாறான ஒரு கருத்தை ஒருவர் ஏன் நம்மிடம் சொல்கிறார், அவ்வாறு அவர் சொல்ல வேண்டிய தேவை என்ன? இதனால் என்ன பயன்? யாருக்குப் பயன்? என்பது போன்ற கேள்விகள் எல்லாம் எழுப்பி நுட்பமாக ஆராயத் தொடங்கினால் பல மூடநம்பிக்கைகளையும், அவற்றைக் கூறுபவர்களையும் காணாமல் போக்கிவிடலாம். எடுத்துக் காட்டாக; இக்காலத்தில் கேட்க வேண்டிய கேள்வி, யாரோ சொன்னார்கள் என்று விளக்கேற்றி பட்டாசு வெடித்து "கோ கொரோனா, கோ கொரோனா கோ" என்று கைதட்டிக் கூவிக் கொண்டிருந்தால் கொரோனா வைரஸ் மறைந்துவிடுமா?

என்பதாக இருக்க வேண்டும். குளத்தில் போட்ட ஒரு உடைந்த சிலையை வெளியில் எடுத்துக்கொண்டு வந்து அலங்காரம் செய்து காட்சிப் படுத்தினால், நாம் அங்குப் போய் உண்டியலில் பணம் போட்டுவிட்டு வந்தோமே, அது இப்பொழுது போர்க்கால நடவடிக்கையில் கொரோனா பாதிப்பிற்கு நிதி திரட்டப்படுகையில் எந்த வகையிலாவது பரிதவிக்கும் மக்களுக்குப் பயன்படுகிறதா? அதனால் பயன் பெற்றவர் யார் யார்? என்று கேள்வி கேட்பதை வழக்கமாக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்வதுதான் எந்த ஒரு நிகழ்வின் பின்னணியிலும் மறைந்துள்ள நோக்கத்தை நுட்பமாகப் புரிந்து கொண்டு அறிவுடையவராக ஒருவரை மாற்றும். இக்குறளுக்குப் பொருள் விளக்கம் தர முனைந்த மணக்குடவர்; பிறர் சொல்லுஞ் சொற்களின் நுண்ணியவாகிய பொருள்களை அவர் சொல்லாமல் தானே காண்பது என்று விளக்கமளிக்கிறார்.

பகுத்தறிவு கருத்து கூறும் மேலும் ஒரு குறள் மெய்யுணர்தல் அதிகாரத்தில் இடம் பெறுகிறது;

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (மெய்யுணர்தல்: 355)

காட்சிப்படுத்தப்படும் ஒரு தோற்றம் கண்டு மயங்காமல், ஒரு பொருளின் உண்மையான இயல்பை அறிவதே அறிவுடைமையாகும். மாயையில் விழாமல் இருப்பது என இதற்குப் பொருள் கொள்ளலாம். இங்கு அறிவியல் நோக்கில் ஆராய்வதே உண்மையை வெளிப்படுத்தும். பிள்ளையார் சிலை பால் குடிப்பது, இரத்தக் கண்ணீர் விடும் மேரி மாதாவின் சிலை, வெறும் கையில் விபூதி வரவழைப்பது என ஆன்மீகத்தின் பெயரில் மக்களை அடிமுட்டாளாக்கும் நோக்கில் செப்பிடுவித்தை மற்றும் கண்கட்டு வித்தைகள் நிகழ்த்தி மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி ஏமாற்றும் உலகம் இது. இக்காலத்தில் நாசா விண்கோள் வெளிப்படுத்திய அதிசயம் என்று சமூக வலைத்தள உதவியுடன் அறிவியல் துணை கொண்டே ஏமாற்றும் செய்திகளுக்கும் குறைவில்லை. எப்பொருள் எத்தன்மை கொண்டதாகத் தோன்றினாலும் அப்பொருளின் மெய்யான இயல்பைத் தெளிவாகக் காண்பதே மெய்யுணர்தல் என்று கூறும் குறள் கருத்தே எதிலும் உண்மைத்தன்மையை அறிய விரும்புவோருக்கு நினைவில் நிற்க வேண்டும்.

அறிவுடைமை அதிகாரத்தில் மட்டுமின்றி மெய்யுணர்தல் (குறள் 355, 356), அருளுடைமை (குறள் 249), இகல் (குறள் 857) ஆகிய குறட்பாக்களிலும் வள்ளுவர் "மெய்ப்பொருள் அறிவது" குறித்துக் குறிப்பிடுகிறார். மேன்மை தரும் உண்மைப் பொருளை அறிய இயலாதவர்கள் அறிவு மங்கியவர்கள் என வள்ளுவர் உண்மை என்னவென்று அறிய இயலாதவரை விவரிக்கிறார் (857). வாழ்வு குறித்த மெய்யியல் ஞானம் பெறுவதையும் மெய்ப்பொருள் என்றுதான் குறிப்பிடுகிறார் வள்ளுவர் (குறள்கள் 249 மற்றும் 356), இதே கருத்தை 'செம்பொருள்' அறிவது என்று மற்றொரு குறளிலும் குறிப்பிடுகிறார் (358).

அறிவைப் பெறுவதற்குக் கல்வி தேவை, தோண்டத் தோண்ட மணற்கேணியில் நீர் ஊருவது போல, கற்கக் கற்க அறியவேண்டியவற்றை

அறிந்து கொள்ளும் அறிவும் பெருகும் (396) என்று கூறும் வள்ளுவர், அறிவுடையார் செயல் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும் கூறத் தவறவில்லை. அறியவேண்டியவற்றை அறிந்து, விலக்க வேண்டியவற்றை விலக்குவது அறிவார்ந்த செயல், இவ்வாறு செய்யாவிடில் அந்த அறிவால் பயனில்லை (175). அற்ப எண்ணம் கொண்ட மக்களுடன் உறவு கொள்ளாமல் (சிற்றினம் சேராமை) அவர்களின் கெடுமதியைத் தானும் தனது இயல்பாக்கிக் கொள்ளாமல் இருப்பதும் அறிவுடைமைதான். பழகும் கூட்டத்தின் அறிவே ஒருவரிடம் தாக்கம் செலுத்தும் என்பதால் குணமற்றவர் தொடர்பை விட்டொழிப்பது இன்றியமையாதது (சிற்றினம் சேராமை குறள்கள்:452, 454) என அறிவுடையோராக இருப்பதற்கு வள்ளுவர் அறிவுரைகள் பல கூறியுள்ளார்.


உதவிய தளங்கள்:

[1] தமிழ் இலக்கியத் தொடரடைவு, திருக்குறள் - தொடரடைவு, முனைவர்.ப.பாண்டியராஜா.
http://tamilconcordance.in/TABLE-kuraL.html

[2] திருக்குறள் கலைஞர் உரை, கலைஞர் மு. கருணாநிதி
https://www.projectmadurai.org/pm_etexts/utf8/pmuni0612.html

[3] குறள் திறன்
http://kuralthiran.com/Home.aspx


நன்றி - சிறகு.


தொடர்பு: முனைவர் தேமொழி (jsthemozhi@gmail.com)

# 18. நெடுந்தீவின் செவி வழி வரலாறு

—— வ.ஐ.செ.ஜெயபாலன்

நெடுந்தீவுக்கு முதன் முதலில் தென்னிந்தியக் குடியேறிகள் வந்தபோது (எல்லா குடியேற்றங்களும் தனிநாயக முதலி வரவு எனப் பொதுப்பட அழைக்கப்படுகிறது), நெடுந்தீவில் வாழ்ந்த ஆதிக்குடிகளின் இரண்டு தலைவர்களுக்கும் "தனிநாயக முதலிக்கும்" பேச்சு வார்த்தை நடந்ததுபற்றி சொன்னார்கள். இக்கதை தெரிந்த ஒருசிலர் இப்போதும் இருக்க வாய்ப்புள்ளது. ஒரு தலைவன் பெயர் 'கிடந்தான்' என ஞாபகம். முதியவர்களை யாராவது இதுபற்றி தகவல் கேட்டு எழுத வேண்டுகிறேன்.

கதைகள் பலவற்றைத் தொகுத்துப் பார்க்கும்போது நெடுந்தீவு (Delft Island) பௌத்தர்களின் இரகசிய பின்தளமாக இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. முக்குவர்கள் (வெடியரசன் முக்குவ தலைவர்களின் பொதுப்பெயர் ) அரசபகையால் பாதிக்கப் பட்டவர்களை (பௌத்தர்களை என நினைக்கிறேன்) படகுகள் மூலமாக நெடுந்தீவுக்கு கொண்டுவர, நெடுந்தீவு மூலமாக இலங்கைக்கு வந்திருக்கிறார்கள். முக்குவருக்கும் மீகாமன் படைகளுக்கும் (கரையார் தலைவர்களின் பொதுப்பெயர்) மோதல்கள் பற்றியும் பௌத்த பிக்குணிகள் கரை இறங்கும்போது கடற்கரை வரைக்கும் பந்தல் போடப்பட்டது பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன். இன்று டச்சு கோட்டையுள்ள இடத்தில் முதலில் மீகாமன் கோட்டை இருந்ததாம். நெடுந்தீவு மக்களுக்கும் சோழர்களுக்கும் இருந்த சிக்கல் முக்குவர்களின் அகதிப் படகுகளின் தளமாக நெடுந்தீவு இருந்ததுதான். அரச பகையால் வெளியேறியவர்களும் மத மோதல்களாலும் வெளியேறிய பௌத்த அகதிகளை இலங்கைக்குத் தப்ப வைத்ததில் முக்குவர் பங்கு ஆராயப்படவேண்டும்.

முக்குவர்களுக்கும் சோழர் கடற்படையிலிருந்த கரையாருக்கும் இடையிலான மோதல்கள்தான் நெடுந்தீவு புத்தளம் மட்டக்களப்பில் வழங்கும் பல்வேறு வெடியரசன் கதைகளின் மூலம் எனத் தோன்றுகிறது. நான் கேட்ட செவிவழிக் கதைகளும் என் ஆய்வுகளும் கிழக்கு மாகாணத்தில் மட்டுமன்றி யாழ்ப்பாணத்திலும் பெரிய அளவு முக்குவர் வாழ்ந்திருக்கிறார்கள். கரையாருடனான மோதலில் புத்தளம் கிழக்கு மாகாணம் எனப் புலம்பெயர்ந்தவர்கள் மட்டுமன்றி கணிசமான பகுதிகள் கரையோரங்களைவிட்டு உள்நாட்டுக்கு வந்து வெள்ளாளர்களோடு கலந்துவிட்டமையை உணர்த்துகிறது. தமிழ் பௌத்தத்துக்கும் முக்குவருக்கும் உள்ள தொடர்பு ஆராயப்பட வேண்டும்.

[யாழ்ப்பாண வெள்ளாளர் சமுகம் யாழ்ப்பாணத்தில் நில உடைமை பெற்ற உள்ளூர் மற்றும் ஆங்கிலேயரின் ஆரம்பக் காலம்வரை தமிழகத்திலிருந்து அடிமைகளோடு வந்து குடியேறிய பல்வேறு சாதிகளது ஒருங்கிணைவால் உருவானதாகும். இவர்களுள் போர்த்துக்கீச டச்சு ஆவணங்களில் அதிகம் குறிப்பிடப்படும் மடப்பள்ளிகள் ஆவர். மடப்பள்ளிகள் பௌத்தர்களான முக்குவர் என்பது என் கருத்து. 1977ல் நான் யாழ்மாவட்ட சாதிகளை ஆராய்ந்தபோது மடப்பள்ளி வெள்ளாளர் என்கிற பெயரில் அவர்களை யாழ் பெருமாள்கோவில் வட்டாரங்களில் அடையாளம் கண்டேன். ஆய்வு மேற்கொண்டபோது அவர்கள் பெருமாளை வழிபடுகிறவர்களாக இருந்தார்கள். கரையாருக்கு அஞ்சி நயினாதீவில் இருந்து புத்தளம் கிழக்கு மாகாணம் போன்ற பகுதிகளில் முக்குவர்களுள் ஒரு பகுதியினர் முஸ்லிம்களாகிவிட்டார்கள்.]




யாழ்ப்பாண மன்னரின் நண்பர்களும் போர்த்துக்கீசர் கடற்கொள்ளையர்களாகக் குறிப்பிடப்படும் குஞ்சாலி மரைக்காரின் பரம்பரைகள் (Mappila Muslim) நெடுந்தீவில் முகாமிட்டிருந்திருக்கிறார்கள். என் தாய்வழி முன்னோர் முஸ்லிம்களோடு சேர்ந்து போர்த்துக்கீசருக்கு எதிராகப் போராடி இருக்கிறார்கள். அதனால் எங்கள் தாயின் தந்தை வழி முன்னோர்கள் “கலிமா கூட்டம்” எனப் பட்டம் பெற்றனர். கடைசிக் குஞ்சாலி மரைக்கார் சிரச்சேதம் செய்யப்பட்ட பின்னர் அவர்களது மருமகன் டொம் பெட்ரொ ரொட்ரிக்கோ என

போர்த்துக்கீச பெயர்பெற்ற சின்ன மரைக்கார் உதவியுடன் 1919ல் போர்த்துக்கீசரை நெடுந்தீவில் இருந்து சொற்ப காலம் துரத்தி இருக்கிறார்கள். இவர்கள் போரில் இறந்துபோனாலும் தங்கள் நண்பர்களைச் சுவர்க்கத்தில் சந்திக்க வேண்டும் என்பதால் குஞ்சாலி மரைக்காரின் கடற்படையினர் அவர்களுக்குக் காதுகளில் கலிமா ஓதி வந்திருக்க வேண்டும்.

கச்சத்தீவு, நெடுந்தீவு, புங்குடுதீவு, நயினாதீவு, எழுவைதீவு, அனலைதீவு, ஊர்காவல்துறை தீவு, மண்டைதீவு, காரைதீவு வரைக்குமான ஒன்பது தீவுக்கூட்டங்களும் என் சின்ன வயதுகள் வரை ஊர்காவற்துறை நிர்வாகப் பிரிவுக்குள் இருந்ததில் ஊர்காவற்துறை என்கிற பொதுப்பெயராலும் அழைக்கப்பட்டுள்ளது. இதனால் போர்த்துக்கீச ஆவணங்களில் தனதீவா (Tanadiva Island) - ஊர்காவற்துறை என்கிற குறிப்புகள் ஊர்காவற்துறையை மட்டுமல்ல சில சந்தர்ப்பங்களில் நெடுந்தீவு உட்பட ஒன்பது தீவுக் கூட்டங்களுக்கும் பொதுப்பெயராகவும் பயன்பட்டுள்ளது எனத் தோன்றுகிறது. இதுபோல சங்க, சங்க மருவிய காலத்து மணிபல்லவம் என்றசொல் பௌத்தர்கள் இரகசிய பின்தளமாக பயன்படுத்திய தீவுக்கூட்டங்களைக் குறிக்கும் பெயராகவும் பயன்பட்டுள்ளது எனக் கருதுகிறேன். ஆய்வுக்குரிய எனது ஊகம் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன்.

சொற்ப காலம் நெடுந்தீவை இலங்கையின் தலைவாசலாகவும் பாக்கு நீரிணையின் காவல் கோட்டமாகவே சோழர்களும் முஸ்லிம்களும் போர்த்துக்கீசரும் டச்சுக்காரரும் கருதினார்கள் எனத் தோன்றுகிறது. தற்போது என் தந்தைவழி ஒன்றுவிட்ட சகோதரன் சசி நெடுந்தீவு பிரதேச சபை தலைவராக இருக்கிறார். அவர் நம்முன்னோர் சொல்லிய ஊர்க் கதைகள் தெரிந்த முதியவர்களை அடையாளம்காண உதவக்கூடும்.

பசுத் தீவு என்கிற நெடுந்தீவு (Island of the Cows):

அரை நூற்றாண்டுக்கு முன்புவரை நெடுந்தீவில் முற்றங்களில் பூங்கன்றுகள் போல வளர்க்கப்பட்ட எங்கள் ஊரின் பணியாமைக்கும் வீரத்துக்கும் அடையாளமான பண்டைய பருத்தி இனம் பெரும்பாலும் அழிந்து போயிற்று. நெடுந்தீவு மக்களுக்கு ஒரு பணிவான வேண்டுகோள்; எங்காவது குப்பை மேடுகளில் அல்லது காடுகளில் நெடுந்தீவுப் பருத்தி இனத்தைக் கண்டால் தயவு செய்து அதனை உங்கள் வீட்டிலும் பாடசாலைகளிலும் நட்டு வளர்த்துப் பாதுகாக்கவும். எங்காவது நூல் நூற்கும் ராட்டினம் போன்ற கருவிகள் இருந்தால் அவற்றைப் பாதுகாப்பதுடன் எனக்கும் அறியத் தாருங்கள்.

நெடுந்தீவுக்கு போர்த்துக்கீசர் வைத்த பெயர் Ilha das Vacas இது பசுத் தீவு என்கிற நெடுந்தீவின் பழைய பெயரின் மொழி பெயர்ப்பாகும். பதிவுகளில் பருத்தி தீவு என்கிற பெயரும் காணப்படுகிறது. நெடுந்தீவு காலம்காலமாக சிறந்த பருத்தி

விளை நிலமாக இருந்துள்ளது. பல நூற்றாண்டுகளாகப் பருத்திச் செய்கையும், ஆடு மாடு வளர்ப்புமே நெடுந்தீவின் செல்வமாக இருந்தது. தமிழ் நாட்டில் ஆசீவக பௌத்த சமண மதங்கள் கொலை வெறியுடன் அழிக்கப்பட்ட காலங்களில் படகுகளில் தப்பி வந்த அகதிகளுக்குச் சோறிட்டுப் புகல் அளித்து இலங்கையின் ஏனைய பகுதிகளுக்குப் புலம்பெயர்ந்து வாழ வழி அனுப்பிவைத்த செல் விருந்தோம்பி, வரும் விருந்து பார்த்திருந்த அறம் நெடுந்தீவுக்கு உரியது.

கலோனியர் கால பதிவுகள் பலவற்றில் நெடுந்தீவு மக்கள் பலர் நூற்றாண்டுக்குமேல் வாழ்வதுபற்றிய சேதி குறிப்பிடப்படுகிறது. அதற்குக் கள் முக்கிய உணவாக எல்லோராலும் உண்ணப்பட்டதே காரணம் எனச் சிலர் கருதினர். ஆனால் நீண்ட ஆயுளுக்குக் கள் காரணமென உறுதியாகச் சொல்லமுடியாது என 1929இல் வெளிவந்த Romantic Ceylon நூலின் ஆசிரியர் குறிப்பிடுகிறார். அவர் கருத்துப்படி நெடுந்தீவு மக்கள் அதிக காலம் வாழ்வதற்கு நல்ல பால், பனை ஒடியல் சாப்பாடு, கடல் காற்று, கவலையின்மை, மக்களின் அப்பாவி மனதுமே காரணம். அவர் தனது புத்தகத்தில் 160 வயது குஞ்சிச்சியையும் 100 வயசு சின்னாசியையும் நெடுந்தீவில் சந்தித்ததுபற்றிக் குறிப்பிடுகிறார். 98 வயசு வரைக்கும் குஞ்சிச்சி யாழ்ப்பாணத்திலிருந்த தனது உறவினர் வீட்டுக்குப் போய் வந்ததாகவும் குறிப்பிடுகிறார். இன்று எமக்கு ஒடியல் உணவுகளும் சின்ன மீன்களும் இனிப்புக்கள் அல்லது பதநீர் இவை எட்டாத பொருட்கள் ஆகிவிட்டனவே.

அரேபிய மற்றும் மாப்பிள்ள முஸ்லிம் கப்பல் வாணிகர்களின் கொச்சி தமிழ்நாட்டில் வேதாளை (மண்டபம்) நெடுந்தீவு வர்த்தக கப்பல் வலைப்பின்னல் ஊடாக நெடுந்தீவு வர்த்தகம் செழித்தது. போர்த்துக்கீசருக்கு எதிரான கடற்போர்கள் நெடுந்தீவிலும் நடந்துள்ளது. டொன் பீத்ரோ றொட்றிகோ என போர்த்துக்கீசரால் அழைக்கப்பட்ட கடற்போராளி அலி மரைக்காருடன் சேர்ந்து நெடுந்தீவில் இருந்து சிலகாலம் போர்த்துக்கீசரை துரத்தி அடித்த வரலாறும் நெடுந்தீவுக்கு உண்டு. இத்தகைய போர்க் குணத்தின் ஆதாரம் பருத்திச் செய்கைதான். நெடுந்தீவின் வீரத்தின் அடையாளமான பருத்தியைத் தேடிக் கண்டுபிடித்துக் காப்பாற்றுவது நம் ஒவ்வொருவரின் கடமையுமாகும்.

போர்த்துக்கீசர் முதலில் குதிரை வளர்க்க ஆரம்பித்ததுமே பருத்தி கிழக்கூரில் இருந்து சாறாப்பிட்டிவரை நீண்டிருந்த எங்கள் பருத்தி தோட்டங்கள் பாதிக்கப்பட்டன. மேலும் பருத்தி நூல் ஆடை வர்த்தகமும் டச்சுக் காரரின் ஏகபோகமானது. இதற்கு எதிராக எங்கள் மக்கள் கிளர்ச்சி செய்தனர். டச்சுக்காரர் நெடுந்தீவின் வளமான பருத்தி தோட்டங்கள் முழுவதையும் அழித்து குதிரைகளுக்கான புல்வெளியாக்குவதும், அதனை மீறி எங்கள் முன்னோர் பருத்தி செய்கையில் ஈடுபடுவதுமாக டச்சுக் காரர் காலம் பருத்திக் கலகக் காலமாகவே இருந்தது. இறுதியில் பருத்திச் செய்கையைத் தடை செய்து டச்சுக் காரர் கடும்

சட்டம் போட்டனர். எங்கள் முன்னோர் ஏற்றுக் கொள்ளவில்லை. எங்கள் முன்னோர் தமது பணியாமையின் அடையாளமாக வீடுகளில் பருத்தியை பூங்கன்றுகளாக வளர்த்தனர். இதன் மூலம் எங்கள் முன்னோரின் போராட்ட உணர்வும் பருத்தி விதைகளும் எதிர்காலங்களுக்காகக் காப்பாற்றப் பட்டது.

1950ல் சின்ன வயசில் உடுவிலில் இருந்து என் தந்தையாரதும் தாய்வழிப் பாட்டனாரதும் ஊரான நெடுந்தீவுக்குக் குடிபெயர்ந்து சென்றபோது நெடுந்தீவு வீடுகளின் முற்றங்களில் பருத்தி பூங்கன்றாக வளர்க்கப் படுவதைக் கண்டேன். மூன்று நூற்றாண்டுகள் நெடுந்தீவு மக்களின் பணியாமைக்கும் வீரத்துக்கும் அடையாளமாகப் பாதுகாக்கப் பட்ட பருத்தியை எங்களால் பாதுகாக்க முடியவில்லை என்பது வெட்கக்கேடாகும். தயவு செய்து நெடுந்தீவு இளைஞர்கள் மீண்டும் எங்கள் வாழ்வின் வரலாற்றின் வீரத்தின் சின்னமான பருத்தியைத் தேடிக் கண்டுபிடித்து வீடுகளிலும் பள்ளிக்கூடங்களிலும் வளர்க்க வேண்டும் என்பது என் தாழ்மையான வேண்டுகோளாகும்.

அதுபோல நெடுந்தீவு பற்றிய கலோனியக் கால பதிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ள எங்கள் தீவின் தாவரவியல் அடையாளங்களெனக் குமரி கற்றாளை, கர்ப்பூரப்புல், சிவப்பு கற்றாளை, காவோதி, பனை என்பவை நினைவுக்கு வருகிறது. காவோதி வருடா வருடம் ஏலம் விடப்பட்டு யாழ்ப்பாணத்திற்குப் புகையிலை செய்கைக்கு உரமாக ஏற்றப்பட்டது பற்றிய கலோனியப் பதிவுகள் உண்டு. அரிய மருத்து பொருளான செங்கத்தாளை போர்க்காலத்திலும் பின்னரும் தென்னிலங்கை பயணிகளால் பெரும்பாலும் அழிக்கப்பட்டு விட்டது. இவற்றைத் தேடிக் காப்பாற்றுவது இளைஞ தலைமுறையினரின் தலையாய கடமையாகும்.

தொடர்பு:
வ.ஐ.செ.ஜெயபாலன்
Jaya Palan
https://www.facebook.com/jaya.palan.9
+91 99414 84253

# 19 தென்னாப்பிரிக்கத் தமிழர் முனைவர்.சின்னப்பன்

## – முனைவர் க.சுபாஷிணி

2014ம் ஆண்டு ஜெர்மனியில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்ள ஹாம் நகருக்குச் சென்றிருந்த போது எனக்கு அறிமுகமானவர் தென்னாப்பிரிக்காவின் திரு.சின்னப்பன், திருமதி கோகி சின்னப்பன் ஆகிய இருவரும். அதற்கு அடுத்த ஆண்டு 2015ல் நான் தென்னாப்பிரிக்காவில் நடந்த தமிழ்க் கல்வி மேம்பாடு மற்றும் பட்டமளிப்பு விழாவிற்குச் சென்றிருந்தபோது இவர்கள் இருவருடனும் கூடுதல் நாட்களைச் செலவிட்டு தென்னாப்பிரிக்கத் தமிழர்களைப்பற்றி அறிந்து கொண்டேன். தென்னாப்பிரிக்கத் தமிழ் மக்கள் வழிபடும் கோயில்களுக்குத் தனது வாகனத்தில் என்னையும் ஏனைய நண்பர்களையும் அழைத்துச் சென்று பல வரலாற்றுச் செய்திகளையும் எங்களுடன் பகிர்ந்து கொண்டார்.



தென்னாப்பிரிக்கத் தமிழர்கள் பெருவாரியாகத் தமிழ்மொழி பேசுவதை மறந்து விட்ட சூழலில் எழுச்சியுடன் தமது தாய் மொழி தமிழை எல்லோரும் கற்க வேண்டும் என முயற்சி எடுத்தவர்களில் திரு.சின்னப்பனுக்குப் பெரும் பங்குண்டு. நேற்று அவர் காலமானார் என்ற அதிர்ச்சியளிக்கும் செய்தி கிட்டியது. கடந்த இரு ஆண்டுகளாக மீண்டும் என்னைத் தென்னாப்பிரிக்காவிற்கு அழைத்துக் கொண்டேயிருந்தனர் சின்னப்பன்-கோகி தம்பதியினர். பற்பல வேலைகளின் காரணத்தால் எனது பயணம் தடைப்பட்டுக் கொண்டேயிருந்தது. அவ்வப்போது

தொலைபேசியில் மட்டும் பேசுவது தொடர்ந்தது. இந்தச் சூழலில் திரு.சின்னப்பன் மறைந்தார் என்ற செய்தி நம் எல்லோருக்குமே பேரதிர்ச்சி.

தமிழ் மரபு அறக்கட்டளையின் நலன் விரும்பி என்பதோடு ஒவ்வொரு பெரிய திட்டங்கள் செயல்படுத்தும் போதும் திரு.சின்னப்பனும் கோகியும் எனக்கு வாழ்த்துச் சொல்லத் தவறுவதில்லை. அண்மையில் தான் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் பட்டம் பெற்று தேர்ச்சி அடைந்திருந்தார். அச்செய்தியை எனக்கும் தெரிவித்து மகிழ்ந்தார்.

2015ம் ஆண்டு தென்னாப்பிரிக்காவின் டர்பன் நகரில் உள்ள ஒரு முருகன் கோயிலுக்கு நாங்கள் சென்றிருந்த சமயம் நான் செய்த ஒரு சிறிய பதிவினை இங்கே பகிர்கிறேன். எளிய தமிழில் தென்னாப்பிரிக்கத் தமிழர் குறித்து டாக்டர்.சின்னப்பன் பேசும் சிறிய பதிவு.

https://youtu.be/YAzLbwrxE6c

திரு.சின்னப்பனின் தென்னாப்பிரிக்கத் தமிழர்களின் தமிழ் வளர்ச்சிக்கான உழைப்பு காலத்தால் அழியாதது. அவர் காலத்தால் அழியாது நிலைத்திருப்பார்.

முனைவர்.க.சுபாஷிணி (ksubashini@gmail.com)
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை - பன்னாட்டு அமைப்பு

# 20. இலந்தை முள் கோட்டை

—— வே.கி. சிவகுமார்

சுமார் 100 அடி சுற்றளவு 25 அடி உயரம், 10 அடி அகலம் வட்ட வடிவமான கோயிலில் இலந்தை முள் கொண்டு காட்டப்படும் ஒரு கோட்டை!!!

ஆதியில் ஜெகன் மாதா ஜெயதுர்கா என்றழைக்கப்பட்ட அன்னையின் அம்சமாகக் கருதப்படும் ஆதிசக்க தேவியின் திருக்கோவில் அமைந்த இடங்களில் அந்நியர் நடமாட்டங்களைக் குறைக்கவும் சில நேரங்களில் மனித நடமாட்டமே இல்லாமல் அவ்விடங்களின் புனிதங்கள் களங்கப்படாமல் இவ்வித இலந்தை முள் கூடாரங்கள் அமைக்கப்படுகிறது.

தமிழகத்தின் தென் மாவட்டங்களில் விருதுநகர், திருநெல்வேலி, தூத்துக்குடி போன்ற இடங்களில் வாழும் கம்பளத்து நாயக்கர் சமுதாய மக்கள் தங்களின் ஆதிகுலதெய்வமாக வழிபடும் சக்கதேவியின் ஆலயங்களைச் சுற்றி இவ்வகையிலான முள்கோட்டைகளை அமைத்து வழிபடுகின்றனர்



குறிப்பிட்ட நாள் இடை வெளியில் மீண்டும் புனரமைக்கப்படும் இத்தகைய முள்கோட்டைகளில் தவறாது வீட்டிற்கு ஓர் ஆண்மகன் கலந்துகொள்ளவேண்டும்

என்ற சட்டதிட்டங்களையும் சில சம்பிரதாய நடைமுறைகளையும் பின்பற்றுகின்றனர்.

ஜக்கதேவியின் அவதாரமான வீரசின்னம்மாள் அம்மனுக்கு உருவ வழிபாடு கிடையாது. கோயிலின் மத்தியில் மண்பானையில் நிறைகுடம் தண்ணீர் வைத்து சிற்றாடை கட்டி, காதோலை, கருகுமணி பாசி அணிவித்து அம்மனாக அலங்கரித்து தீபம் ஏற்றி பூஜைகள் நடக்கும். பூசாரி பிச்சைவேல் பூஜைகளை நடத்துவார்.

முதலில் ஊர் பொதுப்பொங்கல் வைக்கப்படும். அதையடுத்து வீடுதோறும் ஒரு பொங்கல் வீதம் வைத்து வழிபடுவார்கள். அன்று நள்ளிரவு 12 மணிக்கு மேல் குழந்தை வரம் நேர்த்திக் கடனாகக் கரும்பு தொட்டில் கட்டி அம்மனுக்கு நேர்ச்சை செலுத்தி வழிபடுவார்கள்.

தேவதந்துமி ஆகிய மங்கள வாத்தியங்கள் முழங்கப் பக்தர்கள் தெய்வீக கலையான தேவராட்டம் ஆடிக்கொண்டே ஊர் மந்தையிலிருந்து புறப்பட்டு திருவீதி உலா வந்து கோயிலை வந்தடைவர்.

தொடர்பு: வே.கி. சிவகுமார் (Siva19732001@gmail.com)

## 21. சாதியம்

— "சொல்லாக்கியன்"

இனம், மொழி, மதம், நிலப்பகுதி, வர்க்கம், சாதி போன்ற பிரிவினைகளால், உலக மக்கள் முரண்பட்டு நிற்கின்றனர். இத்தகைய சமூக முரண்பாடுகள், பெரும்பாலான பொதுமக்களின் அன்றாட வாழ்வை வலிமையாக ஆக்கிரமிக்கின்றன. எனவே, சிறுபான்மையான மக்கள், அரசு அதிகாரங்களைக் கொண்டு, வெளிப்படையாக நிகழ்த்தும் சுயநல பொருளாதார கொள்ளைகளைக்கூட, பெருவாரியான மக்களால் முழுமையாக காணமுடிவதில்லை. ஒருசிலர் கண்டு, கத்திப்பேசினாலும், சமூகச்சந்தைக் கூச்சலில், தெளிவாகக் கேட்க முடிவதில்லை. சமூகம் முழுமையும் தன்னலமே ஆட்சி செய்கின்ற இக்காலத்தில், பொதுநலம்கூட, சந்தேகக் கண்ணாலேயே பார்க்கப்படுகின்றது.

உலகின் பல்வேறு மனித இனங்கள் அனைத்தும், ஒரே மனிதக்குழுவின் பரந்து விரிந்தத் தன்மையின் விளைவுதான் என்றும், பல்வேறு மொழிக்குடும்பங்களும், மொழிகளும், ஒரு தாய்மொழியின் தங்கைகளாகத் தோன்றி, நிலத்தின் சூழல் மற்றும் வாழ்க்கைமுறை வேறுபாடுகளுக்கு இணங்க, திரிந்து மாறுபட்டு வந்துள்ளன என்றும், எல்லா மதங்களும், சாரத்தில், அகநிலையில் அல்லது புறநிலையில், இறைமையை அடைவதைப் பற்றியே கூறுகின்றன என்றும், எந்த ஒரு நிலப்பகுதியிலும், வர்க்கத்திலும், சாதியிலும், மக்கள் பிறப்பதோ, வளர்வதோ, வாழ்வதோ, குறிப்பிட்ட கலாச்சாரம் மற்றும் பண்பாடுகளைக் கொண்டிருப்பதோ, அவர்களின் சொந்த விருப்பத்தினால் அல்ல, சூழலும் வழக்கமும்தான் என்று மானிடவியல் மூலம் அறிகின்ற போதிலும் இம்முரண்பாடுகள் தொடர்கின்றன, உச்சக் கட்டமாக, பிற இனம், மொழி, மதம், நிலப்பகுதி, வர்க்கம், சாதி ஆகியனவற்றிற்கு எதிரான வன்முறைக்கும், ஏன், அழித்தொழிப்புக்கும்கூட இட்டுச் செல்கின்றன.

இனம், மொழி, மதம், நிலப்பகுதி, வர்க்கம், சாதி முரண்பாடுகளின் வெளிப்பாடுகள் யாவும் தன்னிச்சையாக நிகழ்வன அல்ல. அவ்வமைப்புகளின் தலைமைகள், தங்கள் அடுத்த கட்ட அரசியல் அதிகார இலக்குகளுக்காக, மோதல்களுக்கான கருக்களை உருவாக்கி, வளர்த்து, ஏவிவிடுகின்றன. இம்முரண்பாடுகளில், சாதிய முரண்பாடுகள், தமிழகச் சூழலில், மிகவும் கூர்மையாக உள்ளன. பாட்டாளி மக்கள் கட்சி, விடுதலை சிறுத்தைகள் கட்சி போன்றவை, சாரத்தில் தனிப்பட்ட சாதிய அமைப்புகளாக இயங்கி, சாதிய முரண்பாடுகளை உக்கிரப்படுத்துகின்றன. வழக்கம் போல, எல்லா

முரண்பாடுகளையும் வளரவிட்டு, பொதுமக்களுக்கு வேடிக்கை காண்பித்துவிட்டு, அதிகார வர்க்கம், தன்னுடைய பொருளாதார மற்றும் அரசியல் நலன்களை, யாரும் கண்டும் காணாதவாறு, முன்னெடுத்துச் செல்கின்றன.

சாதி எங்கு, எப்பொழுது தோன்றியது? அதன் அடிப்படை என்ன? அது எப்படி நிலைபெற்றது? அது உளவியல் தன்னியக்கமாய் தொடர்ந்தது எப்படி? சாதியத்தின் அமைப்பு மற்றும் இயங்கியல் என்ன? அதன் தகவமைப்புகள் எவ்வாறு நிகழ்ந்தன? அதன் இன்றைய நிலை என்ன? இவ்வாறு, சாதியத்தின் முந்தைய வரலாற்றையும் இயக்கத்தையும் அறியாமல், அதை எப்படி எதிர்கொள்வது மற்றும் தீர்ப்பது என்பதைப் புரிந்து கொள்ள முடியாது.

வரலாறு தானாக உருவாவதில்லை, அது உருவாக்கப்படுகின்றது. ஆக்கமும், ஊக்கமும், இடைவிடாத பல்முனை முயற்சிகளைக் கொண்டே, ஒவ்வொரு வரலாறும் கட்டமைக்கப்படுகின்றது. எதிர்கால வரலாறும், அதற்கு விதிவிலக்கல்ல. சரியான நோக்கமும், திட்டமும், செயல்பாடுகளுமே, புதிய சமுதாய வரலாற்றை நிலையாகவும், உறுதியாகவும் உருவாக்குகின்றன. மீளாய்வும், விமர்சனமும், பொதுநலமும் மாற்றுப் பாதையை நிர்ணயிக்கின்றன. பல்வேறு சாதிய சக்திகளின் இயக்க திசைகளை முன்கூட்டியே அறிந்து கொள்ளாமல், அவற்றை மாற்றும் முயற்சிகளை உடனடியாகவும் தொடர்ந்தும் பலமுனைகளில் மேற்கொள்ளாமல், சாதிய விடுதலை என்பது சாத்தியமில்லை.

சாதி எங்கு, எப்பொழுது தோன்றியது?

தமிழகம் மற்றும் தமிழர்களின் ஆவணப்படுத்தப்பட்ட வரலாறு, தொல்காப்பியத்தில் இருந்தே துவங்குகின்றது. தொல்காப்பியத்தின் காலம் மிகக் குறைந்த மதிப்பீட்டின்படி, கி.மு. ஆறாம் நூற்றாண்டு. அதற்கு முன்பே, சிலபல நூற்றாண்டுகள், எழுத்தும் படைப்பும் தமிழில், தமிழகத்திலிருந்திருக்க வேண்டும் என்பது வெளிப்படை என்றாலும், அதற்கான ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. சமீபத்திய கீழடி அகழ்வாராய்ச்சி, அங்கு வாழ்ந்தவர்களின் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு என்றாலும், அது நகர நாகரிகமாக இருப்பதாலும், சிந்து சமவெளி நாகரிகத்திற்கு ஒத்து இருப்பதாலும், அதன் தொன்மை மிகவும் முற்பட்டதாய் இருக்க வேண்டும்.

தொல்காப்பியத்தின் எந்த பகுதியிலும், சாதிகளைப் பற்றிய குறிப்புகள் இல்லை. சமூக உறுப்பினர்களைப் பற்றிக் கூறுகையில்;

1. அந்தணர். அவர்களுக்குரிய பொருட்களைக் கொண்டே, அவர்களின் கடமைகள் என்னவாக இருந்திருக்கும் என்று அறியமுடிகின்றது. தொல்காப்பியம், பொருள் அதிகாரம், மரபியல் நூற்பா:

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய. [615]

அந்தணரின் முதன்மையான கடமை பழம்நூல்களைக் கற்பதும், புது நூல்களை யாப்பதும், சமூகத்தின் பிற அங்கத்தினருக்கு கற்பிப்பதும் ஆகும். அவர்களின் எளிமையான உடைமைகளாக, தண்ணீர் பாத்திரமும், மூன்று கால்களைக் கொண்ட கைதாங்கியும், தரையிலிருந்து சற்று உயரத்தில் அமர்வதற்கு ஏற்ற மணையும்தான்.

2. அரசர். நேர்மையான அரசாட்சி செய்பவர். அரசரும் அந்தணரைப் போன்று, கல்வி கற்று, யாத்து, கற்பிப்பர்.

3. ஊரின் பெயர், தந்தையின் பெயர், இயற்பெயர், செய்யும் தொழிற்கருவியின் பெயரைக் கொண்டு, எவரும் அத்தொழிலுக்குரியவராய் அறியப்படுவர். சான்றாக, வேலூர் சிவனார் மகன் கந்தன் தச்சர், மேலூர் மாரியின் மகன் காரி கருமார், மாங்காடு கண்ணன் மகன் குமரன் கொல்லர் போன்றோர். போர், இவரது கடமை.

4. தலைமைப் பண்பிற்கு ஏற்றவாறும், செய்யும் சேவைகளுக்கு ஏற்றவாறும், பெயரிடப்படுவோர். சான்றாக, தலையாரி, சேர்வை போன்றோர். ஊர்காவல், போர், இவரது கடமை.

5. வைசியன். உணவுப் பண்டங்களை விற்பவர்.

6. வேளாண் மாந்தர். உழுவதும், பிறர்க்கு உணவளிப்பதும் இவர்தம் பணி. தூது செல்வதும், போர் செய்வதும் இவருக்கும் கடமை

7. இழிந்தோர், அதாவது, முற்கூறிய ஆறு அங்கத்தினரின் வழிவந்திருப்பினும், அவரவர்களுக்குரிய கடமைகளை ஆற்றாதவர், சோம்பித் திரிந்தோர் என ஏழு வகைப்படுத்துகின்றார்.

இவ்வகைப்பாட்டில், சாதியக்கூறுகள் ஏதுமில்லை. திறமை மற்றும் பண்புக்கேற்ற தொழில் மற்றும் சேவையும், அதற்கேற்ற அங்கீகாரமும் கிடைப்பதாய் உள்ளது. பணியோ, கடமையோ அற்று, சோம்பித் திரிந்த இழிந்தோர் மட்டும் சமுதாயத்தில் மதிக்கப்படாதவர்களாய் இருந்துள்ளனர்.

தொல்காப்பியம் தோன்றிய கி.மு. ஆறாம் நூற்றாண்டு முதல், கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரை, ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள், தமிழகம் மற்றும் தமிழரின் வரலாறு, இருட்டடிக்கப் பட்டிருந்தது. அதன் பெரும்பகுதியானது, களப்பிரர் காலம் எனப்பட்டது. களப்பிரர் ஆட்சியின் மிச்ச சொச்சங்கள் எதுவும் இல்லாதபடி, வேரறுக்கப்பட்டிருந்தது. ஆனால், சமீபத்தில், சிவகங்கை மாவட்டம் பூலாங்குறிச்சி கல்வெட்டின் மூலம், அந்த இருண்ட காலத்தின் மீது ஒளி பாய்ச்சப்பட்டுள்ளது.

பௌத்தர்களும், சமணர்களும் மேலோங்கிய காலம் களப்பிரர் காலம். அதனால்தான், அக்காலத்தில் தோன்றிய ஐம்பெருங்காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை அம்மதங்களின் தத்துவங்களை உள்ளடக்கி உள்ளன. திருக்குறளும், இருண்ட காலம் எனப்படும் இக்களப்பிரர் காலத்தில் தோன்றியதுதான். தமிழைப் பொறுத்து, களப்பிரர் காலம், பொற்காலம். களப்பிரர் காலம், தமிழுக்குப் பொற்காலம் என்றால், தமிழருக்கும் பொற்காலமாகவே இருந்திருக்கும். ஏனெனில், களப்பிரர் காலத்தில் பிரம்மதேய நிலங்கள் மீட்டெடுக்கப்பட்டு, உழைக்கும் மக்களுக்குப் பிரித்தளிக்கப்பட்டுள்ளது. அதுவரை, அவர்கள் அடிமை வாழ்வே வாழ்ந்துள்ளனர்.

களப்பிரர்கள் யார்? பிரம்மதேய நிலங்களைக் கைக்கொள்ளும் அளவுக்கு அவர்கள் எப்படி வலிமை பெற்று இருந்தனர்? கலிங்கப் போரில் வென்றாலும், அழிவின் கொடுமையைக் கண்டு, அசோகன் பௌத்தம் தழுவினான். தன்னுடைய பெரும்படையைக் கலைத்தான். விரிந்து பரந்து பௌத்தத்தை பரப்பச் செய்தான். ஒரு அணி தெற்கு நோக்கி வந்தது போலும். ஏற்கனவே, சங்கமித்திரையும், மகிந்தனும் இலங்கை சென்றிருப்பர். இலங்கைக்கு நெருக்கமான தமிழகமும், பௌத்தத்தின் ஆளுமையில் இருப்பது சிறந்தது என எண்ணி இருக்கலாம்.

ஆனால், வடக்கில் போலவே தெற்கிலும், ஆரியர் தம்மைப் பிராமணர்கள் அல்லது அந்தணர்கள் என அழைத்துக் கொண்டு, குறுநில மன்னர்களை தம்வசப்படுத்தி விட்டு, எளிமையாக வாழ்ந்த திணை நில அந்தணர்களைப் புறந்தள்ளினர். மன்னனின் இல்லற சுகத்திற்காக, போர் வெற்றிக்காக, சுவர்க்கப் பதவிக்காக, யாகம், வேள்வி செய்வதாய் கூறி, தாம் வசதியாய் வாழ, பிறர் உழைப்பில் வாழ, பிரம்மதேய நிலங்களை தானமாய் பெற்றனர். அந்நிலங்களில் உழைத்த மக்கள் சுரண்டப்பட்டனர். கல்வி மறுக்கப்பட்டது. வறுமையில் வாடினர். இதைக்கண்ட முன்னாள் கலிங்கத்துப் படையினர், பின்னாள் பௌத்த துறவிகள், மக்களை அடிமைத்தளையிலிருந்து விடுவிக்க முனைந்தனர். அதன் மூலம் தம் மதக்கொள்கைகளையும் பரப்ப முடியும் என்று முடிவு செய்தனர். வடக்கில், ஏற்கனவே, வைதிக மரபிற்கும் பௌத்தத்திற்கும் பெரிய முரண்பாடுகள் இருந்த வரலாறு உண்டு. எனவே, பிரம்மதேய நிலங்கள் அந்தணரிடம் இருந்து பிடுங்கப்பட்டு, உழைக்கும் மக்களுக்குப் பிரித்தளிக்கப்பட்டன. பௌத்த துறவிகளுக்கு பாதுகாப்பாக மாமன்னன் அசோகன் இருப்பதை அறிந்த பிராமணர்களும், குறுநில மன்னர்களும், அவர்களை எதிர்க்கத் துணியவில்லை.

சுதந்திர உழைப்பு பெருகியது, வளமும் கொழித்தது, வாணிபம் செழித்தது, செல்வம் மிகுந்தது, வாழ்வு இனித்தது, கல்வி பரவலாகியது, உபரியால் கலை, இலக்கியம் பல்கியது. ஐம்பெருங்காப்பியங்கள் தோன்றின. பௌத்த மடங்களும்,

சமண மடங்களும் பெருகின. மதங்களின் அரசு கோலோச்சியது. கேட்பாரற்ற எந்த அதிகாரமும் கேடு என்பதால், பௌத்த சமண மடங்கள் சீரழிந்தன. பெரும்பகுதியான மக்கள் உழைப்பை விடுத்து, துறவு மேற்கொண்டு, நோகாமல், சிறு அளவிலான உழைப்பவர்களைச் சார்ந்து வாழ்ந்தனர். சமுதாய உற்பத்தி குறைந்தது, பகிர்வும் அருகியது. துறவு வாழ்வு விதைத்த, விளைத்த சோம்பலால், வறுமையும், ஏழ்மையும், துன்பமும், குற்றங்களும் மிகுந்தன. திருவள்ளுவம் தோன்றியது. குடும்ப வாழ்வின் மூலமே, துறவின் இலக்கை அடையும் வழியைக் காட்டியது. உழைப்பின் அருமையைப் போற்றியது. அந்தணர், அரசர், அமைச்சர், வணிகர், வேளாண் மாந்தர் ஆகியோரின் கடமைகளை வரையறுத்தது. அறம் என்பதன் வடிவத்தையும், அன்பெனும் சாரத்தையும், அனைத்துப் பிரிவினருக்கும் அறிவுறுத்தியது. சமூக இணக்கத்திற்கான பண்புகளையும் ஒழுக்கங்களையும், சமூக அங்கத்தினர்களுக்கு முன்மொழிந்தது. சமநிலைப்படுத்திய, ஒரு புதிய, மாதிரி சமுதாய வாழ்வியலை உருவாக்கினார்.

பிரம்மதேயங்களை இழந்த அந்தணர்களோ, வடக்கு அல்லது மேற்கு நோக்கிச் சென்றனர். "உறுமீன் வருமளவு காத்த" அந்தணர், தமிழகத்தின் அகநிலை தமக்குச் சாதகமாய் இருப்பதை அறிந்து, வடக்கு மன்னர்களைக் கொண்டு போர் தொடுத்தனர். பௌத்தர்கள் விரட்டியடிக்கப்பட்டனர். பெரும்பாலானவர்கள் இலங்கையில் தஞ்சம் புகுந்தனர். சமணர்களில் சிலர் கழுமரம் ஏறினர். அந்தணர்கள் மீண்டும் அதிகாரம் பெற்றனர், சமூக அரசாக மாறினர். பிரம்மதேயங்களை மீட்டுக் கொண்டனர். நிலமிழந்து எதிர்த்தவரை எல்லாம் சண்டாளர் என்றனர், பள்ளர், பறையர் என முத்திரை குத்தினர். பின்பும் எதிர்த்தவர்களை, சக்கிலியர் என்றனர், அருந்ததியர் என்றனர். மனுவின் சட்டம், எப்படிப்பட்ட சூழலுக்கும் பலபடி நிலைகளைத் தயாராய் வைத்திருந்தது. திணை நிலங்களில், தொழிலாலும், சேவையாலும் பெயரிடப்பட்டவர்கள் எல்லாம், சாதியின் படிநிலையில் பொருத்தப்பட்டனர், சாதிகளாக்கப்பட்டனர். அகமணமுறை சாதியத்தின்  கருவாக்கப்பட்டது. அது, சமுதாயத்தைச் சங்கிலித் தொடராய் பிளவுபடுத்தியது. பெண்களின் இயங்கு வெளி, வீட்டோடு சுருங்கியது. இயங்குகின்ற சமுதாயத்தில் எழுகின்ற மீறல்கள், சிக்கல்களால், புதுப்புது விதிகள் இயற்றப்பட்டு, செயல்படுத்தப்பட்டு, தண்டிக்கப்பட்டு, அபராதம் விதிக்கப்பட்டு, சாதியம், அரசியல், பொருளாதார, சமூக மற்றும் உளவியல் இயக்கமாய் தொடர்ந்தது. நியாயம், நீதி என்பன, ஒவ்வொரு சாதிக்கும் வெவ்வேறாய் உருவாகின. சாதியப் பிரிவுகளின் சமூக முரண்பாடுகள், மக்களின் பெரும்பாலான வாழ்வு நேரத்தையும், சமூக உறவுத் தளங்களையும் ஆக்கிரமித்தன.

சமூகப் படிநிலையின்  ஏற்றம் மற்றும் இறக்கம் தந்த அற்ப, மாயையான, கற்பிதம் செய்யப்பட்ட உயர்வு மனப்பான்மையும், தாழ்வு மனப்பான்மையுமே அவர்களை இயக்கப் போதுமான உந்துசக்தியாக இருந்தது, வாழ்வின் இலக்காய் தெரிந்தது. எனவே, சமூகம் முழுமையையும் ஆட்டிப்படைத்த, சுரண்டிய சமூகப்

பொருளாதார அரசான அந்தணரை எதிர்த்தோ, அரசியல் பொருளாதார அரசான மன்னனை எதிர்த்தோ எந்த செயல்பாடும் நிகழவில்லை. ஒருசில தலைமுறைகளின் இத்தகைய சாதியம் அடிப்படையிலான வாழ்வியல் இறுகி, எல்லா தலைமுறைகளுக்கும், எல்லா படிநிலைகளுக்கும் அதாவது எல்லா சாதியினருக்கும் தொடர்ச்சியான வாழ்வியலாய் மாறிவிட்டது. இதைத் தாண்டிய சிந்தனையே எழவிடாதவாறு, ஒவ்வொரு மனமும் தன் உள்ளழுத்தத்திற்கு ஆட்படுகின்றது. போதாதென்று, தன் மற்றும் பிற சாதியினரின் சமூக அழுத்தமும் சேர்ந்து, சாதியத்தைத் தன்னிச்சையாக இயக்கி வருகின்றது. அந்தணர்கள் சமூகத்தில் வேறு இடங்களுக்கும், உயரத்திற்கும் பெயர்ந்து விட்டனர். ஆனால், சாதிய வன்கொடுமை, அந்தந்த உள்ளூர் சமுதாயத்தில் உள்ள மேல்சாதி மக்களால், கீழ்சாதியினருக்கு எதிராகத் தொடர்ந்து நிகழ்த்தப்படுகின்றது. படிக்காமலிருந்தாலும் பரவாயில்லை, உழைக்காமல் சோம்பித் திரிந்தாலும் பரவாயில்லை, சாதியின் படிநிலையில் மாற்றம் வராதவாறு பார்த்துக் கொள்வதே, வாழ்வின் இலட்சியமாகவும், செயல்பாடாகவும், சில உதிரிகளுக்கு இருக்கின்றது. மரபணுவே மாற்றமாகியது போலும். ஒவ்வொரு சமூக உறுப்பினரும், தான் சமூகப்பார்வையில் சிறுமைப்பட்டுவிடுவோமோ எனப் பயந்து, தயங்கி, வெளிப்படைத் தன்மையின்றி வாழ்கின்றார்.

எப்பொழுதெல்லாம், மக்கள் சாதிப்பிரிவினைகளை மறந்து ஒன்று சேர முயல்கிறார்களோ, அப்பொழுதெல்லாம், செயற்கையான பிரச்சனைகளை உருவாக்கி, வளர்த்து, குழப்பத்தை ஏற்படுத்தி, மோதலை ஏற்படுத்தி, அவ்வொற்றுமை குலைத்துவிடப்பட்டது. இதனால், அரசு அதிகாரம் என்பது மக்களை விட்டு வெகு உயரத்தில் நின்றுகொண்டது. திணைநிலங்களில், மன்னனுக்கும் மக்களுக்குமான உறவு நேரிடையாக, நெருக்கமாக இருந்தது. மக்களே மன்னனைக் கேள்விக்குள்ளாக்கினர். மக்களுக்காக, பாதுகாப்பாக, உதவியாக மன்னன் இருந்தான். சாதிய சமூக வாழ்வில், மன்னன் தூரத்தில், உயரத்தில் நிறுத்தப்பட்டான், மக்களும் அந்நியமாக்கப்பட்டார்கள். மன்னனுக்காக, வரிகளுக்காக, வன்முறைகளைத் தாங்கி மக்கள் இருந்தனர், பல நூற்றாண்டுகளாய்.

பதினேழாம் நூற்றாண்டில் துவங்கிய ஆங்கிலேயர் ஆட்சியில், சாதியம் சற்று தளர்ந்தது. ஆனால், சிறுபான்மையாக இருந்த அவர்களுக்குச் சாதிகளைத் தாண்டிய ஒற்றுமை, அதிகாரத்தைக் கேள்விக்குள்ளாக்கும் என எளிதில், விரைவில் அறிந்து கொண்டனர். அவர்கள் நினைத்திருந்தால், விரும்பியிருந்தால், விரைவில் சாதிகளை ஒழித்திருக்கலாம். தங்கள் நலன்களைக் காத்துக் கொள்ள, சாதிய அமைப்பை அப்படியே தொடரச் செய்தனர். ஆனால், கல்வி பரவலாக்கப்பட்டது. அது, ஒரு சிலருக்கு விழிப்பைத் தந்தது. சமூக நீதிக்கான போராட்டம் தொடங்கியது. சாதிய வாழ்வில், கூனிக் குறுகிக் குமைந்த உடல்கள், நிமிரத் தொடங்கின. பிறப்பால் ஏற்படுத்தப்பட்ட ஏற்றத்தாழ்வுகளை மறுக்கத்

தொடங்கினர். கல்வியாலும், செல்வத்தாலும், சமூக மதிப்பு உயர்வதையும் கண்டனர். மக்கள் தொகையில் பாதியான பெண்களும், கல்வி கற்கத் துவங்கினர். சமூக உழைப்பில் பெரும் பங்காற்றத் தொடங்கினர். பெண்கள் உளவியல் அடிப்படையில் விடுதலை அடைந்தனர்.

இந்தியா விடுதலை அடைந்த பிறகும், சாதியை ஒழிப்பதற்கான சட்டங்கள் தேசிய அளவில் இயற்றப்படவில்லை. தமிழ்நாட்டில், பெரியாரின் சமூக மற்றும் சுயமரியாதை இயக்கத்தின்வழி வந்த, திராவிட முன்னேற்றக் கழகம், சில மாற்றங்களைக் கொண்டு வந்தது. ஆனால், அவற்றை நடைமுறைப்படுத்துவதற்கான செயல்பாடுகளை முழுமையாக முன்னெடுத்துச் செல்லவில்லை. சாதிய ஓட்டுகளைச் சார்ந்து வாழும் அரசியல்வாதிகள், சாதியைச் சங்கங்கள் மூலம் வளர்க்கிறார்களே தவிர, அதை ஒழிப்பதற்கான எந்த நடவடிக்கையையும் எடுக்கத் தயாராய் இல்லை. சாதிய தலைவர்கள், தங்கள் நலனையும், தங்களுக்கு மிக நெருக்கமானவர்களின் நலன்களையும் முன்னெடுத்துச் செல்லவே, சாதியச் சங்கங்களை பயன்படுத்திக் கொள்கின்றனர். தனித்தனி சாதியச் சங்கங்களாய் இருந்து, தங்களை காத்துக் கொள்ள முடியாது. அரசின் ஆதரவு எச்சங்கத்தினருக்கு இருக்கின்றதோ, அவர்களே வலிமை பெறுகின்றனர். தங்களின் இருப்பையும், தலைமையையும், அதிகாரத்தையும் காத்துக்கொள்வதற்காகப் பிரச்சனை எதுவும் இல்லாத காலத்திலும், எப்படியாவது ஒரு மோதலை உருவாக்கி விடுகின்றனர். ஒரு வார்த்தையேகூட, சாதிய மோதலுக்குக் காரணமாகி விடும்போது, எந்த அற்ப காரணம் கொண்டும், சாதியச் சண்டைகளை உருவாக்கி விடமுடியும். ஒற்றைப் பிரச்சனையே பல பிரச்சனைகளாக மாறவும், சங்கிலித் தொடராக நீளவும் முடியும். சாதிய வன்மம், வெடிகுண்டைப் போல் எப்பொழுது வேண்டுமானாலும் வெடிக்கும்.

தீர்வு:

எந்த ஒரு முரண்பாடுள்ள சமூகத்திலும், ஒற்றை தத்துவம் மட்டுமே நிலவுவதில்லை. ஒரு சமூகத்தின் பல்வேறு இயக்கங்களுக்கும், அதன் பன்மையான தத்துவங்களே பின்புலக் காரணிகளாய் அமைகின்றன. அரசின் வலிமை கொண்ட ஆளுமைமிக்க தத்துவத்தின் முன்பு, பிற தத்துவங்கள் தற்காலிகமாக அடங்கி இருக்கும். ஆனால், சமூக முரண்பாடுகள் முற்றும்போது, அடங்கி இருந்த தத்துவங்கள் வலிமை பெற்று, வீறுகொண்டு எழும். தத்துவம் தன்னுடைய முகத்தை நேரடியாகக் காட்டுவதில்லை. அது அருவத்தன்மை கொண்டதால், கற்றவர்கள் மட்டுமே அதைக் கையாள்கின்றனர். தத்துவமே வெளிப்படையான கொள்கைகளாகவும், அவற்றை அடைவதற்கான பருண்மையான செயல்பாடுகளாகவும் மாறுகின்றது.

தத்துவம் = த் + அத்து + அம். "த்" என்றால் இருத்தல் அல்லது தேகம். உலகின் இருப்பு அல்லது மெய்யும் மனமும் ஒன்றிய மனிதன். "அத்து" என்பது,

"அதன்" எனும் பொருண்மையைக் குறிக்கும், ஒரு சொல்லைச் சார்ந்து இணையும், சாரியை. "அம்" என்றால் தன்மை. எனவே, தத்துவம் என்றால், "உலகின் தன்மை" அல்லது "மனிதனின் தன்மை / இயல்பு" எனப் பொருள் கொள்ளும். உலகின் தோற்றம், அமைப்பு, மாற்றம் ஆகியவற்றைப்பற்றியும், மனிதனின் இயற்கையான இயல்பு என்பதுடன், அவன் அடைய வேண்டிய உன்னத இயல்பைப் பற்றியும், இலக்கை பற்றியும், அதை அடைவதற்கு அவன் எடுக்க வேண்டிய முயற்சிகள் பற்றியும் தத்துவங்கள் விரித்துரைக்கின்றன.

வெளி, தீ, காற்று, நீர், நிலம் ஆகிய ஐந்து மூலங்களின் கலவைதான், இவ்வுலகம் என தொல்காப்பியம்கூட கூறியுள்ளது. இது, எவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய முன்மொழிவுதான். இவற்றுள் முதன்மையான மூலம், வெளி. வெளியின்றி, எந்த மூலமும் இருக்கக்கூட முடியாது. வெளி என்பது வெற்றிடமா அல்லது வெளிப்படாத நுண்மைப் பொருளின் இருப்பிடமா என்பதுதான் கேள்வி. இன்றைய அறிவியலின் கூற்றுப்படி, இருண்ட ஆற்றல் அல்லது கண்ணுக்குப் புலப்படாத நுண்ணியப் பொருள்தான், அண்டம் முழுமையும் ஊடுருவி உள்ளது. அதுவே வெளியாக உள்ளது. அந்த வெளிதான், புலனாகும் நுண்ணணுத் துகள்களாய் மாறி, கருகொண்ட பொருட்களாய் மாறி, பல பொருட்கள் கலந்து சிக்கலான கருவைக் கொண்டு நுண்ணுயிராக மாறி, பல நுண்ணுயிர்கள் ஒன்று சேர்ந்து, ஐந்து அறிவுகள் வரை கொண்ட விலங்குகளாய் மாறி, ஐந்து புலன்களால் பெறும் அறிவுகளின் முரண்பாட்டைத் தீர்க்க, கருவாக உருவான, ஆறாவது அறிவெனும் மனமுடைய மனிதராயும், பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளது. திருவள்ளுவரும், அகரம் எனும் எழுத்தே எல்லா எழுத்துகளுமாகி, சொற்களுமாகி பொருண்மை தருவது போல், வெளியை அகமாகக் கொண்ட இறைவனே, முதல் நுண்ணியப் பொருளாகத் தோன்றி, அண்டத்தில் உள்ள எல்லா பொருட்களாயும் மாறி, உயிர்களாயும் தோன்றி, வாழ்வாகவும் உள்ளான் எனக் கூறுகின்றார், தன் முதல் குறளில்:

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

இறைமையே எல்லாமானதால், இறைமைக்குள்தான், இறைமையாகவே, எல்லாமும், எல்லாரும் இருக்கின்றோம். மனித இனம், அண்ட இயக்கத்தின் ஒரு சிறிய பகுதியே. அண்டம், சூரிய மண்டலம், உலகச்சூழல் ஆகியவற்றைச் சார்ந்தே மனித இனம் தன் இருப்பை கொள்கின்றது. உலகமோ, சூரிய மண்டலமோ அழிந்தால், மனித இனமும் சேர்ந்து அழிய வேண்டியதுதான். உலகம் தானாக அழிந்தால் யாரும் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், மனிதன் தன்னுடைய பேராசையால், ஆத்திரத்தால் அழிக்காமலிருந்தால் சரி. இன்றைய நிலைமை, நாளை நிலையாமை ஆகிவிடலாம். நேற்று இருந்தது, இன்று இருக்கின்றது என்பதால், நாளையும் இருக்கும் என்ற அனுமானத்தில்தான் மனிதன் வாழ்கிறான். இறப்பு என்பது இயல்பு என அறிந்தும், இறவாமையை எண்ணுகிறான். தான், பிற

உயிர்களைவிட, விலங்குகளைவிட தனிச்சிறப்புடையவன் எனக் கருதுகிறான். இயற்கையை தனக்கு ஏற்றாற்போல் மாற்றி அமைத்துக் கொள்வதுபோல், இறப்பு எனும் இயல்பையும் தன்னால் மாற்றிவிட முடியும் என முனைகிறான்.

மனிதன் தன் அறிவாலும், சிந்தனையாலும், நிலைத்த தன்மையுடையது எதுவென தேடுகிறான். அதுவாகத் தான் மாறினால், தானும் நிலைபெற்று, அழிவின்றி, நிரந்தரமாக இருக்கலாம் என நினைக்கிறான். உடலின் இயக்கத்தையும், புலன்களின் உள்ளீட்டையும், மனத்தின் சலனத்தையும், உயிரின் துடிப்பையும் கடந்த, அப்படிப்பட்ட அகத்தேடலில், முழுமையான அசையாமையில், நுண்ணிய பொருண்மையின் இடையறாத பொழிவை, ஊடுருவுதலை, மெய்யுணர்வாய் உணர்ந்தான். அது அவனுக்கு அனந்தமாய் இருந்தது, ஆனந்தமாயும் இருந்தது. அந்த உணர்வையும் இழந்தவன், பொருண்மையும் ஆற்றலும் சலனமற்று, ஒருமையாய் உறைந்த, நிலைபேறு எய்தினான். புற உலகின் துவக்க நிலையும், இத்தகைய நிலைத்த தன்மையே எனத் துணிந்தான். இதை இறவாமை என்றான், அதை இறைமை என்றான். இறவாமையும் இறைமையும் ஒன்றே என்றான். தானும் இறைமை என்றான்.

இந்தியாவில் தோன்றிய தத்துவ மரபுகள், சித்தரியம், பௌத்தம், சமணம், அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் முதலிய அனைத்தும், இதையே ஒப்பீட்டளவில், காலத்திற்கும், கேட்போருக்கும் ஏற்றவாறு, வடிவங்களை மாற்றி மொழிகின்றன. சாரம் ஒன்றே!

மேற்கத்திய தத்துவ தேடுதலில், ஜெர்மானியர்கள் தலைமை வகித்தனர். குறிப்பாக, பிரடெரிக் ஹெகல், தத்துவப் புலமையில் தலைசிறந்து விளங்கினார். "பிரபஞ்ச இருப்பின் காரணம், மனிதனின் மூலம், இறைவன் தன்னைத் தானே உணர்ந்து கொள்கிறான்" என்று ஹெகல் கூறினார். மனிதன் தன்னை உணர்வதன் மூலமே, இறைமை தன்னை உணரமுடியும் என்றால், முதலில், மனிதன் தன்னை உணர்வதற்கான சூழல்களை உருவாக்க வேண்டும். அவனுக்கு ஓய்வு நேரம் ஒன்று இருந்தால்தான், அதற்கான முயற்சிகளை அவன் எடுக்க முடியும். அவனுடைய அடிப்படையான வாழ்வுத் தேவைகள் நிறைவேறினால்தான், அவன் மனம் ஒன்ற முடியும். அதனால்தான் காரல் மார்க்சும், உழைப்பாளர்களின், தொழிலாளர்களின் வேலை நேரத்தை, எட்டு மணியாக வரையறுக்கப் போராடினார். விவசாய உற்பத்தியிலும், தொழில் உற்பத்தியிலும், உழைப்பாளர்கள் உயிர்பிழைக்கக்கூட போதாத அளவே கூலிகள் தரப்பட்டது. விளைச்சலும் இலாபமும் இருந்தும், தங்கள் மூலதனத்தைப் பெருக்குவதிலேயே முதலாளிகள் நாட்டம் கொண்டனர். அதற்காக, தொழிலை இயந்திரமயமாக்கி கூலியைக் குறைத்துக் கொண்டே வந்தனர். விற்பனைச் சந்தையைக் கட்டுப்படுத்த முடியாமல், உழைப்பாளர்களின் ஊதியத்தை மட்டுமே மேன்மேலும் சுரண்டினர். இவ்வாறு கிட்டும் பெரும் உபரி மதிப்பை, முதலாளிகள், ஆடம்பர வாழ்க்கை

வாழ்வும், தொழிலை மேலும் இயந்திரமயமாக்கி உழைப்பாளர்களை மேன்மேலும் சுரண்டவுமே பயன்படுத்தினர். எனவே, உழைப்புக்கேற்ற ஊதியத்தையும் வேண்டி முன்வைத்துப் போராடினர், உழைப்பாளிகள்.

நீண்ட நெடிய போராட்டங்கள் மூலம், பல நாடுகளில், எட்டு மணி நேர பணிக்காலம் உறுதி செய்யப்பட்டுள்ளது. ஆனாலும், கனடா உள்பட, பல நாடுகளில், பணிநேரம் 10 மணிநேரம் முதல் 12 மணிநேரம் வரை நீடிக்கப்படுகின்றது. ஒரு ஆறுதல், ஒன்றரை மடங்கு ஊதியத்தைத் தந்து, ஈடு செய்து விடுகிறார்கள் அல்லது நீண்ட ஓய்வை அளிக்கிறார்கள். இன்றும் பல நாடுகளில், குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படவில்லை. அப்படி இருக்கும் சில நாடுகளில், முழுமையாக நடைமுறைப்படுத்துவதும் இல்லை. உழைப்பாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையிலான போராட்டம் நீண்டது, தொடர்வது.

எப்படி இருந்த போதிலும், உழைத்து உயிர்வாழ்வது மட்டுமே மனித இலக்கு அல்ல, தன்னை உணர்வது மட்டுமே மனித வாழ்வல்ல. குடும்ப, சமூக வாழ்வையும், துறவு, ஆன்மீக வாழ்வையும் இணைத்து, ஒரு சமநிலைப்படுத்தப்பட்ட வாழ்வியலைத் தருகிறார், திருவள்ளுவர். வாழ்வையும் வாழலாம், தன்னையும் உணரலாம். இதைவிட ஒரு முழுமையான வாழ்வியல் தத்துவம், உலகில் வேறெதுவும் இல்லை.

இவ்வாறு, வரலாற்றையும், தத்துவத்தையும் அறிந்து கொள்வதன் மூலம், தமக்கு நேர்ந்த சமூகப்படிநிலை செயற்கையானது என்றும், எவரும் எவரையும்விட உயர்ந்தவரோ, தாழ்ந்தவரோ பிறப்பில் இல்லையென்றும், பிறப்பின் பயன் வாழவும், தன்னை உணர்தலுமே என்றும் உணரலாம்.

கல்லாதவரையும், உழைக்காதவரையும் மட்டுமே கீழானவராக உரைக்கின்றார், வள்ளுவர். எனவே, சமூகப் படிநிலையில், கீழானவராக நிறுத்தப்பட்டோர், வாய்ப்புகள் மறுக்கப்பட்டோர், கல்வியில் சிறந்து விளங்கி, விவசாயம் மற்றும் தொழில்களில் உழைத்து, செல்வம் பெருக்கி, மனிதப் பண்புகளிலும், குணங்களிலும் சிறந்து, அதிகாரமிக்க பதவிகளில் அமர்ந்து, நேர்மையாக நடந்து, தேவையெனில் இடங்கள் பெயர்ந்து, ஒழுக்கமுள்ள குடும்ப சமூக வாழ்வை வாழ்ந்து, தன்னை உணர முயல வேண்டும். இதுவே, சாதிய கட்டமைப்பு உதிர்வதற்கான சூழல்கள். இதை நோக்கிய செயல்பாடுகளே, சாதியம் ஒழிவதற்கான முன்னெடுப்புகளாக இருக்க வேண்டும்.

# 22. உலகத்தீரே கொஞ்சம் கேளுங்கள்...

– வித்யாசாகர்

உலகத்தீரே கொஞ்சம் கேளுங்கள்...

அன்பால், நம்பிக்கையால், நமது அறத்தின் வலிமையால், பண்பின் உயர்வு கருதி நாம் இயற்கையால் மீண்டும் நிச்சயமாக மன்னிக்கப் படுவோம். மீண்டும் அனைவருமாய் வென்றெழுந்து வருவோம்.

மீண்டெழுவோமெனும் சமத்துவச் சிந்தனைகளோடு மேலும் ஆழ்மனத்திலிருந்து தூய தாயன்பு பெருக்கி, கருணையைக் கூட்டி, நட்பு வலுத்து, நானிலம் சிறக்க நாடெங்கும் நம்பிக்கையைப் பரப்புவோம், வாருங்கள்...

இப்போதைக்கு நம்மிடமிருக்கும் பெரும்பலத்தின் மூலமே இந்த நம்பிக்கை தான். நற்சிந்தனைகள் தான். நன்னடத்தையும் நல்ல ஆரோக்கியத்திற்கான புரிதலையும், மண்ணின் மரபூரிய மருத்துவமென அனைத்தோடும் சேர்ந்து நாம் விரைவில் மீண்டெழ மிக அரியதொரு நல்ல வாழ்க்கையை நாமெல்லோரும் வாழ்வோமெனும் நம்பிக்கை தான் இப்போதைக்கு நம்மோடு பிறந்த சொத்து.

மகிழ்ச்சி என்பது இம்மண்ணின் உயிர்க்கெல்லாம் பொது என்பதை மறந்ததொன்றே மனிதர் நாம் செய்த மாபெருங் குற்றம். அதைப் புரியும் தருணமிது. தெளியும் அறிவு பெறின்;அது நமக்குக் காலம் தரும் கொடை. இன்னொரு வாய்ப்பு என்பதை மகிழ்வோடு ஏற்போம்.

அதை ஏற்கும் அறிவு நமக்குண்டு. நமக்கு எல்லாம் புரிகிறது. எல்லாவற்றையும் எல்லோரும் உணர்கிறோம். எல்லாம் தெரிகிறது ஆனாலும் எதையும் எதற்கோ இன்னும் மறுக்கிறோம்.

மனதை உடைத்துக்கொண்டு வந்து விழிகளில் நிறையும் அழையைப்போல, நம் மனச்செருக்கு குபீரென பீரிட்டு வெளியே வந்து விழுந்து விடுமானால் பிறகு பாருங்கள் நமக்கு மரணம் பற்றிய பயம் உடனே போய்விடும். வாழ்வதற்கு தன்னைத்தானே நாம் வீரியத்தோடு தயாராகி விடுவோம்.

காரணம் நம்மில் பிரிவு எங்கே? நம்மில் உயர்ந்தோர் யார் தாழ்ந்தோர் யார்? பணமொன்றைத் தூக்கி ச்சீயென வெளியே வீசிவிட்டு பகட்டுத்தனமும் புகழின்றி மனதின் நிர்வாணத்தோடு கனவு கண்டு பாருங்கள் யாதுமற்று நம்மை; நாம் அத்தனைப் பேரும் ஒன்றே, ஒன்றேயெனப் புரியும்.

பிறகு இதில் யார் இறக்க? யார் பிழைக்க? பிழைத்தால் அத்தனைப் பேரும் பிழைப்போம். இறந்தால் அத்தனைப் பேரும் இறப்போம். நம்மில் பேதமில்லையென்று ஒன்றி எல்லோரும் நாதத்துள் நிறைக்க ஏற்போம்.

அப்போது அந்த தானெனும் சுடுமண் வந்து வெளியே கொட்டிவிடும். உள்ளே அழகாகத் தெய்வீகம் மலர்ந்துகொள்ளும். எல்லோர்மீதும் இன்னும் அன்பு சுரக்கும். பிற உயிர்கள் தான் மொத்தத்தில் பெரிதாகத் தெரியும்.

அப்படியொரு மனம் மலர்ந்த தெய்வீகத்தோடு தாய்மையோடு இவ்வுலகை நாம் காணவேண்டும். பேருவகையோடு மனதால் கட்டியணைத்து இந்த இயற்கை அன்னையை நாமெல்லோரும் கூட்டாகச் சேர்ந்து காக்கவேண்டும்.

ஒரு இலை பறிக்க மனசு அஞ்ச வேண்டும். ஒரு பூ பறிக்கக்கூட உயிர் வலிக்க வேண்டும். உயிர்கள் எனில் வெட்டுவாயா? பெண்கள் எனில் கழுத்தை அறுப்பாயா? எண்ணவே நமது மனம் பதைபதைக்க வேண்டும். பதைக்கும் உயிர்களின் வலியது புரிந்தால் யாரை அடித்தாலும் நமக்கும் வலிக்கும். யாரை நொந்தாலும் நமக்கும் நோகும்.

நோக வேண்டும். பிறருக்கு வலித்தால் நமக்கும் வலிக்குமே எனும் போலெண்ணி நாம் வாழவேண்டும். நாமும் மிருகம் தானே? ஆனால் அனைத்தையும் பகுத்தாராயக் கூடிய உயிரின் பச்சை வாசம் என்னவென்று புரிந்த மிருகமில்லையா? அது ஒவ்வொரு மனிதர்க்கும் பொருந்தவேண்டும்.

பசித்தால் வேறென்ன செய்ய? காய் காய்த்தால் பறிப்போம், கனி கனிந்தால் பறிப்போம், வேர் இலை விதை உயிர் கிளை மரம் குருவி பறவை உயிர்கள் அனைத்தையும் பசித்தால் பறிப்போம், பறிப்போம், தின்போம். பசி யாரை விட்டது? பசித்தால் புசிப்போம் தான்; ஆனால் கூடவே அவைகளைக் காப்போம் என்பதே கவனத்தில் வலுக்கவேண்டும்.

மரம் வளர்த்து உயிர் பெருக்கி காற்று மணக்க மணக்க இந்த மண்ணை பெரு வாஞ்சையோடு காப்போம். எல்லோரையும் எப்போதும் நாம் வாழ்விப்பவர்களாகவே பிறக்கிறோம். அதற்கே போராடிக் கொள்ளும் மகோன்னத தருணமிது.

எனவே, போராட்டத்தை ஆயுதங்களால் அல்ல மனதால் கைக்கொண்டு எண்ணங்களால் வலிமைப் பூண்டு அன்பினால் ஒன்றிணைந்து உடலாகத் தனித்தும் உயிராகச் சேர்ந்தும் இப்பிரபஞ்சமென அறிவால் கனத்திருப்போம் உலகத்தீரே.

நம்பிக்கையொன்றே வாழ்க்கை. நம்பிக்கை கொண்டே உயிர்ப்பு. நம்பிக்கையொன்றே நம்மிடம் முழுதாய் இருக்கும் எல்லாம். அத்தகைய ஆழமான நம்பிக்கை நிச்சயமாக நமைக் காக்கும். நாமிந்த பிரபஞ்சத்தைக் காக்க மட்டும் மனதளவில் தயாராவோம்.

ஆயிரம் கரோனாவின் பிரச்சனை என்றாலும் பயமென்றாலும், அதற்கெல்லாம் அப்பாலோர் இயற்கையின் பெருஞ்சிரிப்பை நாம் இரு கண்கொண்டு காணாமல் இல்லை. இன்று இயற்கை நம் கண்ணிற்குக் காட்டும் பேரெழில் பல மனித இறப்புகளுக்கு நடுவேயும் தனித்து நின்றுகொண்டு தனக்கானதொரு நியாயத்தைப் பேசி பேசி கத்தி கதறி வெளிறிய முகத்தோடு தான் அப்பாவி மனிதர்களையும் சேர்த்தே கொன்றுகொண்டுள்ளது.

அதன் வலியைப் புரிவோம். இயற்கை நம்மை எக்கணத்திலும் முழுதாய் கொல்லாது. புரிய வாய்ப்பு தந்து தந்தே தன்னை கோடான கோடி வருடங்களுக்கும் மேலாக நம்மோடு உயிராகவும் உடலாகவும் மரமாகவும் செடியாகவும் பூவாகவும் பறவையாகவும் கடலாகவும் மலையாகவும் வியாபித்து வைத்து நதியின் எழிலென எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது.

அதன் நியாயத்தை, இயற்கையைக் காக்க வேண்டிய அவசரத்தை, அதற்கான அக்கறையை, மிகப் பெரியதாகப் புரிந்து நம் அறிவிற்குள் ஏற்றிக்கொள்ள வேண்டும். என்னைக் கேட்டால் இது ஒரு சபதத்திற்கான தருணம் என்றெண்ணுகிறேன். காரணம், உடல்நலமின்றி நான் மருத்துவரிடம் செல்லும் காலத்தில் 'எனக்கு ஓய்வில்லை, அதனால் உடலில் கவனம் செலுத்தவில்லை, பல வேலைகளில் இருக்கிறேன்' என்பேன், அதற்கு, மருத்துவர் கேட்பார்; உங்களைத் தூக்கி நாளை ஐ.சி.யூ.வில் வைத்துவிட்டால் என்ன செய்வீர்கள் என்பார்.

அப்படித்தான் இந்த இயற்கை நமைத் தூக்கி இன்று ஐ.சி.யூ.வில் வைத்துவிட்டு இன்னபிற அனைத்தையும் உடனே மற, உன்னை நினை, உனது மண்ணை நினை, உனைச் சூழ்ந்த இந்த உலகை உனதென நினை, உனக்காக மட்டும் இந்த நானிலத்தை மாசுபடுத்தி ஒழித்து வெப்பத்தால் அலைக் கற்றைகளால் மின்னெந்திரங்களைக் கொண்டு எமை மாய்ப்பதை நிறுத்து என்று உயிர்க்கொன்று உயிர்க்கொன்று கத்தி கத்தி சொல்கிறது. இனியும் நாம் மாறாது போனால் இன்னும் எத்தனை கரோனா வருமோ என்று தெரியாதெனக் கொஞ்சம் மிரட்ட மட்டுமே செய்கிறது, அந்த நம் மருத்துவரைப் போல.

அல்லாது இயற்கை நமை என்றும் காக்குமேயொழிய கொல்வதில்லை. எனவே அது புரிந்து ஒரு நல்ல சபதமெடுப்போம் "எப்போதுமே இனி மாறமாட்டேன் இயற்கையே, உனை நெஞ்சாரக் காப்பேன், எதன் பொருட்டும் உன்னை விட்டுத் தருகிலேனென" நாம் தனித்தனியே ஒவ்வொருவராய் சத்தியம் செய்து, நம் எதிர்கால பயணத்திற்காக உயர் பக்குவமடைய வேண்டிய வேளை

இதுவென்று எண்ணியொரு இயற்கைக்கான தாய்மைப்பூண்ட சாத்தியத்தை ஒன்றாய் கூடி எடுப்போம்.



இந்த உயிர்களின் மகிழ்ச்சி, பச்சை மரங்களின் ஆடல் பாடல், குருவி காக்கைகளின் கும்மாளம், வானத்தில் மிக ஒய்யாரமாகக் கேட்கும் காற்றின் ஒலி, கடலின் இசை, மழையின் ஆட்டமென இவை அனைத்தையும் நாம் மீண்டும் மீண்டுமாய் இனி நமது தேவைக்காகவேனும் பாதுகாக்கத் துவங்குவோம். நல்லதே எண்ணுவோம். எல்லாம் மாறும். எல்லாம் நன்றே மாறுமென்று நம்புவோம். நம்பிக்கையொன்றே வாழ்க்கை. நம்பிக்கையொன்றே எல்லாம்.

வாழ்க மக்கள். வாழ்க உயிர்கள். ஓங்கியெழுக எனது இயற்கையின் நேசம். உள்ளார்ந்து அமர்க எம் பிற உயிர்களின் பற்று. உலகெங்கும் அமைக அமைதி நன்றே. நலமே எங்கும் விழைக நன்றே.

தொடர்பு: வித்யாசாகர் (vidhyasagar1976@gmail.com)

# 23. பரணிமண்ணின் வசைச்சொல் - "பேதியில போயிருவ"

— பென்ஸி

"பேதியில போயிருவ" என்ற வசையின் பொருள் வாந்தி அல்லது பேதி எடுத்து மரணமடையக் கடவாய் என்ற சாபம். இது பரணிமண்ணின் ஒரு வசைச்சொல்.

இதன் வரலாற்றைப் பார்ப்பதற்கு முன்னர் கும்பமேளா பற்றியும் அறிவோம். இந்து வேத ஜோதிட இயலின்படி ஒவ்வொரு 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பைசாகி மாதத்தில் சூரியனின் ஐந்தாவது கோளான வியாழன் கும்பம் ராசிக்குள் நுழையும்போது ஹரித்துவாரில் (உத்திரகாண்ட் மாநிலத்திலுள்ளது) கும்பமேளா நடத்தப்பட்டு வருகிறது என்கிறது 1759 ஆம் ஆண்டு எழுதப்பட்ட "சஹார் குல்சான்" ( "The Chahar Gulsan") என்ற நூல். கடைசிக் கும்பமேளா 2010 ஆம் ஆண்டு நடைபெற்று, அடுத்த கும்பமேளா 2021 ஆம் ஆண்டு நடத்தப்படவேண்டும் என்ற அறிவிப்போடு முடிந்தது.

ஹரித்வார் நகரில் 1783 ஆம் ஆண்டும் ஒரு கும்பமேளா கொண்டாடப்பட்டது. இந்தியப் புனிதப் பயணியர்களோடு அரேபிய, ஆசிய, ஐரோப்பிய வணிகர்களுமாக சுமார் 10 லட்சம் முதல் 20 லட்சம் வரை மக்கள் அந்த மகாத் திருவிழாக் கொண்டாட்டத்தில் பங்கேற்றனர் என்று பதிவுசெய்கிறது வரலாறு. திருவிழாவின் முதல் நாளிலேயே காலராத் தொற்று ஏற்பட்டு எட்டு நாட்களில் 20,000 வரை மக்கள் மரணமடைந்தனர். ஆனால் 12 ஆம் நாள் விழா நிறைவுபெறும் நாளில் காலராத் தொற்றால் பாதிக்கப்பட்ட அனைவரும் குணப்படுத்தப்பட்டனர். எனவே ஹரித்வார் நகரத்திலேயே காலராத் தொற்றை உருவாக்கிய பாக்டீரியாக்களுக்குச் சமாதி கட்டப்பட்டது. இதைக் காலரா எபிடமிக் (Epidemic) என்கிறோம்.

இதிலிருந்துதான், தனக்குத் துரோகம் இழைத்தவர்களை "பேதியில போயிருவ" என்று சாபமிடுவது போன்ற வசவுச் சொல் உருவாக்கப்பட்டிருக்கலாம்.

இதே காலராத் தொற்று 19 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கி, சர்வதேசப் பெருந்தொற்றாக உருக்கொண்டு தொடர்ந்து 24 வருடங்களில் (1899 -

1913) "The first to sixth pandemics Cholera"ஆகப் பெயர் பெற்று பெயருக்கேற்ப 1.5 கோடி மக்களை மரணமடைய வைத்துவிட்டு விடைபெற்றது. இப்பொழுது எல்லாம் வாந்தி பேதி ஏற்பட்டால் தானே மருந்துக்கடையில் சொல்லி மருந்து வாங்கிக் குணம்பெறும் நிலைக்கு வந்துவிட்டோம். எனவே கொரோனா வைரஸ் ( COVID 19) தொற்றையும் வென்று வெளிவருவோம்.

வரலாற்றின் பக்கங்களில், கொரோனாவைவிடவும் வேகமாகப் பரவும் நோய்களும் இருந்திருக்கின்றன. அவைகளையும் வென்றிருக்கிறோம். கோவிட் - 19 ஐ போல, நம் வரலாற்றில் சர்வதேசப் பெருந்தொற்றுப் பாதிப்பாக அறிவிக்கப்பட்ட சில நோய்ப் பாதிப்புகள், அவை ஏற்பட்ட ஆண்டு, அவை ஏற்படுத்திய மரணங்கள் போன்றவற்றின் விவரம் ஆகியன, ஆண்டு - மரணங்கள் - நோய் - வைரஸ் ( வரிசை 7 - மட்டும் காலரா பாக்டீரியா ) என்ற வரிசைப்படி.

1. கி.பி. 165 - 180 - மரணம் 50 லட்சம்.
ஆன்டனைன் பிளேக் ( Antonine Plague)

2. கி.பி. 541 - 542 - 3.5 கோடி.
ஜஸ்டினியன் பிளேக் ( Plague of Justinian)

3. கி.பி. 735 - 737 - 10 லட்சம்.
ஜப்பானிய பெரியம்மை ( Japanese Smallpox)

4. கி.பி. 1350 - 20 கோடி.
ப்யூபானிக் பிளேக் (The Black Death or The Pestilence, Great Bubonic Plague)

5. கி.பி. 1665 - 5.6 கோடி.
கிரேட் பிளேக் ( The Great Plague of London)

6. இதே கி.பி. 1665 வருடத்தில் கோடைக்காலத்தில் இதே கிரேட் பிளேக், 30 லட்சம் மரணங்கள்.
கிரேட் பிளேக்

7. கி.பி. 1899 - 1923 - 1.5 கோடி.
காலராத் தொற்று - *பாக்டீரியா (The first to sixth pandemics Cholera)

8. கி.பி. 1855 - 59 - 1.2 கோடி.
(இந்தியாவில் மட்டும் சுமார் ஒரு கோடி)
மூன்றாம் பிளேக் (Third Plague)

9. கி.பி. 1889 - 1900 - 1.5 லட்சம்.
ரஷ்யன் ஃப்ளூ (Russian Flu or Asiatic Flu)

10. கி.பி. 1918 - 19 - 5 கோடி.
ஸ்பெய்ன் ஃப்ளூ (Spanish Flu)

11. கி.பி. 1957 - 58 - 11 லட்சம்.
ஆசிய ஃப்ளூ (Asian Flu - the Influenza A/H2N2)

12. கி.பி. 1968 - 70 - 10 லட்சம்.
ஹாங்காங் ஃப்ளூ (Hong Kong Flu)

13. கி.பி. 1981 - 2.2 கோடி.
எய்ட்ஸ் (HIV / AIDS.HIV - human Immunodeficiency Virus, AIDS - Acquired Immune Deficiency Syndrome)

14. கி.பி. 2002 - 774
சார்ஸ் ( SARS - Severe Acute Respiratory Syndrome)

15. கி.பி. 2009 - 19 நாடுகள் - 2 லட்சம்
பன்றிக்காய்ச்சல் ( Swine Flu-H1N1)

16. கி.பி. 2012 - 27 நாடுகள்- 858
மெர்ஸ் வைரஸ் ( MERS - CoV)

17. கி.பி. 2012, 2,000 அதிகமாக
மெர்ஸ் வைரஸ் (MERS - Middle East Respiratory Syndrome, CoV - Coronavirus)

18. கி.பி. 2014 - 11,323.
எபோலா வைரஸ் (Ebola Virus)

19. கி.பி. 2019 - இதுவரையில் உலகம் முழுவதிலும் 5.5 லட்சம் மக்களைப் பாதித்திருக்கிறது.

கோவிட் 19 (COVID 19)

199 நாடுகளை அச்சுறுத்தி வரும் கொரோனா வைரஸ் பாதிப்பானது உலக வரைபடத்தில் மீதம் வைத்திருப்பது அன்டார்டிக் கண்டத்தை மட்டும்தான்.




1. "ல பெட்டி ஜர்னல் "(Le Petit Journal (The Small Journal) இதழில் வெளிவந்த வரைபடம். Drawing of Death bringing the cholera.



NOTICE.

PREVENTIVES OF

CHOLERA!

Published by order of the Sanatory Committee, under the sanction of the Medical Council.

BE TEMPERATE IN EATING & DRINKING!

*Avoid Raw Vegetables and Unripe Fruit!*

Abstain from COLD WATER, when heated, and above all from *Ardent Spirits*, and if habit have rendered them indispensable, take much less than usual.

2. Hand bill from the New York City Board of Health, 1832.

The outdated public health advice demonstrates the lack of understanding of the disease and its actual causative factors.

தொடர்பு:

கடையநல்லூர் பென்ஸி

https://www.facebook.com/kadayanallur.benzy

# 24. நூல் விமர்சனம் - ராகுல் சாங்கிருத்யாயன்

## – முனைவர் க.சுபாஷிணி

சில ஆண்டுகளுக்கு முன்னர் வால்காவிலிருந்து கங்கை வரை நூலை வாசித்தபோது மிகப்பெரிய பிரமிப்பு. எப்படி இந்த நூலாசிரியரால் இவ்வளவு செய்திகளை இவ்வளவு சுவாரசியமாகத் தர முடிகிறது என்ற வியப்பு அது. நான் மிக அண்மையில் வாசித்த நூல் அதே நூலாசிரியர் எழுதிய மற்றுமொரு நூல் `ஊர்சுற்றிப் புராணம்`. என்னுடைய ஆழ்மனதின் ஆர்வத்தோடு இணைந்து செல்வதால் இந்த நூலாசிரியரைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள வேண்டும் என்று தேடியதில் ஒரு நூல் கிடைத்தது.

ராகுல் சாங்கிருத்யாயன் - சாகித்ய அகாதமி வெளியீடாக பிரபாகர் மாச்வே என்பவரால் ஆங்கில மொழியில் எழுதப்பட்டு 1986ஆம் ஆண்டு வெளியீடு கண்டது இந்த நூல். இதனைத்தமிழாக்கம் செய்து திரு.வல்லிக்கண்ணன் தமிழ் வாசகர்களுக்காக வழங்கியிருக்கின்றார்.






இந்த நூலில் ஐந்து பகுதிகள் இருக்கின்றன.முதலில் வருவது ராகுல் சாங்கிருத்யாயன் பற்றிய ஒரு அறிமுகம். இது ஆரம்பம் தொடங்கி இறுதிவரை அவரது வாழ்வின் முக்கிய நிகழ்வுகளை மட்டும் மையப்படுத்தி அவரது சிறப்புத் தன்மையை வெளிப்படுத்தி விவரிக்கும் ஒரு பகுதி. இரண்டாம் பகுதி வாழ்க்கை என்ற தலைப்பில் பண்டிதர் ராகுல் சாங்கிருத்யாயனின் வாழ்க்கை குறிப்பாகவும்

அவரது கல்வித் தேடல், அவர் செய்துகொண்ட பெயர் மாற்றங்கள் அப்போதைய நிகழ்வுகள், திருமணம், வாழ்க்கைத் துணை பற்றிய செய்திகள், மற்றும் விரிவான அவரது பயணங்கள், திபெத், ரஷ்யா, இலங்கை, ஆகிய நாடுகளில் அவர் நீண்ட காலம் தங்கியிருந்து பணியாற்றிய அல்லது ஈடுபாடு கொண்ட செயல்பாடுகளைப் பற்றி விவரிக்கும் பகுதி.

மூன்றாவதாக வருவது படைப்புகள் என்னும் பகுதி. ராகுல் சாங்கிருத்யாயன் ஒரு துறையில் மட்டுமே திறன் பெற்றவர் அல்ல. பல துறைகளில் ஈடுபாடு கொண்டு,அதிலும் குறிப்பாக, ஆழமான ஈடுபாடு கொண்டு வெவ்வேறு துறைகளைப் பற்றி தனது ஆய்வுகளையும் சுய அனுபவங்களையும் கருத்துக்களையும் அவர் நூலாக வடித்திருக்கிறார். அந்த வகையில் இந்தப் பகுதியில் அவரதுஎழுத்தாக்கத்தில் வெளிவந்த கற்பனை படைப்புகள், வாழ்க்கை வரலாறு -சுயசரிதை, பயண விவரிப்புகள் அல்லது பயணக்குறிப்புகள் என்ற வகையிலான செய்திகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

இதற்கு அடுத்து வருவது நான்காவது பகுதி. இது அவரது இலக்கிய சாதனைகளை விவரிக்கும் ஒரு பகுதி. இன மத பேதமற்று, அறிவு ஒன்றை மட்டுமே தேடுவதைக் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர் ராகுல் சாங்கிருத்தி யாயன் என்கின்றார் நூலாசிரியர். இந்தப் பகுதியில் அவரது முக்கிய நண்பர்களைப் பற்றிய தகவல்களை நூலாசிரியர் வழங்குகின்றார். நூலாசிரியர் பிரபாகர் அவர்களும் ராகுல் சாங்கிருத்யாயனுக்கு உற்ற நண்பராக இருந்தவர் என்ற கருத்துக்களையும் நூலில் அறியமுடிகின்றது என்பதோடு ஒருசில இலக்கியப் பணிகளில் ராகுலுடன் நூலாசிரியர் பிரபாகர் இணைந்து செயலாற்றி இருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

நூலின் இறுதிப் பகுதியில் இரண்டுகுறிப்புகள் இணைக்கப்பட்டிருக்கின்றன. அதில் முதலாவது ராகுலின் வாழ்க்கையில் நிகழ்ந்த மிக முக்கிய நிகழ்ச்சிகளின் பட்டியல். இரண்டாவது பண்டிதர் ராகுல் சாங்கிருத்யாயன்னின் படைப்புகள். இந்தப் பட்டியலைப் பார்க்கும்போது வாசிக்கும் நமக்கே திகைப்பு ஏற்படுகின்றது. நாவல்கள்,சிறுகதைகள், சுயசரிதை நூல்கள், வாழ்க்கை வரலாறு நூல்கள்,பயணநூல்கள், கட்டுரைகள் என 74 இலக்கிய நூல்கள் இந்தப் பட்டியலில் இடம் பெறுகின்றன. இதற்கடுத்து, இதர நூல்கள் என்ற தொகுப்பில் அறிவியல்,சமூகவியல், அரசியல், தத்துவம், சமயம், பயண நூல், அகராதி மற்றும் லெக்சிகன், இலக்கிய வரலாறு, நாட்டார் பாடல், ஆய்வு, வரலாறு ,தொகுப்பு, மொழிபெயர்ப்பு, சமஸ்கிருத பதிப்பித்தல் அல்லது மொழிபெயர்ப்பு என 72 நூல்கள் பட்டியலில் இடம் பெறுகின்றன.



1893 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 9ஆம் தேதி உத்தரப்பிரதேசத்தின் அசாம்கார்க் மாவட்டத்திலுள்ள கனிலா சர்க்கார் பன்னூர் என்னும் கிராமத்தில் பிறந்தார். அவரது இளமைப் பருவம் துயரம் நிறைந்த அனுபவத்தையே அவருக்கு வழங்கியது. மிக இளம் வயதிலேயே தனது அன்னையையும் சகோதரியையும் இழந்தார். அவருக்கு மிகச் சிறிய வயதிலேயே திருமணம் நடைபெற்றிருக்கின்றது. ஆனால் யாருடன் நடைபெற்றது என்பதை அறியும் முன்னரே அவர் தனது பயணத்தைத் தொடங்கி விட்டதால் அந்தத் திருமணம் அவரது வாழ்க்கையில் முக்கிய இடம் பெறவில்லை.

ராகுலின் வாழ்க்கையில் 1915 முதல் 1922 வரையிலான காலகட்டம் முக்கியத்துவம் பெறுகின்றது. இளம் வயதிலேயே உலகத்தை அறிந்து கொள்ள வேண்டும் என ஓரிருமுறை வீட்டிலிருந்து வெளியேறி பிறகு மீண்டும் வீட்டுக்குத் திரும்பி வந்தவர் தனது தேடலுக்கு எல்லை இல்லை என்பதை உணர்ந்து கொண்டு இயல்பான வாழ்க்கையிலிருந்து புரட்சிகரமான ஒரு வாழ்க்கையை முன்னெடுத்த காலகட்டமிது.

ராகுல் தன் கைப்பட எழுதிய அவரது குறிப்புகள் 3000 பக்கங்களுக்கு மேலாகும். அவரது படைப்புகளும் குறிப்புகளும் இந்தி, சமஸ்கிருதம், பாலி, திபெத், போஜ்புரி ஆகிய மொழிகளில் எழுதப்பட்டவை. அவரது நூல்கள் இன்று

தமிழ் உட்பட பல்வேறு இந்திய மொழிகளிலும் ஆங்கிலம் மற்றும் ரஷ்ய, பர்மிய மொழிகளிலும் வெளிவந்துள்ளன.ராகுல் சாங்கிருத்யாயனின் வாழ்க்கைக் குறிப்பைக் கூறும் இந்த நூலை எழுதிய நூலாசிரியர் பிரபாகர் 1948ஆம் ஆண்டு அலகாபாத் இந்தி சாகித்திய சம்மேளனத்தில் அவரோடு இணைந்து 16,000 வார்த்தைகள் கொண்ட அலுவலககாரியத்திற்கான சொற்களை விளக்கும் ஆங்கில-இந்தி அகராதிநூல்தயாரிப்பதில் பணியாற்றியிருக்கின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

ராகுல் சாங்கிருத்யாயனின் வாழ்க்கையில் பயணங்களே முக்கிய இடம் பெறுகின்றன. ஊர் ஊராகச் சென்று கொண்டே இருக்க வேண்டும். ஒவ்வொரு ஊரிலும் அங்குள்ள சூழலுக்கேற்ப மக்களையும். ஊர்களின் சிறப்பையும் புரிந்துகொண்டு வாழ்க்கை பயணத்தைச் செலுத்த வேண்டும். புதிய செய்திகளைக் கற்கவேண்டும். புதிய அனுபவங்களைத் தேடிப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவரது முழு வாழ்க்கையும் அமைந்தது. முழுமையான பள்ளிக் கல்வி என்பது அவரது வாழ்க்கையில் இடம்பெறவில்லை என்றாலும் அவரது தீவிர தேடுதலும் கற்றலும் அவர் ரஷ்யாவின் லெனின்கிராட் பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதப் பேராசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பையும், இலங்கையில் வித்யாலங்காரா பல்கலைக்கழகத்தில் பௌத்த தத்துவவியல் பேராசிரியராகப்பணியாற்றும் வாய்ப்பினையும் அவருக்கு ஏற்படுத்திக் கொடுத்தது என்பது வியக்க வைக்கிறது.

தனது வாழ்க்கையில் அவர் நான்கு முறை திபெத் நாட்டிற்குச் சென்றிருக்கின்றார். இறுக்கமான கெடுபிடிகளை சந்தித்த போதும் பல்வேறு வகையில் தான் சந்தித்த தடைகளையெல்லாம் கடந்து அவரது ஒவ்வொரு பயணங்களும் அமைந்திருக்கின்றன.

ராகுல் சாங்கிருத்யாயன் பிறந்தபோது அவருக்கு இட்ட பெயர் கேதார்நாத் பாண்டே. தனது பத்தொன்பதாவது வயதில் அவர் ராகுல் பராசா மடத்தில் முறையாக சாதுவாகச் சேர்ந்தபோது அவரது பெயர் ராம் உதார் தாஸ் என மாற்றப்பட்டது. அந்த மடத்தின் வருங்கால வாரிசாகவும்தலைவராக வருவதற்கு வாய்ப்பிருந்தும், சடங்கு சம்பிரதாயங்களில் ஈடுபாடின்றி அவர் அங்கிருந்து வெளியேறினார். வெளியேறினார் என்று சொல்வதற்குப் பதில் ஓடிப்போனார் என்று சொல்வதுதான் சரியாக இருக்கும்.

தொடர்பு: முனைவர் க. சுபாஷிணி (ksubashini@gmail.com)

# 25. எனது ஊர்சுற்றிப் புராணம்

## — முனைவர் க.சுபாஷிணி

**சட்ராஸ்/சதுரங்கப்பட்டினத்தில் ஒரு நாள்**

நீங்கள் உங்கள் நகரைத் துறக்கத் தயாரானால் ஆயிரக்கணக்கான நகரங்கள் உங்களை வரவேற்க முன்வரும். நீங்கள் உங்கள் கிராமத்தை விட்டு வெளியேறுங்கள். ஆயிரக்கணக்கான கிராமங்கள் உங்களை வரவேற்கத் தயாராக இருக்கும். ஒருசில நண்பர் சுற்றத்தாருக்குப் பதிலாக ஆயிரக்கணக்கான நண்பர்களும் சுற்றத்தாரும் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

- ஊர்சுற்றிப் புராணம்; ராகுல் சாங்கிருத்யாயன்

19.1.2020



தமிழகத்தில் கடற்கரை பகுதி நகரம் என்பதோடு அதிகம் பேசப்படாத மீனவர்கள் வாழ்கின்ற சதுரங்கப்பட்டினம் நகரிலுள்ள டச்சுக் கோட்டை இன்று இந்தியத் தொல்லியல் துறையினால் பாதுகாக்கப்படும் தொல் சின்னங்களுள் ஒன்றாக உள்ளது. டச்சுக்காரர்கள் தமிழகத்தில் தங்கள் வணிகத்தையும் சமய முயற்சிகளையும் நிலைநாட்ட முயன்ற கி.பி. 17, 18 ஆகிய காலகட்டங்களில் இப்பகுதி டச்சுக்காரர்கள் நிறைந்த ஒரு பகுதியாக அமைந்திருந்தது. இப்பகுதியைக் கண்டுவரும் நோக்கில் நேற்று ஒரு நாள் பயணம் சென்றிருந்தேன்.

எப்போதும்போல வாகனத்தில் செல்வதைவிட பொதுவாகனத்தில் பயணம் சென்று இப்பகுதியை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் இருந்தது. அதனால் ரயில், ஷேர் ஆட்டோ, பேருந்து எனப் பயணம் செய்து மக்களின்

வாழ்வியலையும் அறிந்து கொள்ளும் வகையில் பயணத்தை அமைக்கலாம் என்று தோன்றியது.

சென்னை நுங்கம்பாக்கத்தில் இருந்து செங்கல்பட்டு செல்லும் ரயில் பயணம் முதலில். அதில் பெண்களுக்கான பகுதியில் ஏறிக்கொண்டேன். 100-க்கும் மேற்பட்ட பெண்கள் அந்தப் பகுதியில் இடித்துக் கொண்டு அமர்ந்திருந்தார்கள். பலர் நின்றுகொண்டிருந்தார்கள்; சிலர் ரயில் பெட்டியில் தரையிலேயே அமர்ந்திருந்தார்கள். கூட்டம் அதிகமாக இருந்ததால் நான் நின்றுகொண்டே பயணிக்கும் சூழல். ஆயினும் கையில் ராகுல் சாங்கிருத்யாயன் எழுதிய ஊர் சுற்றிப் பயணம் நூல் இருந்ததால் வாசிக்கத் தொடங்கினேன். பயணம் சுவாரசியமாகத் தொடங்கியது.

அவ்வப்போது ரயில் நிற்கும் நிலையத்தில் சிலர் ஏறுவதும் இறங்குவதும் இயல்பான நடவடிக்கை. கூட்டம் அதிகரித்துக் கொண்டே சென்றது. மல்லிகைப் பூவின் மணமும், கலவையான பல உணவு பொட்டலங்கள் திறந்து சாப்பிடுவதின் அடையாளமாக உணவின் மனமும் கலந்து ரயில் பெட்டியை நிறைத்தது. ரயில் பெட்டியில் பயணிக்கும் போது சாப்பிடுவதைத் தவிர்க்கலாம் என்பது எனது தனிப்பட்ட கருத்து. ஆனால் தமிழகத்தில் இயல்பாகவே பயணத்தில் பசிக்கு உணவு சாப்பிடுவது அத்தியாவசியம் என்பது ஒருபுறமிருக்க, உணவு சாப்பிடுவதும் ஒரு பொழுதுபோக்கு என்ற நிலை இருக்கின்றது என்பதை நான் உணர்கிறேன்.

ரயிலில் இருந்த ஒரு பெண்ணின் கையிலும் நூல் ஏதும் இல்லை. இது ஐரோப்பாவில் நாம் ரயில் பயணம் செல்லும் போது காணும் காட்சியிலிருந்து மாறுபாடான ஒரு காட்சி. ஏனெனில் ரயில் பயணங்களில் ஐரோப்பிய மக்களில் பெரும்பாலானோர் கைகளில் ஏதாவது ஒரு நூலோ அல்லது பத்திரிக்கையோ இருப்பது மிக இயல்பு. ஆனால் இங்கோ ஒருவரது கைகளிலும் ஒரு பத்திரிக்கை கூட காணவில்லை. தமிழகப் பெண்களின் வாசிப்பு நிலை குறித்த சிந்தனை என் மனதில் கேள்விக்குறியாக நிற்கின்றது.

நான் பயணித்த ரயில் பகுதியில் பெரும்பாலான பெண்களின் கைகளில் செல் போன் இருந்தது. அதில் நகைச்சுவை நடிகர்களின் காணொளிகள், பாடல் காட்சிகள் ஓடிக் கொண்டிருந்தன. சிலர் சாட் செய்து கொண்டும் குறுஞ்செய்தி பரிமாறிக் கொண்டுமிருந்தனர்.

ரயிலில் பயணத்தின் ஊடே வணிகமும் நடைபெறுகிறது. ஒரு குறவர் பெண் ஒரு நிலையத்தில் ஏறிக்கொண்டார். உரத்த குரலில் பாசி மணிகளையும் பிளாஸ்டிக் பொருட்களையும் கைகளில் ஏந்திக் கொண்டு உரத்த குரலில் கூவிக் கொண்டு வந்தார். சில பெண்கள் அவரிடம் பொருட்கள் வாங்கிக் கொண்டார்கள்.










சற்று நேரத்தில் பதினெட்டு வயது மதிக்கத்தக்க, கந்தலான ஒரு சுடிதார் உடை அணிந்த இளம்பெண் சமோசா கூடையைத் தூக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தார்.

`ஐந்து சமோசா பத்து ரூபாய்` என்று உரத்த குரலில் கூவி வியாபாரம் செய்து கொண்டு வந்தார். சில பெண்கள் அவரிடம் வாங்கினார்கள். ஒரு பெண்மணி அவரிடம் இன்னொரு நிலையத்தில் 7 சமோசா பத்து ரூபாய்க்குக் கிடைக்கிறது என்று பேரம் பேசினார். `ஐயாயிரம் ரூபாய்க்குக் கவலைப்படாமல் பட்டுச்சேலை வாங்கும் பெண்கள் பத்து ரூபாய்க்கு 5 சமோசா வாங்குவதில் கூட பேரம் பேசுகிறார்களே`, என்ற எண்ணம் என் மனதில் தோன்றாமல் இல்லை.

இடையில் ஒரு மூன்றாம் பாலினப் பெண் ஒருவர் ஏறிக்கொண்டார். அவரும் உரத்த குரலில் ஏதோ கூற, ஒரு சில பெண்கள் கையிலிருந்த காசுகளை அவரது கையில் வைக்க, இவர் காசு கொடுத்த பெண்ணின் தலையில் கையை வைத்து ஆசீர்வாதம் கொடுப்பது என்ற ஒரு சடங்கு நடந்தது. அவர் மிகுந்த உரிமையோடு காசு கேட்பது போல அந்தச் சூழல் எனக்குத் தோன்றியது. அடுத்து, கண்பார்வையற்ற ஒரு இளைஞர் ஒரு இளம் பெண்ணையும் அவள் கையில் குழந்தையுடன் என அழைத்துக் கொண்டு ஒரு நிலையத்தில் ஏறிக்கொண்டார். அவர் தன் பார்வைக் குறைவைக் காரணம் சொல்லி தனக்குக் காசு கொடுக்க உரத்த குரலில் கேட்டுக்கொண்டார். சில பெண்கள் காசு கொடுத்தனர்.

இப்படி பலதரப்பட்ட நிகழ்வுகள் அந்த மகளிர் ரயில் பகுதிக்குள் நிகழ்ந்து கொண்டிருந்தன. நூல் வாசிப்பிற்கு இடையே இந்த நிகழ்வுகளையும் நான் கவனித்துக் கொண்டிருந்தேன்.

பல வண்ணக் கலவையாகக் கண்களை நிறைந்திருந்த ரயில் பெட்டியிலிருந்து செங்கல்பட்டு ரயில் நிலையத்தில் நான் இறங்கிக் கொண்டேன். என்னுடன் சதுரங்கப்பட்டினம் செல்ல வந்திருந்த தோழர் ரேஷல் என்னைச் செங்கல்பட்டில் சந்திப்பதாகத் திட்டம். ரயில் நிலையத்தில் படிகளில் ஏறி வரும்போது இடதுபுறத்தில் கடலைக் காண்பது போன்ற ஏரி. தூரத்தில் சிறிய குன்றுகள், பசுமையுடன். ஏரிக்கரை மேல் ஏராளமான குப்பைகள். இயற்கையை பாழ்படுத்தும் மனிதர்களை மனதிற்குள் சபித்துக் கொண்டேன்.

படிகளின் மேல் ஏறி வரும் போது ஒரு பகுதியில் நின்று ஏரியை ரசிக்கத் தோதாகப் படிகள் உள்ளன. நான் அங்கு நின்று புகைப்படங்கள் எடுத்துக் கொண்டேன். ஏரியைப் பார்த்து ரசித்தேன். ஒரு குடும்பத்தினர் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இயற்கையின் பின்னணியில் தங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளும் வகையில் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டார்கள்.

மனிதர்கள் இயற்கையின் ஒரு பகுதி. அதனால்தான் ஏரி, குளங்கள், ஆறுகள், கடல், மலைகள், குன்றுகள், தாவரங்கள், விலங்குகள் ஆகியவற்றைக் காணும்போது நமது மனித மனம் நெகிழ்கிறது; மகிழ்ச்சி அடைகின்றது. நீண்ட நேரம் இந்த இயற்கையோடு நமது நேரத்தைச் செலவிட வேண்டும் என்றும் முயல்கின்றது. ஆனால் பல்வேறு பணிகளுக்கு இடையே மாட்டிக் கொள்ளும் இக்காலத்து மனிதர்களாகிய நாம் நம்மைச் சுற்றி இருக்கின்ற இயற்கையைக்

காணவும் ரசித்து அனுபவிக்கவும் கூட என்றாவது ஒரு நாள் தான் நேரத்தை ஒதுக்கிக்கொள்கின்றோம் என்பது பெரும் குறைதான். நாம் நமக்கு நன்மை செய்து கொள்ள வேண்டுமென்றால் எவ்வளவு முடியுமோ அந்த அளவிற்கு இயற்கையோடு நமது காலத்தைச் செலவிட வேண்டும். நம் மன மகிழ்ச்சிக்கு அதுதான் அடிப்படையாக அமையும்.

சற்றுநேரம் ஏரியைப் பார்த்து ரசித்துவிட்டு படிகளில் கீழே இறங்கி நடக்கத் தொடங்கினேன். வழி எங்கும் சிறுநீர் துர்நாற்றம். கடந்து செல்லும் ஒவ்வொருவரும் இந்த துர்நாற்றத்தை அனுபவித்துக்கொண்டே தான் செல்ல வேண்டிய சூழல். மக்கள் துர்நாற்றத்தை இயல்பாகப் பழகி விட்டார்கள்; ஏற்றுக் கொண்டு விட்டார்கள். இல்லையென்றால் இதனைத் தடுத்துச் சுத்தப்படுத்த வேண்டும்; மாற்றம் கொண்டு வர வேண்டும் என்ற எண்ணம் தோன்றியிருக்கும் அல்லவா?!

செங்கல்பட்டு ரயில் நிலையத்தின் வாசலில் நிறைய ஆட்டோ வாகனங்கள் காத்திருந்தன. ரயில் நிலையத்திற்கு முன்னே மகாத்மா காந்தியின் உருவச்சிலை. அதைச் சுற்றி சிறிய பூங்கா.. பார்ப்பதற்கு மனதிற்கு இதமான காட்சியாக அது இருந்தது. சற்று நேரத்தில் தோழி ரேஷல் வந்து சேர்ந்தார். முதலில் ஒரு காப்பியும் பசிக்கு ஏதாவது உணவும் சாப்பிட வேண்டும் என்று சொல்ல, ஒரு சிறு கடைக்குள் சென்றோம். ஒரு தோசை ஆர்டர் செய்தேன். நேரமாகி இருந்ததால் சட்னி-சாம்பார் அனைத்தும் சுவையில்லாமல் இருந்தது. ஆனால் காப்பி சுவையாகவே இருந்தது.

அங்கிருந்து புறப்பட்டு முதலில் திருக்கழுக்குன்றம் செல்லலாம் என முடிவாகியது. ஷேர் ஆட்டோ சவாரி செல்லலாம் என்று முடிவெடுத்தோம். தமிழகத்தில் ஷேர் ஆட்டோவில் எனது முதல் அனுபவம் இது. ஷேர் ஆட்டோவில் பின் இருக்கையில் அமர்ந்து கொண்டோம். எங்களுக்கே தயாரித்தது போன்ற ஒரு ஆட்டோ. சுற்றுப் பயணிகளுக்கு மிகத் தோதாகப் பின்பக்கம் மறைப்பு ஏதுமில்லாமல் திறந்து இருந்தது. வெளியே தெரியும் சாலைக் காட்சி, சாலையில் செல்லும் மாடுகள், அவற்றை ஓட்டிச் செல்லும் மக்கள் எனப் பார்த்துக்கொண்டே வந்தோம்.

ஓரிடத்தில் ஆட்டோ நின்றது. சில பெண்கள் ஏறிக்கொண்டார்கள். அந்த இடத்தில் சாலையின் இடதுபுறத்தில் ஆட்டு இறைச்சி விற்கும் சிறிய கடை ஒன்று இருக்கின்றது. ஆட்டு இறைச்சியை வெட்டிவிட்டு தோலைக் கட்டி வரிசையாகத் தொங்க விட்டிருந்தார்கள். நான் புகைப்படம் எடுத்துக்கொண்டேன். காலை வேளை என்பதால் ஆட்டிறைச்சி வாங்க சிலர் வந்திருந்தார்கள்.

நாங்கள் பயணித்துக்கொண்டிருந்த ஷேர் ஆட்டோ மிக அழகாக ஜோடிக்கப்பட்டுடிருந்தது. ஆட்டோ வாகனத்திலேயே பாடல் கேட்டு ரசித்துக் கொண்டு வரும் வகையில் ரேடியோ, சிடி என அசத்தியிருந்தார் அந்த ஓட்டுநர். 90களின் இறுதியில் வந்த இசையமைப்பாளர் தேவா மற்றும் இளையராஜா இசையமைத்த பாடல்கள்.. . இந்தப் பயணத்தை எனக்கு தேவலோகத்தைச் சுற்றிப் பார்ப்பது போல மிக இனிமையான அனுபவமாக மாற்றித் தந்தது.

ஷேர் ஆட்டோவில் எங்களுடன் பயணித்துக்கொண்டிருந்த மேலும் ஐந்து பெண்கள் எங்களுடன் பேசிக் கொண்டே வந்துகொண்டிருந்தார்கள். முதல் முறை பார்த்தாலும் உறவுக்காரர்கள் போலப் பேசும் அந்தப் பண்பு என் மனதை மகிழ வைத்தது. அவர்களிடம் பேசிக்கொண்டும் பாடல் கேட்டுக்கொண்டும் புகைப்படம் எடுத்துக் கொண்டும் வந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. திருக்கழுக்குன்றம் வந்து சேர்ந்தோம். இரண்டு பேருக்குமே சேர்த்து 30 ரூபாய் தான்.

அதிர்ச்சியா.. ஆச்சரியமா..? இவ்வளவு குறைந்த தொகையில் பயணம் செய்ய முடிகிறதே. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு வார இறுதி நாட்களில் அருகாமையில் இருக்கும் பல ஊர்களுக்கும் தமிழக மக்கள் பயணித்து வரலாம். இதனால் புதிய புதிய இடங்களை நாம் பார்த்து ரசிக்கலாம் என்பதோடு ஷேர் ஆட்டோ, உணவகங்கள், சிறு சிறு வியாபாரங்கள் எனத் தமிழக மக்களின் சுய உற்பத்தி வணிகமும் பெருக வாய்ப்பாகுமே எனத் தோழியிடம் மனதில் பட்டதைத் தெரிவித்துக் கொண்டேன்

சுற்றுலா செல்வது, பயணம் செல்வது என்றால் அது வெளிநாடுகளுக்குத் தான், என்று நாம் நினைக்க வேண்டியதில்லை. நமது பக்கத்து ஊரில் உள்ள ஏராளமான இயற்கை பகுதிகளுக்குச் சென்று வருவதும், வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களைச் சென்று பார்த்து வருவதும் கூட சுற்றுலா தான்.

பயணம் சென்று ஓர் இடத்தைப் பார்ப்பதை யாராவது நேர விரயம் என்று சொன்னால் அவர்களை நான் கண்டிக்கத் தயங்கமாட்டேன். ஏனெனில், பயணம் செல்வது மட்டும்தான் நம் அறிவினை விசாலமாக்கும்; நம் சிந்தனையை விரிவாக்கும்; நம்மை இந்த இயற்கையின் அங்கமாக்கிக் கொள்ள நமக்குத் தகுதியை அளிக்கும்.

திருக்கழுக்குன்றம் வந்தடைந்தது எங்கள் ஷேர் ஆட்டோ. நாங்கள் இறங்கிக்கொண்டோம். எதிரே பிரமாண்டமான திருக்கழுக்குன்றம் கோவில் கண்களில் தென்பட்டது. உள்ளே சென்று கோயிலையும் அதிலுள்ள சிற்பங்களையும் கல்வெட்டுக்களையும் பார்க்க ஆவல் இருந்தாலும், அன்று நேரம் போதாது என்ற காரணத்தால் எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

அங்கிருந்து மற்றொரு ஷேர் ஆட்டோ எடுத்து வெங்கம்பாக்கம் செல்ல வேண்டும் எனத் தோழி சொல்லி இருந்தார். அங்குக் காத்திருந்த ஒரு ஷேர் ஆட்டோவில் ஏறிக்கொண்டோம். முந்தைய ஷேர் ஆட்டோ போல இது இல்லை. புறப்பட்டு சில நிமிடங்களில் ஏதோ இயந்திரக் கோளாறு. சாலையில் வந்து கொண்டிருந்த மற்றொரு ஷேர் ஆட்டோவை நிறுத்தி அதில் எங்களை ஏற்றிவிட்டார்கள். பத்து நிமிட பயணத்தில் வெங்கம்பாக்கம் வந்தடைந்தோம்.

அடுத்து அங்கிருந்து மேலும் ஒரு ஆட்டோ எடுத்து சதுரங்கப்பட்டினம் செல்ல வேண்டும். சாலையின் இடது புறத்தில் நின்றுகொண்டிருந்த ஒரு ஷேர் ஆட்டோவில் ஏறிக்கொண்டோம். எங்களைத் தவிர வேறு யாரும் அதில் இல்லை என்பதால் வாகன ஓட்டி ஷேர் ஆட்டோவை எடுக்காமல் காத்துக்கொண்டிருந்தார். பக்கத்தில் ஒரு குளிர்பானக் கடை இருந்தது. அதில் நான்கு 30 வயது மதிக்கத்தக்க ஆண்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களது உடை அவர்கள் ராணுவ வீரர்கள் என்பதை வெளிப்படுத்தியது.

5 நிமிடங்கள் காத்திருந்துவிட்டு எங்கள் வாகன ஒட்டி அவர்களிடம் சென்றார். அவர்களை அழைத்து வந்து எங்களோடு இணைத்துக் கொள்ளலாம் என்பது அவரது திட்டம். அவர்கள் தயங்கித் தயங்கி நின்று கொண்டிருந்தார்கள். இந்த குட்டி வாகனத்தில் ஏற்கனவே இரண்டு பேர் பெண்கள் இருக்கின்றோம். இதில் மேலும் 4 பெரிய பைகளுடன் இந்த 4 ஆண்களும் ஏறினால் வண்டியில் இடம் இருக்குமா என்பது அவர்கள் சந்தேகமாக இருந்திருக்கலாம்.

எங்களை அவர்கள் பார்க்க, நாங்கள் கையசைத்து வாருங்கள் சேர்ந்து பயணிக்கலாம் என்று அழைத்தோம். எங்களிடம் வந்து உள்ளே எப்படி இந்தப் பெரிய பைகளை வைப்பது எனக் கேட்க, தோழி ரேஷல் அவர்களுக்கு வழி காட்டினார். பைகளை ஒருவழியாக ஷேர் ஆட்டோவில் அடுக்கி வைத்துவிட்டு அவர்கள் நால்வரும் அமர்ந்து கொண்டார்கள். நான்கு பேருக்குமே தமிழ் தெரியாது. இந்தி மொழி மட்டுமே பேசுகிறார்கள்.

தனக்குத் தெரிந்த இந்தி மொழியில் தோழி ரேஷல் அவரிடம் பேச்சுக் கொடுத்தார். அவர்கள் கல்பாக்கம் செல்வதாகவும் தாங்கள் காத்திருந்த பஸ் வரத் தாமதமானதாகவும் தெரிவித்தார்கள். சில நிமிடங்களில் கல்பாக்கம் வந்து சேர, அவர்கள் இறங்கிக் கொண்டார்கள்.

தமிழகத்தில் வேலை செய்யும் போது தமிழ் மொழி தெரிந்துகொள்ள வேண்டாம் என்ற சிந்தனையுடன் இவர்கள் வேலை செய்வது வெளிப்படையாகத் தெரிகின்றது என நாங்கள் பேசிக்கொண்டோம்.

கல்பாக்கத்திலிருந்து எங்கள் ஷேர் ஆட்டோ தனது பயணத்தைத் தொடர்ந்தது. சற்று நேரத்தில் சதுரங்கப்பட்டினம் வந்து சேர்ந்தோம். ஷேர் ஆட்டோவிற்கு மொத்தம் இருபது ரூபாய் கொடுத்துவிட்டு இறங்கிக் கொண்டோம். அருகிலேயே சாத்துக்குடி ஜூஸ் வண்டி ஒன்றை வைத்துக்கொண்டு ஒரு இளைஞர் நின்று கொண்டிருந்தார். அவரும் ஒரு வட இந்தியர். கொஞ்சம் கொஞ்சம் தமிழ் பேசுகின்றார். இருவரும் இரண்டு சாத்துக்குடி ஜூஸ் வாங்கிக்கொண்டோம். தமிழகத்தின் சிற்றூர்களிலும் வட இந்தியர்கள் நம்பிக்கையோடு தங்கள் வணிக முயற்சியைத் தொடங்கிவிட்டார்கள் என்பதை இது உறுதிப்படுத்தியது.

நாங்கள் இறங்கிய பகுதிக்கு எதிர்புறத்தில் டச்சுக்காரர்கள் கட்டிய கோட்டை தனது பிரம்மாண்டம் குறையாமல் காட்சி அளித்துக் கொண்டு நின்றது. எதிர்புறத்தில் அலைகள் ஆர்ப்பரிக்கக் கடல் காட்சி.

ஒவ்வொருமுறையும் கடற்கரையோரப் பகுதியைக் காணும்போது எனது பிறந்த ஊரான மலேசியாவின் பினாங்குத் தீவு மனதில் காட்சியாக வந்து செல்லத் தவறுவதில்லை. இளம் வயதில் மனதில் பதிந்து வைத்த காட்சிப் பதிவு மனக்கண்ணில் ஓட எதிரிலிருந்த கடல் காட்சி என்னை இயல்புநிலைக்கு மீண்டும் கொண்டு வந்தது.

சுனாமி அலை தாக்கியபோது இப்பகுதியில் பெருத்த சேதம் ஏற்பட்டதாகவும், தனது சமூக சேவை அமைப்பு வழியாக இப்பகுதியில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு தாங்கள் வழங்கிய உதவிகள் பற்றி தோழி விவரித்துக் கொண்டே வர, நாங்கள் கோட்டையை நோக்கி நடக்கத்தொடங்கினோம்.

சட்ராஸ் அல்லது சதுரங்கப்பட்டினம் என்ற பெயர் ஓரிரு முறை மட்டுமே சில டச்சு ஆவணங்களில் பார்த்த நினைவு எனக்கு உண்டு. ஆயினும் இப்பகுதிக்குச் செல்லும் வாய்ப்பு எனக்கு இதுவரை ஏற்பட்டதில்லை. இது ஒரு கடற்கரைப் பட்டினம் என்பதை வரைபடத்தில் பார்த்திருந்தேன். ஆனால் ஆழமாக மனதில் ஏனோ இது பதியவில்லை. தோழி ரேஷல் எனது வரலாற்று ஆர்வத்தைப் புரிந்து கொண்டு இந்த இடத்திற்கு நான் வரவேண்டும் எனச் சொல்லியிருந்தார். ஆக இந்த வரலாற்று முக்கியத்துவம் பெற்ற இச்சிற்றூரை எனக்கு அறிமுகப்படுத்திய ரேஷலுக்கு நான் நன்றி சொல்வது கடமையாகும்.

தமிழக நில வரைபடத்தில் மாமல்லபுரத்திற்கு அடுத்த நகரமாக சதுரங்கப்பட்டினம் வருவதை நினைவுபடுத்திக் கொண்டேன். மதியம் ஏறக்குறைய 12 நெருங்கிக்கொண்டிருந்தது. நாங்கள் கோட்டையின் வாயில் பகுதி வந்தடைந்து உள்ளே அனுமதி உண்டா என்று தேடிப் பார்த்தோம். இந்தியத் தொல்லியல் துறையின் ஊழியர் ஒருவர் அங்கு அமர்ந்திருந்தார். அவருடன் அவரது நண்பர்

ஒருவரும் அமர்ந்திருந்தார். அவரிடம் இந்தக் கோட்டையை நாங்கள் பார்க்கவேண்டும் என்று கூறிவிட்டு கோட்டையைப் பற்றி சற்று விசாரித்தோம். கோட்டையைப் பற்றிய விவரங்கள் அடங்கிய லேமினேட் செய்யப்பட்ட அட்டைகளை எனக்குக் கொண்டுவந்து கொடுத்தார். அதில் கோட்டையின் வரலாறு பற்றிய செய்திகள் வழங்கப்பட்டிருந்தன. அதனை வாசித்து விட்டு ஒவ்வொரு பகுதியாகப் பார்த்துவரக் கிளம்பினோம்.

இன்று நாம் காணும் சதுரங்கப்பட்டினம் கிபி 17ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது. கி.பி. 1353ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று இப்பகுதியை ராஜநாராயணன் பட்டினம் எனக் குறிப்பிடுகின்றது என்றும், இப்பகுதியைச் சோழ மன்னர்களின் கீழ் ஆட்சி செய்த சம்புவராயர்கள் ஆட்சி செய்தனர் என்றும், கி.பி.1337லிருந்து 1367ம் ஆண்டில் ஆட்சி செய்த சிற்றரசரின் நினைவாக இப்பெயர் அமைந்ததாகவும், கி.பி.15ம் நூற்றாண்டு விஜயநகர நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட இங்குள்ள பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்று இப்பகுதியைச் சதிரவாசகன்பட்டினம் என்றும் குறிப்பிடுவதைத் தகவல் அட்டையில் உள்ளக் குறிப்புக்களின் வழியாக அறிந்து கொண்டோம். கடற்கரை துறைமுகப் பட்டினமாக விளங்கிய இப்பகுதி மெல்லிய மஸ்லீன் துணிகள் மற்றும் முத்துக்கள் உற்பத்தி ஏற்றுமதி ஆகிய தொழிலுக்காகப் பிரசித்தி பெற்ற ஒரு நகரமாக அன்று விளங்கியது.

இன்று நாம் காணும் சிதிலமடைந்த கோட்டை டச்சுக்காரர்களால் 17ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. 1818 ஆம் ஆண்டு பிரிட்டிஷ் படைகள் இக்கோட்டையைத் தாக்கி டச்சுக்காரர்களிடமிருந்து அதனைக் கைப்பற்றிக் கொண்டது. பின்னர் சதுரங்கப்பட்டினம் ஆங்கிலேயக் கிழக்கிந்திய கம்பெனியின் ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டது.

1620 தொடங்கி 1769 வரை இப்பகுதியில் பணியாற்றிய முக்கிய டச்சு அதிகாரிகள் சிலரது கல்லறைகள் இக்கோட்டையின் வலது புறத்தில் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கல்லறையின் மேற்பகுதியிலும் கல்வெட்டும் அரசு முத்திரையும் பதிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு அரசு முத்திரையிலும் வெவ்வேறு சின்னங்கள் பொறிக்கப்பட்ட வகையில் கல்லறையின் மேற்பகுதி அமைந்திருக்கின்றது. கல்லறை பகுதிக்கு அடுத்து ஒரு கட்டிடம் உள்ளது. சிதிலமடைந்த கட்டடத்தின் உள்ளே சென்று பார்த்தோம். பின்னர் வெளியே வந்து ஏனைய பகுதிகளையும் சுற்றிப் பார்த்துவிட்டு ஒவ்வொரு பகுதிகளிலும் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டோம்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வருவதற்கு முன் தென்னிந்தியப் பகுதியில் ஆளுமை செலுத்திய ஐரோப்பியர்களின் வரிசையில் போர்த்துக்கீசியர்களும் டச்சுக்காரர்களும் முக்கியத்துவம் பெறுகின்றனர். அதிலும் குறிப்பாகச் சோழமண்டலக் கடற்கரைப் பகுதியான பழவேற்காடு, மாமல்லபுரம், சதுரங்கப்பட்டினம், நாகப்பட்டினம், தூத்துக்குடி ஆகிய பகுதிகளில் டச்சுக்காரர்களின் ஆளுமை ஒரு நூற்றாண்டுக்கும் மேல் பலம் பொருந்தியதாக அமைந்திருந்தது.

சதுரங்கப்பட்டினம் நெசவாளர்கள் நிறைந்த ஒரு பகுதியாக 16ஆம் நூற்றாண்டில் திகழ்ந்தது. மிக முக்கியமாக மெல்லிய மஸ்லீன் துணிகள் ஐரோப்பியர்களின் கவனத்தை ஈர்த்ததன் விளைவாக இப்பகுதியில் டச்சுக்காரர்கள் ஒரு தொழிற்சாலையை அன்று அமைத்தார்கள். சதுரங்க பட்டினத்தில் அமைக்கப்பட்ட தொழிற்சாலையில் உருவாக்கப்பட்ட மஸ்லீன் துணிகள் ஐரோப்பாவிற்குக் கப்பல்கள் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. வணிகம் மிகச் சிறப்பாக வளர்ந்ததால் டச்சுக்காரர்கள் அங்கு ஒரு கோட்டையைக் கட்ட முயன்று இன்று நாம் காணும் இக்கோட்டையைக் கட்டினார்கள்.

டச்சுக்காரர்களிடமிருந்து இக்கோட்டையைக் கைப்பற்றிய ஆங்கிலேயர்கள் இதனைப் பாதுகாக்கவில்லை. இன்று இக்கோட்டை இந்தியத் தொல்லியல் துறையின் பாதுகாப்பில் உள்ளது. சதுரங்கப்பட்டினம் உள்ள பகுதிக்கு அருகில் தான் கல்பாக்கம் அணு ஆலை அமைக்கப்பட்டுள்ளது.

சிதிலமடைந்து காட்சியளித்தாலும் இக்கோட்டை இன்றும் தமிழக வரலாற்றில் முக்கியத்துவம் பெறுகின்ற ஒரு சின்னமாகவே திகழ்கின்றது. கோட்டைக்குள் உள்ள கல்லறையில் உள்ள சின்னங்கள் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட வேண்டியவை. ஒரு கல்லறையில் கப்பல் வடிவமும் மற்றொரு கல்லறையில் சூலம், ருத்ராட்சம், விலங்கு சின்னமும், மற்றுமொரு கல்லறையில் புலியின் சின்னமும், மற்றுமொரு கல்லறையில் மீன் சின்னமும் என வெவ்வேறு சின்னங்கள் பொறிக்கப்பட்ட வகையில் கல்லறைகள் டச்சு மொழி கல்வெட்டுகள் இணைந்த வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக்கல்வெட்டுகள் மற்றும் சின்னங்கள் சொல்லும் செய்திகளை ஆராய்ந்து ஆய்வுக் கட்டுரையாக ஆய்வு மாணவர்கள் சமர்ப்பிக்கலாம். ஆய்வுக்கு வழிவகுக்கும் சிறந்த களமாக இப்பகுதி உள்ளது என்பதை நானும் தோழி ரேஷலும் பேசிக்கொண்டே கொளுத்தும் மதிய வெயிலில் நடந்தோம்.

இக்கோட்டை வளாகத்திற்குள்ளேயே ஒரு கிணறு இருக்கின்றது. விரிந்த கிளைகளுடன் கூடிய 200 ஆண்டுகளுக்கும் மேலான ஒரு புளியமரமும் இருக்கின்றது. கோட்டையை முழுமையாகப் பார்த்துவிட்டு தொல்லியல் துறை

பணியாளரிடம் நன்றி சொல்லி வருகைப்பதிவேட்டில் கையெழுத்திட்டு விட்டுவிடைபெற்று அங்கிருந்து புறப்பட்டோம்.

ஒரு காலத்தில் பெரும் வணிக நகரமாகவும், ஐரோப்பியர்கள் விரும்பி வாழ்ந்த ஒரு நகரமாக இருந்த சதுரங்கப்பட்டினம் இன்று ஆள் நடமாட்டம் குறைந்து முக்கியத்துவம் குறைந்த ஒரு நகரமாகக் காட்சியளிக்கின்றது. சதுரங்கப்பட்டினம் இயற்கை வளம் நிறைந்த ஒரு பகுதிதான். கடற்கரையும் இருப்பதால் மிகச் சிறப்பாக இப்பகுதியை ஒரு சுற்றுலாத்தலமாக அரசு மாற்றி அமைக்கலாம். அப்படிச் செய்யும் பொழுது உள்ளூர் மக்களுக்கு வேலைவாய்ப்புகள் விரிவாக அமையும். சுயதொழில் பெருகும். அதேசமயம் வரலாற்றுச் சிறப்பும் பாதுகாக்கப்படும்.

தமிழகத்தின் உள்ளே ஒவ்வொரு இடத்திற்குப் பயணிக்கும் போதும், இவ்வளவு இயற்கை வளத்தைப் பொருளாதார ரீதியாக வலுவாக மாற்றாமல் இருக்கிறார்களே என நினைத்து நான் வருந்துகின்றேன். இயற்கை வளம் இல்லாத எத்தனையோ நாடுகள் தமது தீவிர முயற்சியினால் நாட்டின் வளர்ச்சியை உயர்த்தி இருக்கின்றன. ஆனால் தேவைக்கு அதிகமான மனித வளம், இயல்பான இயற்கை வளம், வணிகத்திற்கு ஏற்ற இயற்கை சூழல் என அமைந்த பல சிற்றூர்கள் தமிழகத்தில் அதன் சிறப்பும் பொலிவிழந்து பரிதாபமாகக் காட்சி அளிப்பது வேதனையை அளிக்கின்றது.



சதுரங்கப்பட்டினத்திற்கான எனது பயணம் தமிழகத்தில் டச்சுக்காரர்களின் ஆளுமையை ஓரளவு நேரடியாகப் புரிந்து கொள்ளும் வாய்ப்பினை எனக்கு வழங்கியது. இதேபோல அடுத்து மற்றுமொரு தமிழகத்துக் கடற்கரையோர நகருக்கு விரைவில் செல்லவேண்டும் என்று மனதில் திட்டம் ஓடத்தொடங்கிவிட்டது. வரலாற்றுத் தேடல் நிறைந்த பயணத்திற்கும் ஆய்விற்கும் தான் முடிவில்லையே.

ஊர்சுற்றி மாசுபடாத இயற்கையின் மத்தியிலும், அதன் உண்மையான வாரிசுகளின் இடையேயும் மாதங்கள் அல்லது சில ஆண்டுகள் கழித்தால் அவனுக்கு எவ்வளவோ மகிழ்ச்சி கிட்டும்.

அவன் ஒவ்வொரு நாளும் புதிய புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வான். வரலாறு, மனித இனம், மொழி அல்லது வேறு ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றிய ஆராய்ச்சி செய்து கொண்டே இருப்பான். அவன் அங்கிருந்து வெகுதூரம் போய் விட்டால் பழைய நினைவுகள் இனிய நினைவுகளாக நிலைத்து விடுகின்றன. அந்த இனிய நினைவுகள் அவனைப் பொறுத்தவரையில் அவனுடனே மறைந்து விடலாம். ஆனால் அவன் தன் நினைவுகளுக்கு எழுத்து வடிவம் தந்து விட்டுப் போனால் அவன் மறைந்த பின்னரும் லட்சக்கணக்கான வாசகர்களின் கண்களின் முன்னால் அவ்வினிய நினைவுகள் உயிர்பெற்று எழும்.

- ஊர்சுற்றிப் புராணம்; ராகுல் சாங்கிருத்யாயன்

## கடலூரில் ஒரு நாள்

தடைகளைத் தகர்த்தெறிந்து வெளிவர வேண்டியது ஊர்சுற்றிக்கு மிகவும் அவசியமாகும். உலகம் புரிந்த எந்த வாலிபருக்கும் ஊர் சுற்ற வேண்டும் என்ற ஆசை தோன்றாமல் இருக்குமா? தம் நரம்புகளில் சூடான ரத்தம் ஓடும் எவரும் தம் வீட்டு மதில் சுவர்களைத் தகர்த்தெறிந்து வெளியில் போக வேண்டுமென்று விரும்பாமல் இருக்கமாட்டார்கள் என்பது அடியேனின் தாழ்மையான கருத்தாகும். இவர்களுடைய முன்னேற்றப் பாதையில் தடைகள் ஏராளம். வெளி உலகத்தின் தடைகளை விட மனிதரின் உள்ளத்தில் தான் அதிக தடைகள் இருக்கின்றன.

- ஊர்சுற்றிப் புராணம்; ராகுல் சாங்கிருத்யாயன்

23.1.2020

கடந்த சில தினங்களுக்கு முன் காலை 9 மணிக்குக் கடலூரில் ஒரு மகளிர் கல்லூரியில் ஒரு கருத்தரங்கைத் தொடக்கிவைத்துச் சிறப்புரையாற்ற அழைக்கப்பட்டிருந்தேன். சென்னையிலிருந்து ஒரு வாகன பயணம்; இடையில் தோழி ரேஷலும் இணைந்து கொள்வதாகத் திட்டம். அன்றைய நாள் முழுதும் கடலூரில் செலவிட்டு இரவு திரும்புவதாக எங்கள் பயணத் திட்டம் இருந்தது. கடலூருக்கு என நான் செல்வது இதுவே முதல் முறை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் வடலூர் சென்றிருந்த போது திரும்பிச் செல்லும் பாதையில் கடலூரைக் கடந்து வரும் வாய்ப்பு கிடைத்தது. பண்டைய தமிழக வரலாறு மற்றும் ஐரோப்பியர்கள் வருகையால் ஏற்பட்ட மாற்றம் ஆகிய வரலாற்றுத் தகவல்களை அதிகம் கொண்டிருக்கும் நகரங்களின் வரிசையில் கடலூரும் ஒன்று என்பதை நான் அறிவேன். ஆயினும் நேரில் சென்று பார்த்துவரச் சரியான வாய்ப்பு அமையாத காரணத்தால் ஆவல் இருந்தாலும் அது சாத்திய படாமலேயே

தள்ளிப்போய்க்கொண்டிருந்தது. அந்த குறையை போக்குவதாக இந்த பயணம் அமைந்தது.

பண்டைய காலம் தொட்டே கடலூர் கடல் வணிகத்திற்கு மிக முக்கியமான ஒரு துறைமுக நகரமாக விளங்கியது. 17ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு டச்சுக்காரர்கள், போர்த்துக்கீசியர்கள், பிரெஞ்சுக்காரர்கள் மற்றும் ஆங்கிலேயர்களின் தாக்கம் இப்பகுதியில் நிலைபெற்றது. ஜெர்மானிய பாதிரிமார்கள் தரங்கம்பாடியை அடுத்து இப்பகுதியில் தங்கள் சீர்திருத்தக் கிருத்துவ மையத்தையும் 18ஆம் நூற்றாண்டில் உருவாக்கினார்கள் என்பது வரலாறு.முதலில் கடலூருக்கு வணிகம் செய்ய வந்த பிரெஞ்சுக்காரர்கள் பின்னர் அருகாமையில் இருக்கும் பாண்டிச்சேரியில் தங்களது வணிக மையத்தை ஏற்படுத்தி 1674 ஆம் ஆண்டு முதல் அப்பகுதியில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தத் தொடங்கினர். 1690ல் கடலூரில் ஆங்கிலேயர்கள் தங்கள் வசம் ஆக்கிக் கொண்டார்கள். 1758ம் ஆண்டு வரை கடலூர் தென்னிந்திய மாவட்டங்களின் தலைநகரமாக பிரித்தானியக் காலனித்துவ அரசின் கீழ் அமைந்திருந்தது. இன்றும் இங்குக் காட்சி அளிக்கும் செயிண்ட் டேவிட் கோட்டையில் தான் அன்று அரசு நிர்வாகம் செய்யப்பட்டது. இது ராபர்ட் கிளைவ் கோட்டை என்றும் அழைக்கப்படுகிறது.

எனக்குக் காலை நேரப் பயணத்தில் சாலையோர கடைகளில் சூடான தேநீர் வாங்கி அருந்துவது மிகப் பிடிக்கும். வாகனம் ஓட்டி தேநீருக்காக நிறுத்தியபோது நாங்களும் இறங்கிக் கொண்டோம். நான் கசப்பாகக் காப்பியும் தேநீரும் அருந்துவதை அறிந்திருக்கும் தோழி ரேஷல் தேநீர் போடுபவரிடம் ஸ்ட்ராங் டிகாக்ஷன் போட்டுத் தாருங்கள் எனக் கேட்டுக்கொண்டார். இருவருக்குமே தேநீர் வந்தது. ஆனால் எதிர்பார்த்த சுவை இல்லை. சும்மாவே தேநீர் வாங்கியிருந்தால் சுவையாக இருந்திருக்குமோ என்று பேசிக்கொண்டோம். சில நேரங்களில் இப்படித்தான் நாம் ஏதாவது ஒன்று சொல்லி இயல்பாகவே நன்றாக இருக்கும் ஒன்றை அப்படியே மாற்றி விடும் அனுபவம் ஏற்பட்டு விடுகிறது.

ஏறக்குறைய மூன்று மணி நேர வாகன பயணம். செங்கல்பட்டு மதுராந்தகம் மேல்மருவத்தூர், திண்டிவனம், விக்கிரவாண்டி, மாளிகைமேடு, நெல்லிக்குப்பம் என ஒவ்வொரு ஊராகப் பார்த்துக்கொண்டே வாகனத்தில் பயணித்துக் கொண்டிருந்தோம். வரும் வழியில் தென்பெண்ணை ஆற்றைக் கடந்து எங்கள் பயணம் இருந்தது.

விக்கிரவாண்டி தொடங்கி மாளிகைமேடு, நெல்லிக்குப்பம் ஆகிய பகுதிகள் பசுமையாக இருந்தன. இப்பகுதிகளில் நிலத்தடி நீர் வளமான இயற்கைச் சூழலையும் விவசாய முயற்சிகளுக்கு ஆதாரமாகவும் இருப்பதைப் பற்றி அறிந்து

கொண்டேன். நான் சென்றிருந்தபோது இப்பகுதியில் கரும்புத் தோட்டங்களில் ஆணும் பெண்ணுமாக மக்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். காய்கறிகள் விவசாயம் சாலையின் இருபுறத்திலும் காணக்கூடியதாக இருந்தது.

முதலில் கிருஷ்ணசாமி மகளிர் கல்லூரியில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிகழ்ச்சியில் பிற்பகல் 2 மணி வரை கலந்துகொண்டு, பின்னர் பெரியார் அரசுக் கல்லூரியிலும் தமிழ்த் துறை ஏற்பாடு செய்திருந்த ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொண்டு, மாலை நான்கு வாக்கில் நிகழ்ச்சிகளிலிருந்து விடுபட்டுக் கொண்டோம். உரை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்திருந்த சகோதரர் முனைவர் ஜானகி ராஜா ஐரோப்பியர் கால கட்டடங்கள் சிலவற்றைச் சுற்றிக்காட்டத் திட்டமிட்டிருந்தார்.

முதலில் நாங்கள் வந்தடைந்த இடம் சில்வர் பீச் அல்லது வெள்ளி கடற்கரை. இப்படி ஒரு அருமையான கடற்கரை இங்கே இருக்கும் என நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. விரிவான மணல் நிறைந்த கடற்கரை அழகாகக் காட்சியளித்தது. அரசு கல்லூரி மாணவர்கள் கல்லூரி முடிந்து அங்குக் கடற்கரையில் விளையாடிக்கொண்டிருந்தார்கள். கடற்கரை ஓரத்தில் அமைந்திருக்கும் பெரியார் அரசு கல்லூரி அப்பகுதியில் உள்ள ஏழை எளிய மாணவர்களுக்குக் கல்வியைப் பெற மிக முக்கிய அடித்தளம் அமைக்கும் ஒரு கல்லூரி. ஆயினும் சில மாணவர்கள் பாட நேரத்தில்கூட கடற்கரையில் நேரத்தைச் செலவிடுகிறார்கள் என்ற செய்தி வருத்தம் அளிக்கத் தான் செய்தது.

சாலையில் மெதுவாக வாகனத்தில் பயணித்துக் கொண்டே கடற்கரையை ரசித்துக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம். அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வண்ணமயமான படகுகள் கண்களைக் கவர்ந்தன. இறங்கி நின்றவாறு புகைப்படங்களை எடுத்துக்கொண்டு அதே சாலையில் எங்கள் பயணம் தொடர்ந்தது.

ராபர்ட் கிளைவ் தங்கியிருந்து ஆட்சிப் பொறுப்பைக் கவனித்துக் கொண்டிருந்த அன்றைய முக்கியத்துவம் பெற்ற கட்டடம் இன்று சிதிலமடைந்த நிலையில் இருக்கின்றது. படிகளில் ஏறி உள்ளே என்ன தெரிகிறது என்று உடைந்த ஜன்னல்கள் வழியாக நானும் ஏனைய தோழர்களும் கவனிக்கத் தொடங்கினோம். உள்ளே உள்ளூர் மக்கள் சிலர் தங்கியிருக்கின்றனர் என்பதற்குச் சான்றாகப் பாய் படுக்கைகள் ஆங்காங்கே தென்பட்டன. இந்த பெரிய பழம் மாளிகையில் அன்று ஆங்கிலேயர்கள் உள்ளூர் மக்களைத் தங்க அனுமதித்திருக்க மாட்டார்கள். ஆனால் இன்றோ நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. உள்ளூர் மக்கள் தற்காலிகமாக இங்கே தங்குகிறார்கள் என்பதை அப்போதைய சூழல் வெளிப்படுத்தியது.

வெளியே சில பெண்மணிகள் பாய் போன்ற ஒரு பெரிய துணியை விரித்து அதில் கடலிலிருந்து பிடித்து வந்திருந்த கடல் உணவு வகைகளை எடுத்துப் போட்டுக் காய வைத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு பெண்மணி கையில் வலை நிறையச் சிப்பிகளைக் கடலிலிருந்து எடுத்துக் கொண்டு வருவதைப் பார்த்தோம். அவரிடம் போய் அதை அருகாமையில் பார்க்க வேண்டும் என்ற ஆவல் இருந்தாலும் கண்களும் கவனமும் எனக்குப் படகுத்துறை நோக்கியே இருந்தன.

படகுத்துறை அருகில் சென்று அங்கிருந்து ராபர்ட் கிளைவ் தங்கியிருந்த அந்தப் பாழடைந்த மாளிகையைப் பல கோணங்களில் புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தேன். சட்டென்று ஒரு ஆணின் குரல். "அம்மா பார்த்து நடங்க.. விழுந்திட போறீங்க.." என.. கரிசனம் நிறைந்த குரல்.

கடலுக்குச் செல்லவிருக்கும் படகுகளை வர்ணம் பூசி அழகு படுத்திக் கொண்டிருந்தார்கள் ஒரு சிலர். ஏனையோர் இளைஞர்கள் ஒருவர் மட்டும் 50 வயது மதிக்கத்தக்கவர். அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். "இந்தப் படகுகளைப் பற்றிச் சொல்லுங்கள், எங்கே செல்கின்றன" என விசாரிக்கத் தொடங்கினேன். அவரது வேலையை எனது பேச்சு தடை செய்கின்றது என்ற எந்த கோபமும் இல்லாமல் புன்னகையோடு வந்து விளக்க ஆரம்பித்தார்.

ஒவ்வொரு படகும் அழகாகத் தூய்மை செய்யப்பட்டு வர்ணம் பூசப்பட்டு அவை இந்த சோழமண்டல கடற்கரை வெளிப்பகுதியில் வடக்கு நோக்கிச் சென்று அங்கு எல்லோரும் ஒன்றுகூடி ஒரு மிகப்பெரிய மீன் பிடிக்கும் கப்பலில் பயணம் செல்வார்களாம். தயாரிப்பு வேலை என்பது சாதாரணமல்ல. மிகுந்த பொருட்செலவு அதில் உள்ளது என்று விரிவாகத் தகவல்களை வழங்கினார். ஒருமுறை கடலுக்குள் செல்லும் மீன்பிடிக்கும் கப்பலில் ஏறக்குறைய ரூபாய் 6 லட்சத்திற்கான பொருட்கள் இருக்குமென்றும், மீன் பிடித்துக் கொண்டு வரும் பொழுது அது ஏறக்குறைய 15 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சரக்குகளாக இருந்தால்தான் அவர்களுக்கு அதில் லாபம் காண முடியும் என்றும் விளக்கினார். இவ்வளவு பணச்செலவு ஆகின்ற வேலையாக இருக்கின்றதே இந்த மீன்பிடித்தொழில், என்று நானும் தோழர்களும் பேசிக்கொண்டோம். என்னுடன் வந்த தோழர்கள் அவர்களுக்குத் தெரிந்த தகவல்களையும் கூடுதலாக எனக்கு விளக்கினர். மிகப்பெரிய பொருட்செலவும், அதேவேளை வருமானமும் தரக்கூடிய ஒரு தொழில் இது என்று நினைத்தபோது இந்தப் புதிய செய்திகளை அறிந்து கொண்ட மகிழ்ச்சி மனதிலிருந்தது.

கடற்கரையோர மீனவர்களது வாழ்க்கை என்பது நகர்ப்புற மக்களுக்குத் தூரமான விசயமாகவே இருக்கின்றது. சந்தையில் மீன் வாங்கி சுவையாக மணக்க மணக்கக் குழம்பு வைத்துச் சாப்பிட விரும்பும் நாம் மீன்களைப் பிடிக்கக்

கடலுக்குச் செல்லும் மீனவ நண்பர்களின் வாழ்க்கையை அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டுவதில்லையே என நினைத்துக் கொண்டேன்.நெய்தல் நில வாழ்க்கை ஆராயப்பட வேண்டியது!










படகுகளின் பக்கத்தில் நின்று புகைப்படம் எடுத்துக் கொள்ள விரும்பி அங்குச் சென்றேன். தோழி ரேஷல் "படகு சவாரி செல்கிறீர்களா" என்று ஆவலைத் தூண்டும் வகையில் கேட்டார். இப்படி யாரும் சொல்லி விட்டால் போதுமே... எனக்குக் கண்டிப்பாகப் போக வேண்டும் என்று மனதில் ஆசை

முளைத்து விடும். "இந்தப் படகில் செல்ல முடியுமா? நீங்கள் வேலையாக இருக்கிறீர்களே" என்று அந்த மீனவ நண்பரைக் கேட்டேன்.
















எந்தத் தயக்கமும் இல்லை. "வாங்க அழைத்துக்கொண்டு செல்கிறேன்", என்று சொல்லி எங்களைப் படகில் வரவேற்று ஏற்றுக் கொண்டார். சற்றும் எதிர்பார்க்கவில்லை இந்த அன்பான அழைப்பை. என்னுடன் தோழி ரேஷல், தம்பி ஜானகிராஜன் உடன்வர அந்த மீனவ நண்பர் தனது உறவினர் ஒரு இளைஞரையும் அழைத்துக்கொண்டு நாங்கள் ஐவராக படகுப் பயணத்தைத் தொடங்கினோம்.

படகின் எந்திரத்தை அந்த இளைஞர் ஆரம்பிக்க, படகு மெல்ல நகரத் தொடங்கியது. தமிழ் சினிமாக்களில் வருகின்ற எம்ஜிஆர் பாடல் என் மனதில் ஒலிக்கத் தொடங்கியது.

"ஓடும் மேகங்களே  ஒருசொல் கேளீரோ...."

முதல் பாடல் மனதில் ஒலித்துக் கொண்டிருக்கும் போதே மேலும் ஒரு படகுப் பாடல் மனதில் ஒலிக்கத் தொடங்கியது....

"வசந்த கால நதிகளிலே வைரமணி நீரலைகள்"

பாடல் இனிமை தான்.. ஆனாலும் திரைப்படத்தில் பாடல் காட்சி பயங்கரமானதாயிற்றே... எங்கே.. படத்தில் வருவது போல் படகிலிருந்து நாம் கடலில் விழுந்து அசம்பாவிதம் ஆகிவிடக்கூடாதே என்று மனதிற்குள் ஒரு எச்சரிக்கை ஒலி..

பாடல் ஓடிக் கொண்டிருக்கும் வானொலியை நிறுத்துவது போல மனத்திரையில் ஓடிய பாடல் காட்சியையும் நிறுத்திக்கொண்டேன்.

படகு சற்று வேகமாகப் பயணிக்கத் தொடங்கியது. எங்களை அழைத்து வந்த அந்த மீனவ நண்பரும் அவரது உறவினரான அந்த இளைஞனும் எங்களுடன் பேசிக்கொண்டே படகைச் செலுத்திக் கொண்டு வந்தனர். ஒரு நீளமான கம்பு நுனியில் துணி ஒன்று கட்டப்பட்டிருந்தது. அதைக் கொண்டு போய் கடலில் ஒரு இடத்தில் குத்தி நிறுத்தினார். இதுதான் கொடி. இப்படி கடலில் செல்லும் போது நாங்கள் இந்தக் கொடியைக் குத்தி நிறுத்தி விட்டுச் செல்வோம். படகு கடலுக்குள் சென்றிருக்கின்றது என்பதற்கு இது அடையாளமாகும் என்று விளக்கினார்.

தொடர்ந்து பயணித்துக் கொண்டிருந்தோம். திடீரென்று துள்ளிக் குதிக்கும் நூற்றுக்கணக்கான மீன்கள். வெள்ளி நிறத்தில் பளிச் பளிச்சென கண்களைக் கவர்ந்தன. உடனே எல்லோரும் புகைப்படம் எடுப்போம் என முயன்றோம்.. ஆனால் கண்களுக்குத் தெரியும் காட்சி புகைப்படக்கருவிக்குத்

தெரிவதில்லை. இத்தகைய மீன் துள்ளும் எழில் காட்சிகளைக் கண்களால் நேரில் காண்பதுதான் இதனை முழுமையாக ரசிப்பதற்கு உள்ள ஒரே வழி. அதனை அன்று கண்ணாரக்கண்டு மகிழ்ந்தோம்.

படகு மீண்டும் சென்று கொண்டே இருந்தது. தோழி ரேஷலுக்கு டைட்டானிக் படம் நினைவுக்கு வந்துவிட்டது. டைட்டானிக் ஹீரோ போல நின்று புகைப்படம் எடுத்துக் கொண்டார். பெரியவர்கள் கூட குழந்தைகள் ஆகிப்போவது இத்தகைய பயணங்களில் தான். நானும் அதற்கு விதிவிலக்கல்ல.

எங்களை அழைத்து வந்த மீனவ நண்பர் படகு இயந்திரத்தை எப்படி இயக்குவது என எனக்குக் காட்டுவதாகக் கூறி அழைத்தார். அருகில் சென்று அவர் சொல்லிக் கொடுத்த வகையில் பயிற்சி எடுத்துக்கொண்டேன். தோழி ரேஷல் எங்களிருவரையும் பார்த்துக் கிண்டல் செய்யத் தொடங்கிவிட்டார். எம்ஜிஆரும் ஜெயலலிதாவும் போல படகுப்பயணமா... நீங்கள்தான் எம்ஜிஆர் என்று அந்த மீனவ நண்பரைச் சுட்டிக்கட்டி அவரை கேலி செய்யத் தொடங்க, படகில் எல்லோரும் வயிறு குலுங்கச் சிரித்தோம். அந்த மீனவ நண்பரின் முகமெல்லாம் வெட்கம். அந்தக் காட்சியும் சூழலும் நட்பு உணர்ச்சியும் என் மனதிற்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தன.

எங்கள் படகு கடந்து சென்ற பகுதியில் ஏராளமான மீன்பிடி படகுகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. இது, இதுநாள்வரை நான் கண்டிராத ஒரு புது உலகம் போல எனக்குக் காட்சி அளித்தது. நான் கற்பனை செய்து பார்க்காத தமிழகத்தின் ஒரு பகுதி. வானமும் கடலும் நீலமாகக் காட்சியளிக்க, கரையோரத்திலிருந்த எண்ணற்ற படகுகள் வர்ண ஜாலம் காட்டிக்கொண்டு வரிசையாக நின்று கொண்டிருந்தன. படகுகளின் பெயர்கள் ஒவ்வொன்றும் வித்தியாசமாக, ஆனால் அதே வேளை நாம் அறிந்த பெயர்களாக வைக்கப்பட்டிருந்தன.' ஸ்ரீசெந்தில்குமரன், ஸ்ரீ முத்துமாரியம்மன், குமரன், மதுரைவீரன், சாந்தி' என்ற பெயர்களுடன் அண்மைக்கால 'புள்ளிங்கோ' வரை எனப் படகுகள் அடையாளப் பெயர்களுடன் அழகழகாய் காட்சி அளித்தன.

கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்கள் தங்கள் படகுகளுக்கு அழகிய வர்ணம் தீட்டி அதற்குத் தனித்துவமாக ஒரு பெயரும் சூட்டி தங்களது படகுகளை மிகக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்கின்றனர் என்பது புரிந்தது. கடற்கரையோர மீனவர்களின் வாழ்க்கையில் படகுகள் மிக உயர்ந்த முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. கடற்கரையோர வாழ்க்கை என்பது தனித்துவம் மிக்கது. நெய்தல் நிலப் பண்புகளைக் குறிப்பாகத் தமிழகத்தின் கடற்கரையோர வரலாற்று நிகழ்வுகளை ஆராய வேண்டும் என்ற தீவிரம் என் மனதிற்குள் ஆழ வேரூன்றிக் கிளைவிட்டு விரிய ஆரம்பித்தது.

வரலாற்று ஆர்வலர்களால் இன்று அதிகம் பேசப்படாத, அறியப்படாத தமிழகத்தின் நெய்தல் நிலப் பகுதியை அறிந்துகொள்ளவேண்டும் என்ற சிந்தனை மனதிற்குள் ஓடிக் கொண்டிருக்கும் போது திடீரென்று ஒரு பேரலை நாங்கள் சென்ற படகினைத் தாக்கியது. படகின் முன் பகுதியிலிருந்த தம்பி ஜானகிராஜா எழும்பி படகை நனைத்த அலையினால் முழுவதுமாக நனைந்து விட, படகிலிருந்த நாங்களும் அதிர்ந்து போனோம்.

எங்கள் படகை எதிர்த்துக் கொண்டு எழும்பிய பேரலை முன் பகுதியை முழுமையாக நினைத்துவிட, நாங்கள் அதற்குள் ஒருவழியாகச் சுதாரித்துக் கொண்டு படகில் நின்று கொண்டோம். நான் படகில் சுதாரித்துக் கொண்டு நின்றதைக் கவனித்த மீனவ நண்பர், 'நீங்கள் சமாளிக்கும் விதம் சரியான முறைதான்.. எப்படி இப்படித் தான் நிற்கவேண்டும் படகில் என்று தெரியும்' என ஆச்சரியத்துடன் கேட்டார். நான் அவரைப் பார்த்து பதிலேதும் சொல்லாமல் சிரித்துக் கொண்டேன். இளம் வயதில் உயர்கல்வி முடித்ததும் நான் மலேசியாவிலிருந்தபோது ஒரு வாரக் காலம் மாணவர்களுக்கான ராணுவ பயிற்சி மேற்கொண்டிருந்தேன். அப்போது கடலில் பாதுகாப்பாகப் பயணம் செல்லும் சில வழிமுறைகளைக் கற்றிருந்தேன். அது இன்றுவரை மனதில் பதிந்திருப்பதும், ஆபத்தான வேளைகளில் அந்தப் பயிற்சிகள் உடனே நமக்கு கை கொடுப்பதும் இயல்புதானே.

எங்கள் படகு மேலும் சென்று கொண்டே இருந்தது. அலைகளின் அழுத்தம் அதிகரிக்க, அதிகரிக்க, திரும்பிச் செல்வோம் என்று முடிவெடுத்துத் திரும்பத் தொடங்கினோம். அந்த சமயத்தில் பரங்கிப்பேட்டை மீனவ துறைமுகப் பகுதியைத் தாண்டி மேலும் சற்று தூரம் வந்திருந்தோம். தூரத்தில் கலங்கரை விளக்கமும் கண்களில் தென்பட்டது.

கடலூரில் கடற்கரையோரத்தில் ஏராளமான மக்கள் வழிபாட்டில் உள்ள ஆலயங்கள் இருப்பதைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். புத்து மாரியம்மன் கோயில், முத்தாலம்மன் கோயில், பூரணி அம்மன் கோயில், கங்கை அம்மன் கோயில், அங்காளம்மன் கோயில், வெல்லாரி அம்மன் கோயில் என அங்கிருக்கும் ஒவ்வொரு மக்கள் வழிபடும் கோயில்களுக்கும் சென்று பார்த்து அவற்றின் சிறப்புகளைப் பதிவு செய்ய வேண்டும் என்ற பேராவல் எனக்கு இருந்தது. ஆனால் அதற்கு ஒரு நாள் போதாது என்பது தெள்ளத் தெளிவு.தூரத்திலிருந்து தெரிந்த சில கோயில்களின் கோபுரப் பகுதிகளை மட்டும் பார்த்துக்கொண்டேன்.

படகுப் பயணத்தில் என்னை மிகவும் கவர்ந்த ஒன்று அலையாத்தி காடுகள் தான். குவியல் குவியலாகக் குட்டி தீவுகளாக இந்த அலையாத்தி காடுகள் அமைந்திருக்கின்றன. 'பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கின்றது' என்று

நான் சொன்னவுடன், படகை அலையாத்திக் காடுகளுக்கு அருகில் கொண்டு சென்று நான் மரங்களைத் தொட்டு ரசித்து மகிழ ஒரு வாய்ப்பினையும் வழங்கினார் அந்த மீனவ நண்பர். படகினை அப்படியே நிறுத்திவிட்டு அங்கேயே படகிலிருந்தபடியே அலையாத்திக் காடுகளை ரசித்துக் கொண்டிருக்க வேண்டும்போல் மனதில் கொள்ளை ஆசை எனக்கு. ஆனாலும் நேரம் கடந்து கொண்டே இருந்ததாலும், அன்றே நாங்கள் சென்னைக்குத் திரும்ப வேண்டும் என்ற திட்டம் இருந்ததாலும், படகுப் பயணத்தை முடித்துக் கொள்ள வேண்டும் என்ற அவசரமும் எனக்கு இருந்தது.

இத்தகைய இயற்கை வளமும் எழிலும் நிறைந்த கடலூர் பகுதியை ஒரு சுற்றுலாத் தலமாக உருவாக்காமல் வைத்திருக்கிறார்களே, என்று எனக்கு வியப்பு தான் தோன்றியது. கடலூர் போன்ற வளமிக்க ஒரு ஊரும் உழைக்கும் மக்களும் அழகிய இயற்கையும் ஐரோப்பாவிலும் அல்லது ஏனைய ஆசிய நாடுகளிலும் அமைந்திருந்தால் அதனை இந்நேரத்திற்கு மிகப்பெரிய சுற்றுலாத்தலமாக மாற்றி இருப்பார்கள். அதனால் அவ்வூர் மக்களுக்கும் மிகப்பெரிய பொருளாதார மேன்மை கிடைத்திருக்கும். ஆனால் இங்கு நான் கண்டதோ எதிர்மாறான ஒரு நிலைதான். இது துரதிர்ஷ்டமே!

எங்கள் படகுப் பயணத்தை முடித்துக்கொண்டு எங்களை அழைத்துச் சென்ற மீனவர் நண்பருக்கு நன்றி கூறிக்கொண்டு, அவரது தொடர்பு எண்ணையும் எடுத்துக்கொண்டு விடைபெற்றுத் திரும்பினோம். கடலூரில் மேலும் சில நண்பர்களைச் சந்தித்து நகர்ப் பகுதியிலும் பயணம் செய்துவிட்டு தம்பி ஜானகிராஜா அளித்த தேநீர் விருந்தையும் சுவைத்துவிட்டு இரவு அங்கிருந்து புறப்பட்டோம். ஒருநாள் பயணம் தான் என்றாலும் கூட கடலூரில் நான் சென்ற படகுப் பயணம், வித்தியாசமான அனுபவமாக, மகிழ்ச்சியளித்த பயணங்களில் ஒன்றாகவே அமைந்தது.

கடலூரில் அறிந்துகொள்ள இன்னும் ஏராளம் இருக்கின்றது. நிச்சயம் அடுத்த பயணத்தில் படகுப் பயணத்தோடு மக்களோடு மக்களாக அங்கேயே ஓரிரு நாள் தங்கி இருந்து அவர்கள் உணவையும் சுவைத்து, மக்களின் வழிபாட்டு வாழ்வியல் கூறுகளையும், மீனவ மக்களின் தொழில் வாழ்க்கையும் பதிவு செய்ய வேண்டும் என்ற பேரார்வம் எனக்கு இருக்கின்றது.

இந்த ஊர் சுற்றிப் புராணம் மீண்டும் தொடரும்.. மற்றுமொரு இடத்திலிருந்து..!





"சுயமரியாதை அற்ற எவனும் உயர்தரமான ஊர்சுற்றி ஆக முடியாது. உண்மையான ஊர்சுற்றி முகஸ்துதி விரும்பமாட்டான். உலகத்தில் எவரையுமே தன்னைவிடத் தாழ்ந்தவர்களாகவும் எண்ணா மனோநிலையை ஊர்சுற்றி பெற்றிருக்க வேண்டும். சமநிலை பார்வையும் நெருக்கமான நட்புறவும் அவன் கொண்டிருக்கவேண்டும்.

- ஊர்சுற்றிப் புராணம்; ராகுல் சாங்கிருத்யாயன்

தொடர்பு: முனைவர் க. சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 26. தஞ்சை குடமுழுக்கு கவிதை

— திருத்தம் பொன்.சரவணன்

அஞ்செழுத் துடையாய் ஆலமர் செல்வ
நஞ்சினை உண்டோய் நமச்சி வாய
நன்செய் யுடன்நல் அறிஞர் சூழ்ந்திடும்
தஞ்சை சிவமே போற்றி

உலகம் காத்திட உண்டாய் நஞ்சினை
அழலது உன்றன் மிடற்றினில் கறையாய்
கறையதைக் கழுவத் துடித்திடும் கரங்கள்
உறையெனப் பொழிந்திடும் பாலே.

கசந்திடும் உணவை யாவரும் உண்கிலர்
விசமென அறிந்தும் விருப்புடன் உண்டோய்
விசத்தின் கசப்பினை நீக்கிட விழைந்தோம்
இசைவுடன் ஏற்பாய் தேனே.

நீரு லாவிய நீள்சடை முடியினை
காரு லாவிய கறைபடு மிடற்றினை
ஏரு லாவிய தஞ்சைப் பெரியோய்
சோரென வார்த்தோம் நீரே.

பொதுநலம் பேணுமார்க் காமம் தடையென
மதுகையின் நீக்கி மோனத் திருந்தோய்
காமன் கணைவிட கடிந்துடன் எரித்தோய்
பாதம் சூட்டுதும் மலரே.

தொடர்பு: திருத்தம் பொன். சரவணன் (vaendhan@gmail.com)
http://thiruththam.blogspot.com/

## 27. தாமிரபரணி

– ருத்ரா இ.பரமசிவன்

பளிங்கு நீரை
எங்கள் உயிராக்கி பயிராக்கி
மண்ணின் பரிணாமத்தை
மலர்த்திக்காட்டி ஓடுகின்ற
பொன்னின் பொருநையே
வாழி நீ வாழி!

கல்லிடைக்குறிச்சி
கள்ளிக்காடாயிருக்கும்
நீ வரவில்லை என்றால்!

அம்பாசமுத்திரம்
வம்பாய் வறண்டு தான் கிடக்கும்
நீ வரவில்லை என்றால்!

சேரன் மாதேவி
சோறு கண்டிருப்பாளா
நீ வரவில்லை என்றால்!

நெல்லைச்சீமை
இல்லை சீமை ஆயிருக்கும்
நீ வரவில்லை என்றால்!

சிந்து பூந்துறையும்
சீரிழந்து நிற்கும்
நீ வரவில்லை என்றால்!

திருவைகுண்டம்
வெறும் வைகுண்டம் ஆகியிருக்கும்
நீ வரவில்லை என்றால்!

ஆறுமுகன் ஏரி
மாறு முகம் கொண்டு பாழ்
பட்டிருக்கும்
நீ வரவில்லை என்றால்!

காயல் பட்டினமும்
காய்ந்தே கிடந்திருக்கும்
நீ வரவில்லை என்றால்!

வங்காள விரிகுடாவும்
அலை விரியாக் கடலாகும்.
நீ வரவில்லை என்றால்!

"திருச்சீர் அலைவாய்" இல்லாத
திருமுருகாற்றுப்படைதான்
நமக்கும் கிடைத்திருக்கும்
நீ வரவில்லை என்றால்!

செலவாய் செலவாய் எங்களுக்கு
இழப்புகள் எத்தனை வந்தாலும்
வருவாய் வருவாய் எங்களுக்கு
வருவாய் அருள்வாய் பல கோடி!

எங்கள் உயிரினும் மேலான
பொருநையே
ஊழிகள் பலவாக ஓடிவிடினும்
வாழி நீ !வாழி நீ!!
எங்கள்
நீடு வளர் பொருநையே !
வாழி நீ !வாழி நீ!!

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)

# 28. தேவை அன்பெனும் மருந்து

— கவிஞர் அமீர்

மனிதா
உனை ஒன்று கேட்பேன்
மறைக்காமல் சொல்

"ஒரு துணையில்லா தூண் இங்கு
அளவில்லா சோகத்தில்
கருணையில்லா மனிதர்களால்
வறுமை எனும் ரோகத்தில்..."

ஏன் என்று சொல்?

"கொண்டு வந்ததென்ன
கொண்டு செல்வதென்ன
ஒன்றுமில்லை என்றானபின்
இன்னுமெதற்கு கொள்கைகள்"

என்றைக்கு இதற்கு
கொள்ளி வைப்பாய்?

"வற்றிப்போய் கிடக்கும் இந்த
முற்றிய மூதாதை
இந்த தொற்று நோய்க்கு மட்டுமிங்கு
வறுமை வந்ததில்லை"

ஏன் இதனை மட்டும் வளர்க்கிறாய்?

"ஈரமும் இறக்கமும்
கழன்று எங்கு போனது?

இந்த கொடூரம்
கொரோனாவைக்காட்டிலும்
கொடியது"

இன்னும் இதனை
நான் எப்படிச் சொல்ல?

"பசி
பட்டினி போக்க
உன்னிடம் இருந்தால்தானே
நீ கொடுப்பாய்
பரவாயில்லை விடு"

நலமா சுகமா எனும்
வார்த்தை உனக்கு உச்சரிக்கத்
தெரியவில்லையா?

அன்பும்
அணைப்பும் மட்டுமே தேடுகிறது
இது போன்ற ஜனம்...
கிடைப்பதென்னவோ
உதாசீனம்!

தனித்தோர்க்குத் தேவையானது
அன்பெனும் மருந்து...
அதனை கிள்ளிக்கொடுத்தாவது
திருந்து!

தொடர்பு: கவிஞர் அமீர் (ameerjann@gmail.com)

# 29. பயத்துடன் வாழப் பணித்தாயோ

— கவியாழி. கண்ணதாசன்

மகிழ்ச்சியாய் உதிக்கும் சூரியனே
மறந்ததை இழந்ததை அறிவாயோ
புகழ்ச்சியின் உச்சத்தில் உன்னை-
இன்றும்
பூமியில் தினமும் வணங்குகிறோம்

இயற்கையை மனிதன் அழித்ததனால்
இளமையில் உழைக்கத் தவறியதால்
உறக்கத்தை நீயும் கெடுத்தாயோ-
மக்களின்
உழைப்பையும் மறக்கத்
துணிந்தாயோ

மக்களில் பலபேர் மகிழ்ச்சிக்கு
மானிடம் மறந்ததை அறிந்தாயோ
மதத்தால் இன்றும் பிரிவினையை-
அன்பை
மனிதனும் மறந்ததை உணர்ந்தாயோ

பிழைக்கவும் வழியே தெரியாமல்
பிணமாய் மக்கள் உயிர்வாழும்
பணத்துக்கும் மதிப்பைக்
கொடுக்காமல்-
உலகே
பயத்துடன் வாழப் பணித்தாயோ

தலைநிமிர்ந்தே தினமும் வணங்கி
தலைவனாய் கும்பிட்டு மகிழ்ந்தோம்
நிலையில்லா வாழ்க்கையினை நீ-
இன்று
நெடும் சுமையாய் எம்மை
நினைத்தாயோ

தினம் பலபேர் மடிவதால்
தீங்கு செய்யும் மக்களுக்குப்
பணமும் பொருளும் பயனின்றி-
மக்களின்
பாசம் நேசம் பகிர்ந்தாயோ

அழிவுப் பாதையை அறிந்தாயோ
அழிக்கும் வேலையும் இதுவன்றோ
இழிவாய் தெரியும் இதனை நீ
இனியும்
இறைவா மீண்டும் அழிவைத்
தொடராதே

பூமியின் சுழற்சியைப் புரிய வைக்கப்
புத்துயிர் மக்களைத் தெளிய வைக்க
நித்தமும் நிம்மதி இழக்கச் செய்து-
மனிதன்
சித்தமும் கலங்கிடச் செய்தாயோ

தொடர்பு: கவியாழி. கண்ணதாசன் (https://www.facebook.com/kannadasanr)

## 30. மாயக்கைகள் யாதடா ?

— தமிழ்மைந்தன் சரவணன்

ஒடி ஒடி உழைச்ச ஜனம்
ஓஞ்சுபோயி கெடக்குதையா!
அந்த உழைப்பின் உன்னதங்களின்
வயிறு இப்ப காஞ்சு கெடக்குதையா

உல்லாசமாய் சுத்தி வந்த
செல்வ சீமான்களின் மனம்
ஓரிடத்தில் அடங்க மறுத்து
புழுங்கி தவிக்குதய்யா !

மதம் பார்த்து ஜாதி பார்த்து
வருவதில்லை வியாதிகள்
தீர்ந்திடுமா ஒரு சிலரின்
மனவியாதிகள்?

ஊர் அடங்கு சட்டம் என்று அறிவிக்கின்றார்
ஒட்டுமொத்த உலகடங்கி போனதடா!

கலகங்கள் இல்லாத உலகம் கேட்டோம்
அமைதியான பூமியைக் கேட்டோம்
ஏகன் இறைவனிடம் கேட்டது ஏகாந்த அமைதி
மயான அமைதியல்லவா எங்கும் மண்டிக்கிடக்கிறது ?

ஓயாமல் சுழல்கின்ற பூமியின் இயக்கத்தை
நிறுத்த துடிக்கும் மாயக்கைகள் யாதடா ?
எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருளே
நேரில் தோன்றி
பதிலை நீயும் எமக்கு கூறடா !

தொடர்பு: தமிழ்மைந்தன் சரவணன் (saravananmetha@gmail.com)

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

## —— செய்திகள் தொகுப்பு

**தமிழ் மரபு அறக்கட்டளையின் நிகழ்வுகள் வெளியீடுகள் மற்றும் செய்திகள்**

http://thf-news.tamilheritage.org/

### உயராய்வு உரைத்தொடர் நிகழ்ச்சி

காயிதே மில்லத் சர்வதேச ஊடகக் கல்வி அகாடெமி இணைந்த ஏற்பாட்டில்
மார்ச் 15, 2020

1. **கொரிய மொழிக்கும் தமிழ் மொழிக்கும் உள்ள தொடர்புகள், அவை தொடர்பான ஆய்வுகள்** - பேரா.முனைவர்.நா.கண்ணன், மலேசியா

2. **பண்டைய தமிழகத்தின் வழிபாட்டுக் கூறுகளும் அவை தொடர்பான ஆய்வுகளும்** - முனைவர்.கோ.சசிகலா

### நூல் வெளியீடு - திறனாய்வு நிகழ்ச்சி

பிப்ரவரி 3, 2020
திருவள்ளுவர்யார்: கட்டுக்கதைகளைக் கட்டுடைக்கும் திருவள்ளுவர்

### சந்திப்போம்… வாசிப்போம்.. சிந்திப்போம்: மரபுக்கூடல்

பிப்ரவரி 29, 2020
திருவள்ளுவர்யார்: கட்டுக்கதைகளைக் கட்டுடைக்கும் திருவள்ளுவர்

### மண்ணின் குரல் காணொளிகள்

அரிட்டாபட்டி கல்வெட்டுகள்
https://youtu.be/GwDs_hVHYM8
ஐவர் மலை வட்டெழுத்து கல்வெட்டுகள்
https://youtu.be/j2ppwjx0gkQ
குடிமங்கலத்தின் நாயக்கர் காலத்திய நிலக்கொடை கல்வெட்டு
https://youtu.be/cjZEjJa84aI
கடத்தூர் கோவிலுக்குத் தேவரடியார் கொடையாக வழங்கிய கல்தூண்கள்
https://youtu.be/6sWyVim5Qpo
அரிட்டாபட்டி லகுளீசர் குடைவரைக்கோவில்
https://youtu.be/zEUnq9MaCWg

## வடசென்னை - நம்ம மெட்ராஸ்! காணொளிகள்

எம்டன் கப்பல் போட்ட குண்டு

https://youtu.be/Yk4uGKdI5cM

ஒபிலிஸ்க் மறக்கப்பட்ட சின்னம்

https://youtu.be/JheojoT83ZU

மெட்ராசில் பார்சிகள்

https://youtu.be/Mp979NG6RwQ

மெட்ராஸ் நெருப்புக் கோயில்

https://youtu.be/uFaYx8QxCuA

மெட்ராஸ் யுனானி மருத்துவ ஆய்வு மையம்

https://youtu.be/oIblkSpjTD4

பூந்தமல்லி ராஜகோபால் பள்ளி

https://youtu.be/Uv_DxuzICzo

## அடைபட்டோரின் அறிவுத்தேடல் - இணையவழி உரைத்தொடர்

## இணையவழி உரைத்தொடர் யூடியூப் காணொளிகளாக .. ..

https://www.youtube.com/playlist?list=PLdag7q0k9BNlCbQtsYkWlyDWEuzCAeM-w

| எண். | சொற்பொழிவாளர் - உரையின் தலைப்பு |
|---|---|
| 1 | முனைவர்.நா.கண்ணன்<br>கொரியாவில் தமிழாய்வு அனுபவம் |
| 2 | முனைவர்.ஜெயசக்திவேல்<br>ஹாம் ரேடியோ அறிமுகம் |
| 3 | முனைவர்.இனிய நேரு<br>இணையத்தில் தமிழ் |
| 4 | முனைவர். க.சுபாஷிணி<br>பயணத்தில் சந்தித்த சுவாரசியமான அனுபவங்கள் |
| 5 | எழுத்தாளர்.அன்பு ஜெயா<br>சீர்காழி சிறப்புகள் |
| 6 | எழுத்தாளர். மலர்விழி பாஸ்கரன்<br>தென்கிழக்காசியப் பயணங்கள் |
| 7 | முனைவர். ராஜேஸ்வரி<br>இளைய தலைமுறையினருக்கான எம்ஜிஆர் |
| 8 | முனைவர்.சாந்தினிபீ<br>கல்வெட்டுகளில் தேவதாசி நூல் |
| 9 | எழுத்தாளர்.கௌதம சன்னா<br>குறத்தியாறு நூல் உருவான கதை |
| 10 | மருத்துவர். ஷாலினி<br>ஆண் எடுக்கவேண்டிய அவதாரம் |

11 திரு. விஜய்

தமிழிசை

12 முனைவர்.குறிஞ்சிவேந்தன்

உலகப்போர்களை நினைவூட்டும் நிகழ்காலம்

13 முனைவர். தா.காட்வின்

ஆரோக்கியமான உடல் ஆரோக்கியமான மனம்

14 திரு. பாலமுருகன்

திருவண்ணாமலை வரலாற்றுச் சின்னங்கள்

15 திரு. பீர் முகம்மது

டிஜிட்டல் யுகத்தில் தமிழ் ஊடகவியல்

16 எழுத்தாளர். மதுமிதா

தமிழ்நாடு அரசு பெண்கள் நூலகம் இராஜபாளையம்

17 திரு. செழியன்

இயற்கை

18 திரு. சாம் விஜய்

மேற்கிந்தியத் தீவுகளில் தமிழர்கள்

19 முனைவர். சிவராமகிருஷ்ணன்

கடலூர் மாவட்ட தொல்லியல் தடையங்கள்

20 திரு. சிவா மயிலாடுதுறை

கலைஞரின் பன்முகத்தன்மைகள்

21 திரு. மணி மணிவண்ணன்

சாளுவன்குப்பம் தொல்லியல் எச்சங்கள்

22 திரு. ஆழி செந்தில்நாதன்

அண்ணாவின் தமிழ்நாடு

23 திருமதி. சுபா அபர்ணா சசீந்திரன்

பப்புவா நியூ கினியில் தமிழ் மரபு

24 முனைவர். க. சுபாஷிணி

மறைக்கப்படும் வரலாறு; அழிக்கப்படும் சின்னங்கள்

25 எழுத்தாளர் இரா. நாறும்பூநாதன்

கழுகுமலையும் வெட்டுவான் கோவிலும்

26 திரு. சண்முகநாதன்

தேவரடியாரின் சதிர், முத்துக்கண்ணம்மாளின் கலையும் வாழ்க்கையும் ஆவணப்படம்

27 முனைவர். சௌந்தரமகாதேவன்

ஆதிச்சநல்லூர் அகழாய்வுகள்

28 திரு. ஆர்.பாலகிருஷ்ணன். இ.ஆ.ப.

சிந்து வெளி நாகரீகம் புதிய ஆய்வுகள் காட்டும் தமிழர் நாகரிகத்தின் தொன்மை

29 கடலோடி நரசய்யா

காலனி ஆட்சியில் தமிழ்நாட்டில் கலாச்சார நிலை

30 முனைவர். விஜய் அசோகன்

தாய்மொழிக் கல்வியும் தமிழகக் கல்வியும்




தமிழர் வரலாற்றுக்கு ஓர் அரண்




Electronic Preservation of Tamil Heritage Materials
e-BOOK Series

an international NGO initiative to digitize
old Tamil Books and Palm Leaf Manuscripts
visit: http://www.tamilheritage.org/

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி
மேலும் அறிய: http://www.tamilheritage.org/





# மின்தமிழ்மேடை



"இணையம்வழியே தொடரும் நம் வரலாற்றுத் தேடலுக்கான பயணம்"




**தமிழ் மரபு அறக்கட்டளை - பன்னாட்டு அமைப்பு**

***http://www.tamilheritage.org/***

**வெளியிடும் காலாண்டு மின்னிதழ்**

*மின்தமிழ்மேடை - காட்சி 21*

*ஏப்ரல் – 2020*

***21***